# பிரபஞ்சன் - சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு

அழகப்பா பல்கலைக்கழகத்தில் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**இரா.கீதா**

(பதிவு எண்: 0092)





நெறியாளர்

முனைவர் **பா.சுபாஷ்போஸ்,**

உதவிப் பேராசிரியர்,
அரசு கலைக்கல்லூரி,
மேலூர் - மதுரை.





தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறுமதிப்பீட்டில் "A" தகுதி பெற்றது)

**காரைக்குடி- 630 003**

**பிப்ரவரி- 2013**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் பா.சுபாஷ்போஸ்,**
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி,
மேலூர் – 625 106
மதுரை.

**'பிரபஞ்சன் - சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு'** என்னும் தலைப்பில் **திருமதி.இரா.கீதா** அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்தில் பகுதிநேர முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காகத் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்ஆய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

இடம் : மேலூர்

நாள் : 12.02.2013

நெறியாளர்

(முனைவர் பா.சுபாஷ்போஸ்)

Dr. P. SUBAS BOSE, M.A.,M.Phil.,Ph.D.,
ASSISTANT PROFESSOR
DEPARTMENT OF TAMIL
GOVERNMENT ARTS COLLEGE
(M.K. UNIVERSITY)
MELUR-625 106, MADURAI DISTRICT

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

## ஆய்வாளர் உறுதிமொழி

**இரா.கீதா,**
பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்,
பதிவு எண்:0092,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

**'பிரபஞ்சன் - சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு'** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர்பட்டத்திற்காகச் (பி.எச்.டி) செய்யப்பட்ட இவ் ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேட்டினை அளிக்கப்படவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

12/2/2013

இடம் : மேலூர்
நாள் : 12.02.2013

ஆய்வாளர்
(இரா.கீதா)

நெறியாளர்
உறுதிக் கையொப்பம்
முனைவர் பா.சுபாஷ்போஸ்,

Dr. P. SUBAS BOSE, M.A.,M.Phil.,Ph.D.,
ASSISTANT PROFESSOR
DEPARTMENT OF TAMIL
GOVERNMENT ARTS COLLEGE
(M.K. UNIVERSITY)
MELUR-625 106, MADURAI DISTRICT

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| தொ.ஆ. | – | தொகுப்பு ஆசிரியர் |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| எ.மே. | – | எழுத்தாண்ட மேற்கோள் |
| மேலது | – | மேற்குறிப்பிட்ட நூல் |
| குறள் | – | திருக்குறள் |
| குறுந்.பா. | – | குறுந்தொகைப் பாடல் |
| புறம்.பா. | – | புறநானூற்றுப்பாடல் |
| தொல்.நூ. | – | தொல்காப்பிய நூற்பா |
| நன்.நூ. | – | நன்னூல் நூற்பா |
| நற்.பா. | – | நற்றிணைப் பாடல் |

# நன்றியுரை

***'பிரபஞ்சன் சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு'*** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் மற்றும் தமிழ்த்துறைக்கும் என் உளம் கனிந்த நன்றியினை நவில்கிறேன்.

"விரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்து கூறல்"

என்னும் இலக்கணத்திற்கு ஏற்ப சிறந்ததொரு தலைப்பினை வழங்கி, ஆய்வியல் நெறிமுறைகளையும், ஆய்வில் ஏற்பட்ட ஐயப்பாடுகள் அனைத்தையும் நீக்கி ஆய்வேடு சிறப்பாக அமைய ஊக்கப்படுத்திய நெறியாளர் முனைவர் பா.சுபாஷ்போஸ் அவர்கட்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வு சிறப்பாக அமையப் பல்வேறு ஆலோசனைகளை வழங்கி உதவிய தமிழ்த்துறைத் தலைவர் பேரா.முனைவர் மு.பாண்டி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கும் ஊக்கமும் ஆக்கமும் தந்த எம் கல்லூரி ஆட்சிக்குழு தலைவர் திரு.இராம.பெரி.பெரியகருப்பன், எம்.இ., அவர்களுக்கும், செயலர் திரு.இராம.பெரி.வீரப்பன், பி.காம்., அவர்களுக்கும் என் பணிவான நன்றிகள்.

இவ்ஆய்விற்குத் தேவையான அனைத்து நூல்களையும் வழங்கி உதவிய எம் இராமசாமி தமிழ்க்கல்லூரி நூலகத்திற்கும் நூலகர் திருமதி.மு.குமாரி அம்மா மற்றும் எஸ்.எஸ்.கோட்டை கிளை நூலகர் செபஸ்தி ஆனந்தன் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு அகரத்தை அறிவித்து கல்விக்கண் வழங்கிய அன்பிற்கினிய பெற்றோர்களுக்கும், ஆய்வுக்காலம் தொட்டுப் பல வழிகளிலும் உறுதுணையாக இருந்து எனது வெற்றிக்கு வழிகாட்டி, என் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்ட எனது கணவர் பா.இரமேஷ் அவர்களுக்கும், என் பாசமிகு மகன் இர.ஆரியன் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என்னை ஆய்வுலகிற்கு ஆற்றுப்படுத்தி என் நலனில் மிகுந்த ஆர்வமுடைய முனைவர் ந.வள்ளி அம்மா, முனைவர் சு.புவனேஸ்வரி, முனைவர் சே.கணேசன், முனைவர் மு.செல்வமீனாள், மாரியப்பன், கா.ஈஸ்வரி மற்றும் எம் இராமசாமி தமிழ்க் கல்லூரியில் பணியாற்றுபவர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினை நன்முறையில் கணிப்பொறி தட்டச்சு செய்துதந்த **அருண் கம்ப்யூட்டர் திருமதி.சாந்தி பாண்டியன்** அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(இரா.கீதா)**

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாறு தொன்மையானது. இக்கால இலக்கிய வகைமைகளில் கவிதை, புதினம், சிறுகதை, நாடகம் முதலியன சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. வானொலி, தொலைக்காட்சி, இணையதளம் முதலியன நவீன இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந்துணை செய்கின்றன. எனினும் இவ்வளர்ச்சியில் சிறுகதை இலக்கியம் வளர்ச்சி பெற்றுத் தனக்கென்று ஒரு தனியிடம் பெற்று வருவது குறிப்பிடத்தக்து. இந்த நூற்றாண்டில் மிகப் பரவலாக ஓர் இலக்கிய வகையாக வளர்ந்திருப்பது சிறுகதையாகும் என்னும் கூற்று உய்த்துணரத்தக்கது. சிறுகதை மனித வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் இலக்கியமாகும். எனவே இவ்விலக்கியத்தை வாழ்வியல் விளக்க இலக்கியம் என்று கூறுவது பொருத்தமானதாகும்.

பல்வேறு வகைப்பட்ட படைப்பிலக்கியங்களுள் சிறுகதையும் ஒன்று. மனித வாழ்வின் பல்வேறு கூறுகளையும் ஊடுருவிப் பார்க்கும் திறன் படைத்தவர்கள் சிறுகதை உலகில் வெற்றி பெறுகின்றனர். மேனாட்டாரின் வருகையால் வந்தமைந்த சிறுகதை இலக்கியம் படைப்பிலக்கிய வகைகளில் மிகச் சிறந்தவையாக அமைகின்றது. மனித வாழ்வின் பல்வேறு வாழ்வியல் சிக்கல்களை இலக்கியப் படைப்பாளிகள் படைக்கின்றனர். அங்ஙனம் அமையும் இலக்கியங்கள் பல்வேறு வகைப்படும். அவை ஒவ்வொன்றிற்கும் ஒரு தனித்தன்மை உண்டு. இத்தனித் தன்மைகளைத் தன்வயமாக்கிக் கொண்டவர்கள் படைப்புத் திறனில் தனி முத்திரை படைக்கின்றனர். சிறுகதையைப் படைப்பது எளிமையான பணியன்று. சமூகப் பொறுப்புணர்வுடன் இலக்கியத் தரமிக்க, கலைத்திறன்மிக்க சிறுகதையைப் படைப்பது கடினப் பணியாகும். வ.வே.சு. ஐயர் தொடங்கி இன்றுவரை பல சிறுகதை ஆசிரியர்கள் தோன்றி சிறுகதை என்னும் இலக்கிய வகையை வளர்த்து வந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

அந்த வரிசையில் பிரபஞ்சன் சிறுகதைகள் கருத்தாழமும், சமூகச் சிந்தனைகளையும், மனித மனச் சலனங்களையும் மிக நுட்பமாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. நாட்டை அழுத்தியுள்ள நிகழ்காலப் பிரச்சனைகளை அலசி ஆராய்ந்து தன் மனத்தில் பட்டதை 'வெட்டொன்று துண்டிரெண்டென' உரைக்கின்ற எழுத்தாளர் பிரபஞ்சனின் உரத்த சிந்தனைகள் சிறுகதையில் உள்ளடக்கமாக உள்ளன. இவர் எழுதியுள்ள சிறுகதைகள் சமூக வாழ்வியல் நெறிகள், பெண்ணின் வாழ்வியல் சிக்கல்களை எடுத்துக்கூறி; புதியதோர் வாழ்க்கையைப் படைப்பதாகும். எனவே இவற்றை வெளிக்கொணரும் வகையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வுத் தலைப்பு**

பன்முகங்கள் அடங்கிய சமுதாயத்தில் பல்வேறு சமூகச் சிந்தனைகள் நாள்தோறும் முளைத்துக் கொண்டேயிருக்கின்றன. சமுதாய அறிவும், சமுதாயம் பற்றிய விழிப்புணர்வையும் ஓர் எழுத்தாளன் பெற்றிருப்பது இன்றியமையாததே. அந்த வகையில் பிரபஞ்சனின் சிறுகதைகள், சமுதாய நியாயங்களை எடுத்துரைப்பனவாகவும், படிப்போரின் பண்பை உயர்த்துவனவாகவும், மனித நேயப் பண்பை வளர்ப்பனவாகவும், பெண்ணின் மேம்பாட்டை உணர்த்துவனவாகவும் அமைந்திருக்கின்றன. இவ்வகையான கருத்தினை அடிப்படையாகக் கொண்டு "**பிரபஞ்சன் - சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு**" என்னும் ஆய்வுத் தலைப்பு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வு நோக்கம்**

இன்றைய காலகட்டத்தில் சமுதாய வாழ்வில் பல்வேறு சிக்கல்கள் மற்றும் சமூகச் சீர்கேடுகள் காணப்படுகின்றன. பெண்களுக்கு ஏற்படும்

சிக்கல்கள் ஒவ்வொரு தனிமனிதனை மட்டுமல்லாது ஒட்டுமொத்த சமுதாயத்தையும் பாதிக்கின்றன என்பதைச் சிறுகதைகள் எடுத்தியம்புகின்றன. அவற்றை மக்களின் வாழ்வோடு எடுத்துக்கூறி ஆய்வு செய்தல் இலக்கிய உலகிற்குப் பயனுள்ளதாகும். எனவே பிரபஞ்சன் சிறுகதைகளில் இடம் பெற்றுள்ள கருத்துக்களையும் அமைப்பினையும் சமூகப் பண்பாட்டினையும் மக்கள் வாழ்வியலையும் ஆய்ந்து மதிப்பிடுவது இவ்வாய்வின் நோக்கமாக அமைகின்றது.

**ஆய்வு ஆதாரம்**

பிரபஞ்சனின் சிறுகதைகளைத் தொகுத்து கவிதா பதிப்பகம் இரண்டு தொகுதிகளாக டிசம்பர் 2004 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது. நூலின் முதல் தொகுதியில் இடம்பெற்றுள்ள தொன்னூறு (90) சிறுகதைகள் மட்டும் முதன்மை ஆதாரங்களாகவும், ஆய்வின் எல்லைகளாகவும் அமைகின்றன. சிறுகதைகள் குறித்த திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் முதலியன துணைமைச் சான்றுகளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

பிரபஞ்சன் படைத்த சிறுகதைத் தொகுப்பில் அமைந்த உள்ளீடுகளைப் பல்வேறுபட்ட பண்புகளைத் தெளிவுபடுத்துவதாக அமைவதால் விளக்க ஆய்வுமுறையும் (Descriptive approach), சிறுகதைகளில் அமைந்த வாழ்வியல் சிந்தனைகளைப் பகுத்தும், தொகுத்தும் ஆராயுமுகமாகப் பகுப்பாய்வு முறையும் (Classification approach), சமூக முரண்பாடுகள், வளர்ச்சிகளை விளக்க சமூகவியல் ஆய்வுமுறையும் (Sociological approach) ஆய்வு அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டு ஆய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது.

## கருதுகோள்

ஒவ்வொரு படைப்பாளருக்கும் சமூகநோக்கு, சமூகம் பற்றிய புரிதல், பெண்கள் நிலைப்பாடுகள், மொழிநடை, வெளிப்பாட்டு உத்திகளில் தனித்தன்மைகள் இருக்கின்றன. தமிழ் மற்றும் பிரஞ்சுக் கலாச்சாரச் சூழலில் புதுவையில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து வரும் எழுத்தாளர் பிரபஞ்சன் அவர்களிடம் சமூகநோக்கு, வெளிப்பாட்டுத் தன்மை, மொழிநடை, பெண்கள் பற்றிய சிந்தனைகளில் தனித்துவங்கள் இருக்க வேண்டும் என்பது இவ்வாய்வின் கருதுகோள்களாக முன்வைக்கப்படுகிறது.

## ஆய்வேட்டின் அமைப்புமுறை

இவ்ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

இயல் 1. பிரபஞ்சனும் படைப்பிலக்கியமும்

இயல் 2. வாழ்வியல் நெறிகள்

இயல் 3. பெண்களின் வாழ்வியல் சிக்கல்கள்

இயல் 4. உத்திகள்

**முன்னுரையில்** ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, கருதுகோள், ஆய்வுச் சான்றாதாரங்கள், இயல் பகுப்பு, ஒவ்வொரு இயலிலும் விளக்கவிருக்கின்ற கருத்துக்கள் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**பிரபஞ்சனும் படைப்பிலக்கியமும்** என்னும் முதலியலில் இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி, சிறுகதை உலகில் நிலைத்த புகழ் பெற்றவர்களின் படைப்புக்கள், பிரபஞ்சனின் வரவு, பள்ளி மற்றும் கல்லூரிக் கல்வி, பதவிகள் பிரபஞ்சன் பெயர் உருவான விதம், திருமணம், எழுத்துப்பணி,

சமூகப்பற்று, படைப்புகள், பரிசுகள், விருதுகள் ஆகியவற்றைப் பற்றி விரிவான முறையில் எடுத்துரைக்கப்படுகின்றன.

**வாழ்வியல் நெறிகள்** என்னும் இரண்டாமியலில் மனிதநேயம், அன்பு, இல்லறம், அறம், தியாகம், நாட்டுப்பற்று, முதுமை, தீண்டாமைக் கல்வி, அரசியல் முதலான நெறிகளைப் படைத்துள்ளமையும் இவற்றால் மனித வாழ்வில் உருவாகும் நடத்தைப் பண்புகள் சிறுகதைகளோடு இயைபுபடுத்தியும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

**பெண்களின் வாழ்வியல் சிக்கல்கள்** என்னும் மூன்றாமியலில் பெண்கள் பிறப்பு முதல் இறப்பு வரை தங்களது வாழ்வில் அனுபவிக்கும், வேதனைகள் ஏராளம். பெரும்பாலான பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்கள் நிறைந்ததாக அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. பெண்களின் பொதுவான வாழ்வியல் சிக்கல்களை எடுத்துக்கூறி பிரபஞ்சன் சிறுகதைகளில் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களாகக் காணப்படும் இளவயதுத் திருமணச் சிக்கல்கள், காதல் சிக்கல்கள், குடும்பச் சிக்கல்கள், வாழ்க்கையின் அவலச் சிக்கல்கள், தன்னம்பிக்கையில் ஏற்படும் சிக்கல்கள் பொதிந்து காணப்படுகின்றன என்பதை எடுத்துக்காட்டி, பெண்கள் சோதனைகளை இயல்பாக எடுத்துக் கொள்கின்ற விதம், பெண்களின் மனித நேயம், பெண்களின் உறுதிப்போக்கு முதலியவற்றையும் வெளிக்கொணர்ந்து இவ்வியலில் விளக்கமாக ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**உத்திகள்** என்னும் நான்காமியலில் கலைத்திறன் அல்லது செயல்திறன் என்பதே உத்தியாகும். ‘உத்தி’ என்னும் சொல் தொல்காப்பியம் முதலே ஆளப்பட்டு வந்துள்ளது. கலை வடிவம் உருவாவதற்குக் காரணமாய் அமைவது உத்தியாகும் என்பதை எடுத்துக்கூறி; பிரபஞ்சன் சிறுகதைகளில்

காணலாகும் தொடக்கம், முடிவு, தலைப்பு, கதைக்கரு, கதைப்பின்னல், நோக்குநிலை, பாத்திரப்படைப்பு, உரையாடல், முரண், வர்ணனை, பின்னோக்கு உத்தி, நடையமைப்பு, உவமை, இரட்டைக்கிளவி, பழமொழிகள், வடமொழிச் சொற்கள், ஆங்கிலச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், கொச்சைச் சொற்கள் முதலியன விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

**முடிவுரையில்** '*பிரபஞ்சன் – சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு*' என்னும் ஆய்வில் கண்டறிந்த ஆய்வு முடிவுகள் முடிவுரையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆய்வுக்குத் துணைபுரிந்த முதன்மை நூல்கள், துணைமை நூல்கள், இதழ்கள், கட்டுரைகள், ஆங்கில நூல்கள் பற்றிய விபரங்கள் துணை நூற்பட்டியலில் அகர வரிசைப்படித் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பின்னிணைப்பில் சிறுகதைகள் வகைப்படுத்தப்பட்டு வரிசையாகத் தரப்பட்டுள்ளன.

# 1. பிரபஞ்சனும் படைப்பிலக்கியமும்

இலக்கியம் என்பது இலக்கு + இயம் எனப் பிரிந்து ஒரு இலக்கை எடுத்து இயம்புவது அல்லது விளக்குவது என்ற பொருளில் அமைகின்றது. இலக்கு என்ற சொல்லிற்கு விளக்கம் – நோக்கம், கொள்கை, குறிக்கோள் என்றும், இயல்பு என்ற சொல்லிற்கு விளக்குவது என்றும் அமைந்து வாழ்க்கைக்கு விளக்கம் தருவது இலக்கியம் என்ற மரபு வழிச் செய்தி தெரிவிப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

“மனிதன் தன் வாழ்க்கையில் கண்டவை நம் அனைவரையும் கவரத்தக்க பொருள்களைப் பற்றி அவன் சிந்தித்தவை, உணர்ந்தவை ஆகியவைகளையும் இலக்கியம் சிறப்பாகக் கொண்டு விளக்குகின்றது. இதனால் இலக்கியம், அடிப்படையில் வாழ்க்கையின் விளக்கமாகக் கருதப்படுகிறது.”[1] என்பார் தா.ஏ.ஞானமூர்த்தி.

கதை சொல்வதும் கேட்பதும் காலம் காலமாக நடந்து வருகின்றன. அவ்வாறு கேட்கப் பெற்றவை எழுத்து வடிவம் பெற்ற இலக்கியங்களாக மாற்றம் பெறுகின்றன. அவை காலமாற்றத்திற்கு ஏற்ப கவிதை, கட்டுரை, நாவல், சிறுகதை, நாடகம் போன்ற பல்வேறு படைப்புகளாகத் தோன்றியுள்ளன. தோன்றிக் கொண்டும் இருக்கின்றன. அப்படைப்புக்கள் வாழ்வியல் உண்மைகளையும் சமுதாய வளர்ச்சியினையும் யதார்த்த வாதத்தையும் பல்வேறு படைப்பாளிகள் வெளிப்படுத்துவதாக அமைகின்றன.

**படைப்பிலக்கியம்**

மனிதப் பிறவி சிறப்புமிக்கது. மனம் என்னும் கருவி மனிதனை மற்ற பிறவிகளிடமிருந்து தனித்துக்காட்டுவது ஆகும். மனித மனத்தின் செம்மையான சிந்தனையின் பயனாக உருவானதே படைப்புகள். இப்படைப்புக்கள் காலந்தோறும் மாற்றம் பெறுகின்றன.

“மனிதனின் வாழ்வியல் முறையிலும், சிந்தனை ஆற்றலிலும், சமுதாய வளர்ச்சி நிலையிலும் ஏற்படும் மாற்றங்கள் இலக்கியப் படைப்புகளையும் பெருமளவில் பாதிக்கின்றன. இதன் காரணமாக இலக்கியக் கோட்பாடுகளும் காலந்தோறும் அவ்வக்கால தேவைக்கேற்ப மாற்றம் பெறுகின்றன.”[2] என்பார் இரா.சாந்தி. இலக்கியப் படைப்புகள் சமுதாயத் தேவைக்கேற்ப மாறக்கூடியதாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

படைப்பிலக்கியங்கள் கட்டுரை, கவிதை, நாவல், சிறுகதை, உரைநடை போன்ற பல்வேறு வகைகளில் அடங்கும். அவற்றில் நம் தமிழ்மொழியில் சிறுகதையின் வரலாறு என்பது நெடுங்காலமாக இருந்து வருகிறது. அண்மைக் காலமாகச் சிறுகதைகளைப் படித்து மதிப்பிடும் போக்கு வளர்ந்து வருவது குறிப்பிடத்தக்கது.

பல சிறுகதை ஆசிரியர்கள் சிறுகதைக்கு இலக்கணம் தந்துள்ளனர். சில சிறுகதைகள் படித்து முடித்து பல நாட்கள் சென்றாலும் மனத்தில் இருந்து நீங்குவதில்லை. அங்ஙனம் சிறுகதைகள் வாசகனின் மனத்தைவிட்டு நீங்காதவாறு அமைய வேண்டும். அவ்வாறு அமையும் சிறுகதைகள் மிகச் சிறந்த சிறுகதைகளாகின்றன. இச்சிறுகதைகளுக்கு இலக்கணம் தந்த அறிஞர்களுள்,

“குதிரைப் பந்தயம் போல விறுவிறுப்பாகத் தொடக்கமும் முடிவும் சுவையானதாய் இருக்க வேண்டும் என்கிறார் ஜெட்விக். எழுதி முடித்த கதைக்கு முன்னேயும் பின்னேயும் உள்ள எழுதாத கதைகள் படிப்போரின் உள்ளத்தில் விரிய வேண்டும் என்பது அகிலன் கூறும் கருத்து. வாசகன் எப்பொழுதும் பொறுமையை இழக்கக் கூடியவன் என்பதை எழுத்தாளர்கள் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். வாசகன் எடுத்த வேகத்தில் முடித்துவிடும்

வகையில் சிறுகதை சுவையாகச் சொல்லப்பட வேண்டும் என்பது புதுமைப்பித்தன் எண்ணம், சிறுகதைகள் கவிதை நிரம்பியனவாய் இருக்க வேண்டும்"[3] என்பது வ.வெ.சு. ஐயர் கூற்று.

குறைந்த கதைமாந்தர்கள், ஒரு நிகழ்ச்சி, ஒரு செயல், ஓர் உணர்வு வெளிப்பாடு இவற்றில் ஏதோ ஒன்றை வெளிப்படுத்தும் வகையில் சிறுகதைகள் அமைய வேண்டும் என்பதனை சு.வேங்கடராமன் பின்வருமாறு கூறுகின்றார்.

"சிறுகதையில் எந்த ஒரு கூறு வெளிப்படுகிறதோ. அந்த ஒன்றினைச் சுற்றியே பிற இயல்புகள் எல்லாம் பின்னப்படும். சிறுகதைக் கலையில் ஒருமைப்பாடு என்பது மிக இன்றியமையாததாகும். கதை எழும் காலம், இடம் பற்றிய செய்திகளும் கதை வழியே ஆசிரியர் புலப்படுத்த விழையும் கருத்தும், கதையின் ஒருமுகப்பட்ட அமைப்பிற்குள் அடங்குமாறு சிறுகதை படைக்கப்படும். சிறுகதையின் வாயிலாக ஆசிரியர் கூறும் சமுதாய நோக்கு, வாழ்வியல் பார்வை என்பவைகளும் இவ்வாறே வெளியாகும். சுருங்கக்கூறின், சிறுகதை என்ற கலைவடிவில், கூறியவை குறைவாகவும் அவற்றால் உணர வேண்டியவை மிகுதியாகவும் இருக்கும்."[4] என்பார்.

எனவே, சுருங்கச் சொல்லி நிரைய கருத்துக்களை விளங்க வைக்கும் ஆற்றல் சிறுகதைக்கு உண்டு என்பதையும், அச்சிறுகதை சமுதாய நோக்கையும், வாழ்வியல் சிந்தனையையும் கொண்டிருக்க வேண்டும் என்பதையும் அறிய முடிகின்றது. இங்ஙனம் அமையப்பெற்ற சிறுகதை, படைப்பிலக்கிய வகையில் ஒரு சிறந்த கலை வடிவம். இச்சிறுகதை, படைப்பாளனின் முழுப் படைப்புச் சக்தியையும் வெளிப்படுத்தக்கூடிய ஆற்றல் வாய்ந்தது என்பது புலனாகின்றது.

**மேனாட்டில் சிறுகதைகள்**

தமிழ் நாகரிகத்தைப் போன்றே கிரேக்க மற்றும் உரோமானிய மொழிகள் கலையிலும் நாகரிகத்திலும் மொழி பண்பாட்டிலும் சிறந்து விளங்கின. அங்கும் வாய்மொழியாக வழங்கப்பட்ட இலக்கியங்கள் எழுத்தாகத் தோன்றி இலியது, ஒதிசி ஆகிய காப்பியங்களாக உருவாயின.

*"1832ல் எட்கார் ஆலன்போவும் நதானியல் ஆதார்லும் பல கதைகள் எழுதினர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஓஹென்றியின் கதைகள் அமெரிக்க சிறுகதை உலகில் ஒரு புதிய மரபைத் தோற்றுவித்தன. இவர்களோடு பிரட் ஆர்ட் செயின்ட் எக்சுபெரி, சைலோன், ட்ரேவன், ஹெமிங்கே ஸ்கோலொசௌ, இஸ்ட்ராடி, மலராக்ஸ் போன்றவர்களாலேயே அமெரிக்க சிறுகதைகள் உலகப் புகழ் பெற்றது."*[5]

இவர்களின் வழியில் மாக்சி, கோர்க்கி, அலெக்சிதால் சுதாய், வாலெந்தின் கந்தாயெவ் ஷொவகோல் போன்ற எண்ணற்ற எழுத்தாளர்கள் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்தி வாழ்வியல் கூறுகளைச் சிறுகதைகளாக வடித்தனர். *"இங்கிலாந்தில் ஆர்.எல்.ஸ்டீவன்சன், ஆர்.முரே. கில்கிரைஸ்ட், இ.வி.லூக்காஸ் ரோனால்டு ஆக்டன், எல்.ஏ.ஜி. ஸ்ட்ராங், டி.எச்.லாரன்ஸ் சோமர் செட் மாம் போன்றோர் சிறுகதை வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள்."*[6]

*"ஜெர்மனியில் ராபர்ட் நியூமன், காஃப்கா, தாமஸ்மன், மார்டின் வால்ஸர் போன்ற பலர் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புதிய திருப்பத்தைச் சிறுகதையில் கொண்டு வந்தனர். போரும் அதன் விளைவுகளும் பெரும்பாலான சிறுகதைகளின் கருப்பொருளாயின எனலாம்."*[7]

**தமிழில் சிறுகதைகள்**

புனைகதை என்பது புதினம், சிறுகதை என்னும் இரு இலக்கிய வகைகளைக் குறிக்கும் பொதுச்சொல் ஆகும். புனைகதையில் முதலில் தோன்றியது "நீண்ட புனைகதைகள்" என்று சுட்டப்படும் புதினங்கள் ஆகும்.

"தமிழிலும் புனைகதை இலக்கிய வகையில் முதலில் தோன்றியது நாவல்களே ஆகும். உதாரணமாக மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரம்', 'சுகுணசுந்தரி கதை', ராஜம் ஐயர் எழுதிய கமலாம்பாள் சரித்திரம் ஆகிய நாவல்களே முதலில் தோன்றிய புனைகதைகளாகும். அவற்றைத் தொடர்ந்து சிறுதைக் கலை வளர்ந்தது. சிறுகதை ஒரு குறிப்பிட்ட மனோ நிலையை அல்லது உணர்வு நிலையைக் காட்டுவதாக அமைதல் அவசியம்"[8] என்னும் கருத்து சிறுகதையின் அடிப்படைப் பண்பை உணர்த்துகின்றது.

இங்ஙனம் அமையும் சிறுகதைகள் மிகச் சிறந்த சிறுகதைகளாக அமையும், உதாரணமாக தாகூரின் 'காபூலிவாலா' செக்கோவின் 'முத்தம்' புதுமைப்பித்தனின் 'சாபவிமோசனம்', 'வழி', 'பொன்னகரம்', கு.ப.ராவின் 'விடியுமா?' போன்ற சிறுகதைகள் தலை சிறந்த சிறுகதைகளுக்கு எடுத்துக் காட்டுகளாய் விளங்குவன. சிறுகதை ஆசிரியர்கள் தங்களது சிறுகதைப் படைப்புகளின் மூலம் வார்த்தைகளால் வாசகனின் மனத்தின் உள்ள உணர்வுகளைக்கூறி அவனை அறியாது அதனை வெளிப்படும்படிச் செய்தவர்கள்.

இவ்வகையில் பிரபஞ்சனும் தனது படைப்புகளில் வாசகர்களின் மனத்தைக் கவர்ந்திழுக்கும் வகையில் அமைந்த பல தலைசிறந்த சிறுகதைகளைப் படைத்துள்ளார். இந்தச் சிறுகதைப் படைப்பிலக்கியத்தில்

வேரூன்றிய படைப்பாளர்களுள் பிரபஞ்சனும் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது.

**பிரபஞ்சன் அறிமுகம்**

வரலாற்றுச் சிறப்புடன் திகழும் புதுவை மண் பெற்றெடுத்த மானுடச் சிந்தனையாளர் பிரபஞ்சன். 'சாரங்கபாணி கிராமணி என்கிற வீரபத்திரக்கிராமணி வைத்தியலிங்கம்' என்பது பிரபஞ்சனின் இயற்பெயர் ஆகும். இவர் புதுச்சேரியில் 27.04.1945 ஆம் ஆண்டு பிறந்தவர். தந்தையார் திருமு.சாரங்கபாணி தாயார் திருமதி.அம்புஜவல்லி. பிரபஞ்சன் மூத்த பிள்ளை இவருக்கு இரு சகோதரர்கள் உண்டு.

பிரபஞ்சனது ஆரம்பக் கல்வி முழுவதும் புதுச்சேரியிலேயே அமைந்தது. இவர் ஆங்கில மொழிவழிக்கல்வி கற்றவர். புதுச்சேரியிலுள்ள பெத்தி செமினேர் உயர்நிலைப் பள்ளியில் படித்தவர். ஆங்கில வழியில் படித்த பிரபஞ்சன் தமிழ் மீது கொண்ட பற்றினால் தமிழ்ப்புலவர் படிப்பைத் தேர்ந்தெடுத்தார். 1965 முதல் 1970 வரை நான்கு ஆண்டுகள் தஞ்சை கரந்தைப் புலவர் கல்லூரியில் படித்துத் தமிழ்ப் புலவர் பட்டம் பெற்றார். கரந்தைப் புலவர் கல்லூரியில் படிக்கும் காலத்தில் பிரமிளா ராணி என்பவரை விரும்பி 05.06.1970ல் திருமணம் செய்து கொண்டார். இவருக்கு கௌதமன், கௌரிசங்கர், சதீஷ் என்ற மூன்று மகன்கள் உண்டு.

**பிரபஞ்சன் உருவான விதம்**

படைப்பாளர்கள் 'புனை பெயர்' வைத்துக் கொள்வது வழக்கமாகக் காணப்படும் ஒன்றாகும். "பிரபஞ்சன் என்பது புனை பெயர். இயற்பெயர் வைத்திலிங்கம். கோவை வானம்பாடி கவிதை இயக்கம் சார்ந்தவர்கள் சாதி, மதம் தெரியாத பெயர்கள் 1970 ஆம் ஆண்டில் வைத்துக் கொண்டோம்"[9]

என்று புனைப் பெயரின் காரணத்தைப் பிரபஞ்சன் எடுத்துரைக்கின்றார். இந்த வானம்பாடி இயக்கத்தின் தொடர்பு. இவ்வியக்கத்தின் முதன்மையானவராகத் திகழ்ந்த சிற்பி பாலசுப்பிரமணியத்தின் அறிமுகத்தினால் கிடைத்தது என்பதனை,

"அறுபதுகளின் இறுதியில் மரியாதைக்குரிய கவிஞர் சிற்பி அவர்களை அறிமுகம் செய்து கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. வானம்பாடி பத்திரிக்கைக்கும், இயக்கத்திற்கும் அடிப்படையானவர்களில் அவர் முதன்மையானவர். சிற்பியை உள்ளிட்ட வானம்பாடிக் கவிஞர்கள் தான் எனக்குப் பிரபஞ்சன் என்ற பெயரை வைத்தார்கள்"[10] என்று பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி I என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிடுகின்றார். பிரபஞ்சகானன் என மேத்தா கூறிய பெயரைச் சுருக்கம் கருதி பிரபஞ்சன் என்று மாற்றி அமைத்துக் கொண்டார்.

பிரபஞ்சன் ஏழாம், எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த பொழுது சில துப்பறியும் புதினங்களைப் படிக்கின்ற வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. மேதாவி, சிரஞ்சீவி, சந்திரமோகன் போன்ற ஆசிரியர்களின் புதினங்கள் அவை. அவற்றைப்படித்த பொழுது கதை எழுதும் ஆவல் அவருக்குள் அரும்பியது. இதனை,

"நான் ஏழு அல்லது எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த காலம். எங்கள் வீட்டில், ஓரத்தில் சிவப்புச்சாயம் பூசப்பட்ட துப்பறியும் நாவல்கள் அதிகம் புழங்கின. என் மாமன் ஒருத்தருக்குத் துப்பறியும் நாவல்கள் மேல் அதீத இஷ்டம். அவர் படித்துப்போட்டவற்றை நானும் எடுத்துப் படித்தேன்."[11] இதன்வழி தன் மாமாவின் மூலம் கிடைத்த துப்பறியும் நாவல்கள் அவருக்குக் கதை படிக்கும் ஆர்வத்தை வளர்த்தது என்பார் பிரபஞ்சன்.

பிரபஞ்சன் தனது தாத்தா வீட்டில் இருந்த வடுவூர் துரைசாமி ஐயங்கார் கதை, திகம்பரசாமியார் கதை, கம்பராமாயண வசனம், பெரியபுராண வசனம் என்று பல நல்ல புத்தகங்களைப் படித்தார். பின்பு சி.பார்த்தசாரதி என்ற நண்பர் மூலம் புதுமைப்பித்தனின் சிறுகதைத் தொகுப்பைப் படிக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. ரோமன் ரோலந்து நூலகத்தில் உறுப்பினராக இருந்ததால் அங்குள்ள சிறந்த எழுத்தாளர்களுடைய புத்தகங்களைப் படித்த அனுபவத்தின் வாயிலாகப் பிரபஞ்சனுக்கு எழுத்தாளர் ஆக வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியது இவற்றைப் பற்றிப் பிரபஞ்சன் தனது முன்னுரையில் கூறும்போது "விருத்தாசலம் மேட்டுத் தெருவில் இருந்த என் தாத்தா வீட்டில், கறுத்த அலமாரி ஒன்றில் ஏராளமான புத்தகங்கள் இருந்தன. பள்ளிப் பருவத்தில் கோடை விடுமுறைக் காலங்களில் தாத்தா வீட்டிற்குச் செல்லும்போதெல்லாம் அந்தப் புத்தகங்களை நான் வாசிப்பேன்."[12] என்கிறார்.

தாத்தா வீட்டில் இருந்த இந்த நூல்கள் பிரபஞ்சனுக்கு வாசிக்கும் ரசனையைத் தூண்டியது. "பதினான்காம் வயதிலேயே அப்பா என்னை ரோமன் ரோலந்து நூலகத்தில் உறுப்பினராக்கினார். பிருமாண்டமான தமிழ், ஆங்கில, பிரஞ்சு நூலகம் அது. என் வாழ்வில் நான் கடன்பட்ட ஸ்தலம் அது. ரோமன் ரோலந்து நூலக ஆசிரியர்களில் வையாபுரிபிள்ளை, ரா.பி.சேது பிள்ளை, தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், மு.வ., ஔவை சு.துரைசாமி மூலம் தமிழ்ச் சங்க இலக்கியப் பரிச்சயமும், ஈடுபாடும் ஏற்பட்டது. என் வாழ்க்கைப் பயணம் முடிவு செய்யப்பட்ட தருணம் அது. ஒரு முழுதான தமிழ் வாழ்வையே வாழ்வது என்று முடிவெடுக்க எனக்குச் சங்க இலக்கியங்களே காரணமாயின."[13] என்னும் பிரபஞ்சனின் இக்கூற்றுக்கள் தமிழ்ச் சிந்தனையாளராக, ஒரு சிறந்த படைப்பாளராக அவர் மாறுவதற்கு ரோமன் ரோலந்து நூலகம் பிரபஞ்சனுக்குத் தூண்டுகோளாய் அமைந்துள்ளது எனலாம்.

பிரபஞ்சனின் தந்தையார் ரோமன் ரோலந்து நூலகத்தில் அவரை உறுப்பினராக்கியது அவருக்கு இலக்கிய ஆர்வம் ஏற்பட ஒரு தூண்டுகோலாய் அமைந்தது. "நண்பர் சி.என்.பார்த்தசாரதி, புதுமைப்பித்தன் கதைத் தொகுப்பொன்றை எனக்களித்தார். பிரசுரமான அந்த புத்தகத்தின் மூன்று பக்கத்திலும் சிவப்பு சாயம் அடித்திருந்தது. முதன்முதலாக அன்று தான் புதுமைப்பித்தன் என்னிடம் வந்து சேர்கிறார்"[14] என்னும் கூற்று பிரபஞ்சனுக்கு தன் நண்பர் சி.என்.பார்த்தசாரதியே புதுமைப்பித்தனின் சிறுகதைகளை, அறிமுகம் செய்துள்ளார் என்பதை அவரது சிறுகதை முதல் தொகுதி முன்னுரையில் காணப்படுகின்றது.

பிரபஞ்சன் தனக்குச் சிறுகதை எழுதத் தூண்டுகோலாய் அமைந்தவர்கள் என்று பார்த்தசாரதி, சித்தானந்தன், கம்யூனிஸ்ட் நண்பர்கள் ஆகியோரைச் சுட்டுகின்றார். இதனை "எனக்கு பார்த்தசாரதின்னு ஒரு நண்பர் இருந்தார். அவரும் சித்தானந்தன் என்கிற நண்பரும் சேர்ந்து கலைக்கோவில்னு ஒரு பத்திரிகை நடத்தினாங்க. பாண்டிச்சேரியில் அந்த பத்திரிகை நடத்திக்கிட்டிருந்தப்ப பார்த்தசாரதி எனக்குப் புதுமைப்பித்தன் கதைகளைப் படிக்கக் கொடுத்தார். அப்ப எனக்குப் புதுமைப்பித்தன் யாரென்று தெரியாது. அதுக்கு முன்னால் நான் படிச்சதெல்லாம் நா.பார்த்தசாரதி கதைகள் தான் அந்த ரொமாண்டிக்கான உலகத்துலதான் இருந்தேன். புதுமைப்பித்தன் கதைகளை படிச்சவுடனே ரொம்ப வித்தியாசமா பளீர்னு இருந்தது. இப்படி எல்லாம் கூட கதை எழுதலாமா! ரொம்ப சாதாரண பாத்திரங்களை வச்சுகிட்டு ரொம்ப சாதாரணமான சூழ்நிலையில எழுதறாங்களே இதெல்லாம் முடியுமான்னு ஆச்சரியமா இருந்தது. நான் இருந்த பகுதியில் இருந்த கம்யூனிஸ்ட் நண்பர்கள் எனக்கு 'தாமரை' பத்திரிக்கையைப் படிக்க கொடுத்தாங்க. இந்த இரண்டுமாகத்தான் நம்பளும் கதை எழுதலாமேன்னு எனக்குத் தூண்டுகோலா இருந்தது."[15]

என 20 ஆம் நூற்றாண்டின் தமிழ்ச் சிறுகதையாசிரியர்கள் என்ற நூலிற்காக அளித்துள்ள நேர்காணலில் தான் சிறுகதை எழுதுவதற்குத் தூண்டுகோலாய் அமைந்தவர்ளைப் பற்றி நினைவு கூறுகின்றார்.

1971 ஆம் ஆண்டு முதல் 1972 ஆம் ஆண்டுவரை புதுச்சேரியிலுள்ள ராஜா உயர்நிலைப் பள்ளியில் இரண்டு ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றினார். பின்பு புதுச்சேரிப் பல்கலைக் கழகத்தில் இரண்டு ஆண்டுகள் நாடகத்துறையில் கௌரவ விரிவுரையாளராகவும் பணியாற்றினார். எழுதும் ஆர்வத்திற்குப் பணி தடையாக இருப்பதாகக் கருதியதாலும் அக்காலத்தில் தமிழாசிரியர்களுக்கு மதிப்பில்லாதிருந்த நிலையை எண்ணி வருந்தியதாலும் தாம் பார்த்து வந்த தமிழாசிரியர் பணியை விட்டு விலகினார் என்பதை "1971ல் பாண்டிச்சேரியிலுள்ள ராஜா உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினேன். அப்போது இருந்த என் மனநிலை மேலும், தமிழாசிரியர்களுக்கு மதிப்பில்லாதிருந்த நிலை அதனால் பணியைத் துறந்துவிட்டேன்"[16] என்னும் பிரபஞ்சன் கூற்று மெய்ப்பிக்கின்றது.

1964ல் பரணி என்ற பத்திரிகை சேத்தூர் கூத்தன் என்பவர் நடத்தினார். அப்பத்திரிக்கையில் பிரபஞ்சனின் 'என்ன உலகமடா?' என்ற சிறுகதை வெளிவந்தது. அப்போது பிரபஞ்சன் எட்டாம் வகுப்பு படித்து வந்தார். எட்டாம் வகுப்பு படிக்கும் பொழுதே மிகச்சிறிய வயதிலேயே சிறுகதை எழுதும் ஆற்றலைப் பிரபஞ்சன் பெற்றிருந்தார். இதுவே இவரது முதல் சிறுகதையாகும்.

**இதழியல் பணியும் படைப்புப் பதிவும்**

1972 இல் தமிழாசிரியர் பணியிலிருந்து விலகிய பிரபஞ்சன் இதழியல் துறையில் கவனம் செலுத்தத் தொடங்கினார். மாலை முரசு இதழின்

நிருபராக ஓராண்டு காலம் பணிபுரிந்தார். அதற்குப்பிறகு பாரதி கல்விக் கழகம் (டுடோரியல்) தொடங்கி நடத்தினார். இவை யாவும் 1980இல் சென்னைக்குச் செல்லும் முன்பு நிகழ்ந்தவையாகும்.

பின்பு 1981–82இல் குங்குமம் வார இதழில் சிறுகதை எழுத்தாளராகப் பணியாற்றினார். 1984–85இல் குமுதம் வார இதழில் சிறுகதை எழுத்தாளராகவும் 1987–88ல் ஆனந்தவிகடனில் திரைப்பட விமர்சகராகவும் பணியாற்றினார்.

"1982ல் 'தினமணிக்கதிர்'ல ஒரே எழுத்தாளர்கிட்ட ஐந்து கதை வாங்கி வரிசையாய் போடுற மாதிரி ஒரு திட்டம் வச்சிருந்தாங்க அப்பதான் முதன்முறையாக வெகுஜன பத்திரிகையில் எழுதறேன். அதை ஏற்பாடு செய்தவர் திருப்பூர் கிருஷ்ணன். அதுக்கு கொஞ்சநாள் முன்னால தான் என்னுடைய 'பிரும்மம்' கதையை அவர் இலக்கியச் சிந்தனையில் தேர்ந்தெடுத்தார். அது 'கணையாழி'யில் வந்த கதை அதுல இருந்து என்னுடைய கதைகள் வாசகர்களுக்குப் பரவலாகக் கிடைத்தது."[17] என்ற பிரபஞ்சனுடைய கூற்றிலிருந்து 'பிரும்மம்' சிறுகதையே மக்களிடத்தில் அவர் அறிமுகமாகக் காரணமாக அமைந்தது எனலாம். ஆனால் இப்பத்திரிக்கைகளில் அவருடைய படைப்புக்கு முதன்மைக் கொடுக்கப் படவில்லை. எனவே கருத்து வேறுபாடு எழுந்து பத்திரிக்கையை விட்டு விலகிப்போனார். இதனை,

"அநேகமா தமிழ்நாட்டுல மூணு பெரிய பத்திரிகைகளில் வேலை பார்த்த எழுத்தாளன் நானாகத்தான் இருக்கமுடியும். இந்த மூன்றுமே கசப்பான அனுபவம் குங்குமத்தில் ஒன்னரை வருஷம் வேலை பார்த்தேன். நான் ஒரு எழுத்தாளனாகத்தான் சேர்ந்தேன். இந்த ஒன்னரை ஆண்டு காலத்துல ஒரு சிறுகதைகூட என்னை எழுத அவுங்க அனுமதிக்கல்லே"[18]

என்று கவிதா பதிப்பகத்திற்கு அளித்த நேர்காணலில் பிரபஞ்சன் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

குங்குமத்திலிருந்து விலகிய பிரபஞ்சன் கதைகள் எழுத வாய்ப்பு கிடைக்காததால் **1984** முதல் **1985** வரை குமுதம் ஆசிரியர் குழுவில் பணியாற்றினார். குமுதத்தில் அதிகம் எழுதினாலும் நிர்வாகத்திற்கும் தனக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டின் காரணமாகத் தன்னைக் குமுதத்தில் இருந்து விடுவித்துக் கொண்டார். இதற்குக் காரணம் குமுதம் இதழின் செயல்பாட்டில் அவருக்கு உடன்பாடு இல்லாதது ஆகும். இதனை,

"குமுதத்துல நிறையக் கதை எழுத வாய்ப்புக் கிடைத்தது. மாலனும் அப்ப ஆசிரியர் குழுவில் சேர்ந்தார். அப்ப அவரும் நிறைய சிறுகதைகள் எழுதியிருக்கிறார். அப்ப ஈரோட்டில் நடந்தவொரு கூட்டத்தில் ஒரு வாசகர், குமுதம் குப்பையான பத்திரிகை. அதுல நீங்க கதை எழுதலாமான்னு கேட்டார். நான் சொன்னேன் குமுதம் குப்பை பத்திரிகைதான். ஆனா நான் எழுதற கதை குப்பையானதான்னு பாருங்கன்னு பதில் சொன்னேன். இது ஆசிரியர் காதுக்கு எட்டியது. அவர் என்னைக் கூப்பிட்டுக் கேட்டார். அப்படிச் சொன்னீங்களான்னு... ஆமான்னு சொன்னேன். குமுதம் குப்பையில்லைன்னு நீங்க சொல்லியிருக்கலாமேன்னு கேட்டார். நான் சொன்னேன், ஏழெட்டு நடிகைகள் பின்புறத்தைக் காட்டிக் கொண்டு இரண்டு கையாலும் புடவையை கணுக்காலுக்கு மேல் தூக்கிக் கொண்டு அசிங்கமான போஸில் போட்டோ எடுத்து இவர்கள் யார்? என்று கேள்வி கேட்டிருக்கீங்க. இது குப்பையில்லையான்னு கேட்டேன் அதோட குமுதம் உறவு முறிஞ்சிட்டது"[19] என்று கவிதா பதிப்பகத்திற்கு அளித்த நேர்காணலின் போது கூறுவதிலிருந்து பிரபஞ்சன் சமூகத்தின் மீது

கொண்டிருந்த பொறுப்புணர்வு மற்றும் பற்றையும், அவர் விரும்பிய தரமான இதழ்களின் போக்கையும் எடுத்துக்காட்டுவதாக அமைகின்றது.

பின்னர் 'திரைச் சுவை' என்ற இதழில் திரைப்படம் தொடர்பான கட்டுரைகளும், ஆனந்தவிகடன் இதழில் திரைப்பட விமர்சனங்களும் எழுதியிருக்கிறார் என்பதை அறியமுடிகின்றது. அதன்பின்னர் வேறு எந்த இதழிலும் பிரபஞ்சன் பணியாற்றவில்லை. "பின்னால ஆனந்த விகடன்ல சேர்ந்தேன் அப்ப ஒரு சினிமாவிற்கு விமர்சனம் எழுதினபோது நான் சினிமா பார்க்காகமலே விமரிசனம் எழுதிட்டேன்னு ஒரு பொய்யான புகார் சுமத்தப்பட்டது. நான் சினிமா டிக்கெட்டை எடுத்துக் காட்டினேன். இருந்தாலும் அவுங்க என் நேர்மையில் சந்தேகப்பட்டது எனக்குப் பிடிக்கல்லே வெளியே வந்துவிட்டேன். அதுக்குப் பிறகு எந்தப் பத்திரிகையிலேயும் வேலைக்குப் போறதில்லைன்னு முடிவு எடுத்துட்டேன்"[20] என்ற கூற்று எடுத்துக் காட்டுகின்றது.

பிரபஞ்சன் தன் மனத்தில் பட்டதை அச்சமின்றி தெளிவாகக்கூறும் இயல்பு கொண்டவர் நேர்மைக் குணமும் கொண்டவர் என்பதை உணர்த்துகின்றது. இதனால் இதழியல் துறையில் தம் எழுத்துப் பணியின் வளர்ச்சிக்காகவே இதழ்களின் இழிநிலைப் போக்கைப் பொறுத்துக் கொண்டு இதழ்களில் பணியாற்றியிருக்கிறார் என்பதைக் காணமுடிகிறது.

1995 ஆம் ஆண்டில் இலக்கிய மலர் என்னும் இதழில் 'காமத்துப் பாலர்' என்னும் சிறுகதை வெளிவந்தது. பின்பு 1998 இல் இந்தியா டுடே இதழில் 'அந்தக்குரல்' 'அத்து' என்னும் சிறுகதைகள் வெளிவந்தது. 1999 இல் 'அப்பாவின் வேஷ்டி' என்னும் சிறுகதை குங்குமத்தில் வெளியானது. அதனைத் தொடர்ந்து மீண்டும் 2000த்தில் இலக்கிய மலர் இதழில் 'இருட்டின் வாசல்' என்னும் சிறுகதை வெளிவந்தது. அதேபோல் 2000 ஆம்

ஆண்டில் 'ஒரு தெருவின் கதை' என்னும் சிறுகதையும், 2003 ஆம் ஆண்டில் 'பொன்முடிப்பு' என்னும் சிறுகதையும் இந்தியா டுடே என்னும் இதழில் வெளிவந்தது. இந்தப் படைப்புகள் அனைத்தும் நூல் வடிவில் தொகுத்து வெளியிடும்போது இடம்பெறாத சிறுகதைகளாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

**இலக்கியத் தளங்கள்**

பிரபஞ்சன் தமிழகத்தில் வெளியாகி வரும் சிறு பத்திரிக்கைகளிலும் வெகுசன இதழ்களிலும் தம் படைப்புகளைத் தொடர்ந்து படைத்தளித்து வந்தார். தம்படைப்புகளை இதழில் எழுதும் நோக்கத்திற்காகச் சென்னை திருவல்லிக்கேணியில் தங்கியிருந்தார். இவர் சிறுகதை, நாவல் தவிர வேறு பல படைப்புகளிலும் தடம்பதித்தார்.

1985 ஆம் ஆண்டு நக்கீரன் இதழில் 'கண்டதைச் சொல்கிறேன்' என்னும் தலைப்பில் இவரது கட்டுரை வெளிவந்தது. 1998 இல் தினமணி நாளிதழில் 'வெற்றிதரும் வரலாற்று ஞானம்' என்னும் கட்டுரையும் 'எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் அமைப்புகள் தேவை' என்னும் தலைப்பில் அமைந்த அவரது பேச்சும் வெளிவந்தது. அதன்பின்னர் 1999 இல் இந்தியா டுடே இதழில் 'காதல் வயப்பட்ட ஜோடிகளுக்கு... அன்புடன்' 'எல்லாம் பாழ்பட்டு' என்னும் இரண்டு கட்டுரைகள் வெளியாகின. இந்தியா டுடே இதழில் 2000 ஆம் ஆண்டில் 'பேராசிரியர்களின் தகுதி எது', 'கலையும் அடக்கமுறையும்' என்னும் தலைப்பில் அமைந்த கட்டுரைகள் வெளிவந்தது. தினமணி நாளிதழில் 2000 ஆம் ஆண்டில் 'எழுத்தை நம்பி தமிழகத்தில் வளர முடியாது' என்னும் தலைப்பிலமைந்த அவரது பேச்சு வெளியானது.

2001 ஆம் ஆண்டில் இந்தியா டுடே இதழில் இரண்டு விமர்சனக் கட்டுரைகளை எழுதியுள்ளார். 'வலியும் கவிதைகளும் கவித்துவம் பெறாத அனுபவச்சாரம்' என்னும் தலைப்பில் 'சுயம்' என்னும் நூலின் விமர்சனக்

கட்டுரை மற்றும் 'மொழியும் உடலும் ஒரு உச்சம்', பின் 'தரை' என்ற அடுக்குகளான கதைவளி' என்னும் தலைப்புகளில் 'முன்பு ஒரு காலத்தில் நூற்றியெட்டு கிளிகள் இருந்தன' என்னும் நூலின் விமர்சனக் கட்டுரையை எழுதியுள்ளார்.

**படைப்புகள்**

1960களில் பிரபஞ்சன் தம் படைப்புப் பணியைத் தொடங்கினார். 1980களில் வெற்றி பெறுகிறார். சென்னையில் பிரபஞ்சன் தங்கியருந்த காலகட்டத்தில் இவரது படைப்புப்பணி விறுவிறுப்படைந்தது. வண்ண நிலவனின் முயற்சியால் 1982 இல் 'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்' என்னும் சிறுகதைத் தொகுதி நூலாக வெளிவந்த தகவலைக் கூறும்போது, "சென்னையில் தங்கியிருந்தபோது வண்ண நிலவன் என்னுடன் நெருங்கிப் பழகினார். அவர்தான், உங்களது கதைகளைக் கொடுங்கள் நான் நூலகப் போடுவதற்கு ஏற்பாடு செய்கிறேன் என்று கூறினார்"[21] என்கிறார். நூல் வடிவில் வெளிவந்த பிரபஞ்சனின் முதல் படைப்பு இதுவேயாகும். இச்சிறுகதைத் தொகுப்பின் முதற்பதிப்பை 1982 சூன் மாதத்திலும், இரண்டாம் பதிப்பை 1992 செப்டம்பர் மாதத்திலும் கவிதா பதிப்பகம் வெளியிட்டது.

மே 1983 இல் 'முட்டை' என்னும் நாடகம் வெளிவந்தது. ஆகஸ்ட் 1985 இல் 'ஆண்களும் பெண்களும்' என்னும் புதினம் வெளிவந்தது. டிசம்பர் 1986 இல் 'நேற்று மனிதர்கள்' என்னும் பதினேழு சிறுகதைகள் அடங்கிய தொகுதி வெளிவந்தது. ஜுலை 1987 இல் 'எனக்குள் இருப்பவள்' என்னும் தலைப்பில் அமைந்த இரு குறும்புதினங்கள் வெளிவந்தன. அக்டோபர் 1988 இல் காதலென்னும் ஏணியிலே என்னும் புதினம் எழுதினார். ஜுலை 1989 இல் 'ஒரு மனுஷி' என்னும் பதினெட்டுச் சிறுகதைகள் அடங்கிய தொகுதி வெளிவந்தது. 1989 செப்டம்பரில் 'சந்தியா' என்னும் புதினம்

வெளிவந்தது. 1980 நவம்பரில் 'சுகபோகத்தீவுகள்' என்னும் தொடர்கதை 'கல்வி' என்ற வார இதழில் வெளிவந்தது.

1990 ஆம் ஆண்டு அக்டோபரில் 'மகாநதி' புதினமும் டிசம்பரில் 'மானுடம் வெல்லும்' புதினமும் வெளிவந்தன. 1940 முதல் 1950 வரையிலான புதுச்சேரி மக்களின் வழ்க்கையைச் சித்தரிக்கும் 'மகாநதி' புதினம் நேரடியாக நூல் வடிவம் பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. 1735 முதல் 1742 வரையிலான புதுச்சேரி வரலாற்றை ஆனந்தரங்கனின் நாட்குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு எழுதிய 'மானுடம் வெல்லும்' தினமணிக் கதிரில் வாரந்தோறும் தொடராக வெளிவந்தது பின்பு நூல் வடிவம் பெற்றதாகும். இவரது முதல் வரலாற்றுப் படைப்பாகும்.

மார்ச் 1991இல் 'கனவு மெய்ப்பட வேண்டும்' என்னும் புதினம் வெளிவந்தது. 1992 அக்டோபரில் ஒரு சினேகிதத்தின் கதை என்னும் புதினமும் டிசம்பரில் 'திரை' என்னும் பதினான்கு சிறுகதைகள் அடங்கிய சிறுகதைத் தொகுப்பும் வெளிவந்தன.

வரலாற்றுப் புதினத்தின் இரண்டாம் பகுதி எனக் கருதத்தக்க வகையில் 1991 ஆகஸ்ட் முதல் 1992 டிசம்பர் வரை 'வானம் வசப்படும்' என்னும் தலைப்பில் தொடர்கதையாக வெளிவந்தது. 1993ல் இது நூலாக வெளியிடப்பட்டது. இப்புதினம் 1740 முதல் 1750 வரையிலான புதுச்சேரி வரலாற்றினை மையமிட்டு, ஆனந்தரங்கரின் நாட்குறிப்புகள் துணையோடு எழுதப்பட்டதாகும். இப்புதினத்தின் மூலம் புதுச்சேரி மக்களின் நிலையினைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார். 'வானம் வசப்படும்' நாவலுக்கு 1995 ஆம் ஆண்டில் சாகித்திய அகாதமி விருது வழங்கப்பட்டது.

டிசம்பர் 1993 இல் 'குமாரசாமியின் பகல் பொழுது' என்னும் தலைப்பில் ஐந்து குறும்புதினங்கள் அடங்கிய தொகுப்பு நூலாக வெளிவந்தது.

ஆகஸ்ட் 1994 இல் 'மனிதர்கள் மத்தியில்' என்னும் தலைப்பிலமைந்த பதிமூன்று சிறுகதைகள் அடங்கிய நூல் வெளிவந்தது.

1995 மார்ச் மாதத்தில் 'மனிதர்களைத் தேடி' என்னும் தலைப்பில் பதிமூன்று சிறுகதைகள் அடங்கிய நூலும், அதே ஆண்டு மார்ச் மாதம் 'பதவி' என்ற தலைப்பில் அமைந்த சிறுகதைகள் பதின்மூன்றும், அக்டோபரில் 'நேசம் மறப்பதில்லை' என்னும் புதினமும், நவம்பரில் 'சந்தியா' என்னும் புதினமும், டிசம்பரில் 'தீயிலே வளர்சோதி' என்னும் குறும்புதினமும், டிசம்பரில் 'காகித மனிதர்கள்' என்னும் புதினமும்ம், 'விட்டுவிடுதலையாகி' என்னும் தலைப்பில் பதினொறு சிறுகதைகள் அடங்கிய நூலும் வெளிவந்தது.

1995 ஆம் ஆண்டில் பல்வேறு பத்திரிக்கைகளில் பிரபஞ்சன் அவர்களால் எழுதப்பட்ட சிறுகதைகளில் தொகுக்கப்பட்ட 13 சிறுகதைகள் அடங்கிய சிறுகதைத் தொகுதி 'பூக்களை மிதிப்பவர்கள்'. இத்தொகுதி ஆகஸ்ட் 1996 இல் நூலாக வெளிவந்தது.

மார்ச் 1996 'நேற்று வந்த நிலா' என்னும் புதினம் வெளிவந்தது. 1996 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் 'இன்பக்கேணி' என்னும் புதினமும், அக்டோபர் மாதத்தில் 'நீலநதி' என்னும் புதினமும், நவம்பர் மாதத்தில் 'தீவுகள்' என்னும் புதினமும், டிசம்பர் மாதத்தில் வசந்தம் வரும் என்னும் தலைப்பில் குறும்புதினம் ஒன்றும் சிறுகதைள் எட்டும் அடங்கிய தொகுப்பும் நூல்களாக வெளிவந்தன.

1997 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 'பூக்கள் நாளையும் மலரும்' என்னும் புதினமும், டிசம்பரில் 'பெண்' என்னும் கட்டுரைத் தொகுப்பும் நூலாக வெளிவந்தன.

1998 ஆம் ஆண்டு ஜுலை மாதம் தந்தை பெரியாரின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு 'ஈரோடு தமிழர் உயிரோடு' என்னும் நூல் வெளிவந்தது.

1998 ஆகஸ்ட் மாதம் 'கண்ணீரால் காப்போம்' என்னும் வரலாற்றுப் புதினம் நூலாக வெளிவந்தது. இப்புதினம் புதுச்சேரியில் நடந்த இந்திய விடுதலைப் போராட்டம் குறித்த, இவரது மூன்றாவது வரலாற்றுப் புதினம் ஆகும்.

டிசம்பர் 1998 இல் 'நானும் நானும் நீயும் நீயும்' என்னும் புதினம் வெளிவந்தது. ஆகஸ்ட் 1999 இல் 'பெண்மை வெல்க' என்னும் கட்டுரைத் தொகுப்பு வெளியானது. இத்தொகுப்பு பெண் விடுதலை குறித்து புதிய முயற்சியில் மாறுபட்டுச் சிந்தித்து எழுதப்பட்ட கட்டுரைகள் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

2000 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 'கனவுகளைத் தின்போம்' என்னும் புதினமும் ஜுலை மாதத்தில் 'முதல் மழைத்துளி' என்னும் புதினமும் நவம்பரில் 'இது என் சொர்க்கம்' என்னும் புதினமும் டிசம்பரில் 'நிகழ் உலகம்' என்னும் சிறுகதையும் வெளிவந்தன.

2001 ஆம் ஆண்டு நவம்பரில் பிரபஞ்சன் எழுதிய 'சுதந்திரச் சிந்தனைகள்' என்னும் கட்டுரை வெளிவந்தது. இது இஸ்லாம் மார்க்கம் பற்றியது ஆகும். பின் அதே வருடம் டிசம்பரில் 'இருட்டின் வாசல்' என்னும் தலைப்பில் பதினேழு சிறுகதைகள் அடங்கிய சிறுகதைத் தொகுதி நூல் வெளிவந்தது. 2003 ஆம் ஆண்டு 'பொன்முடிப்பு' என்னும் சிறுகதைத் தொகுதி வெளிவந்தது.

**விருதும் பரிசுகளும்**

புதுச்சேரி அரசு 1996 ஆம் ஆண்டு 'கலைமாமணி' என்ற விருதினையும், 2000 இல் தமிழ்க்கலை இலக்கியப் படைப்பிற்காகத் 'தமிழ்மாமணி' என்ற விருதினையும் வழங்கிச் சிறப்பித்தது.

'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்' என்னும் சிறுகதைத் தொகுப்பிற்கு 1982 ஆம் ஆண்டு தமிழக அரசின் முதல் பரிசினைப் பெற்றுள்ளார்.

'நேற்று மனிதர்கள்' என்னும் சிறுகதைத் தொகுதிக்கு 1986 ஆம் ஆண்டு தமிழக அரசு முதற்பரிசு வழங்கிச் சிறப்பித்தது.

'மானுடம் வெல்லும்' என்னும் புதினத்திற்கு 1992 ஆம் ஆண்டு இலக்கியச் சிந்தனைப் பரிசினைப் பெற்றுள்ளார்.

'வானம் வசப்படும்' என்னும் புதினத்திற்கு 1995 ஆம் ஆண்டில் மேற்கு வங்கப் 'பாரதீய பாஷா பரிஷத்' பரிசும், சாகித்ய அகாதமி பரிசும் கிடைத்துள்ளது. இந்தப் புதினம் ஒரே ஆண்டில் இரண்டு பரிசு பெற்றது குறிப்பிடத்தக்கது.

**படைப்புகளும், வெளியீடுகளும்**

**சிறுகதைகள்**

| எண் | நாள் | படைப்பு | வகை | இதழ் |
|---|---|---|---|---|
| 1. | 28.04.1998 | அந்தக்குரல் | சிறுகதை | இந்தியா டுடே |
| 2. | 21.10.1998 | அத்து | சிறுகதை | இந்தியா டுடே |
| 3. | 29.01.1999 | அப்பாவின் வேஷ்டி | சிறுகதை | குங்குமம் |
| 4. | 20.12.2000 | ஒரு தெருவின் கதை | சிறுகதை | இந்தியா டுடே |
| 5. | 07.05.2003 | பொன்முடிப்பு | சிறுகதை | இந்தியா டுடே |

**சிறுகதை – தொகுதி**

| எண் | ஆண்டு | நூலின் பெயர் | வகை / தொகுதி | வெளியீடு |
|---|---|---|---|---|
| 1. | ஜுன் 1982 | ஒரு ஊரில் இரண்டு மனிதர்கள் | சிறுகதைகள் (16) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 2. | டிசம்பர் 1986 | வேற்று மனிதர்கள் | சிறுகதைகள் (17) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 3. | ஜுலை 1989 | ஒரு மனுஷி | சிறுகதைகள் (18) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 4. | டிசம்பர் 1992 | திரை | சிறுகதைகள் (14) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 5. | டிசம்பர் 1995 | விட்டு விடுதலையாகி | சிறுகதைகள் (11) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 6. | ஆகஸ்ட் 1996 | பூக்களை மிதிப்பவர்கள் | சிறுகதைகள் (13) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 7. | டிசம்பர் 2001 | இருட்டின் வாசல் | சிறுகதைகள் (17) | கவிதா பதிப்பகம் சென்னை–17 |

## கட்டுரைகள்

| எண் | நாள் | படைப்பு | வகை | இதழ் |
|---|---|---|---|---|
| 1. | 20.07.1985 | கண்டதைச் சொல்கிறேன் | கட்டுரை | நக்கீரன் |
| 2. | 24.12.1998 | வெற்றிதரும் வரலாற்று ஞானம் | கட்டுரை | தினமணி |
| 3. | 01.09.1999 | காதல் வயப்பட்ட ஜோடிகளுக்கு... அன்புடன் | கட்டுரை | இந்தியா டுடே |
| 4. | 29.09.1999 | எல்லாம் பாழ்பட்டு | கட்டுரை | இந்தியா டுடே |
| 5. | 15.03.2000 | கலையும் அடக்குமுறையும் | கட்டுரை | இந்தியா டுடே |
| 6. | 21.01.2000 | பேராசிரியர்களின் தகுதி எது | கட்டுரை | இந்தியா டுடே |
| 7. | 03.01.2001 | வலியும் கவிதைகளும் கவித்துவம் பெறாத அனுபவச்சாரம் | சுயம் என்னும் நூலின் விமர்சன கட்டுரை | இந்தியா டுடே |
| 8. | 24.01.2001 | மொழியும் உடலும் ஒரு உச்சம், பின் தரை என்ற அடுக்குகளான கதைவளி | முன்பு ஒரு காலத்தில் நூற்றியெட்டு கிளிகள் இருந்தன என்னும் நூலின் விமர்சனக் கட்டுரை | இந்தியா டுடே |

புதினங்கள்

| எண் | ஆண்டு | நூலின் பெயர் | வகை | வெளியீடு |
|---|---|---|---|---|
| 1. | ஆகஸ்ட் 1985 | ஆண்களும் பெண்களும் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 2. | ஜீலை 1987 | எனக்குள் இருப்பவள் | இரு குறும் புதினங்கள் | சூர்யா பதிப்பகம் சென்னை–17 |
| 3. | அக்டோபர் 1988 | காதலெனும் ஏணியிலே | புதினம் | கங்கை புத்தக நிலையம், சென்னை–17 |
| 4. | நவம்பர் 1989 | சுகபோகத் தீவுகள் | புதினம் | பூஞ்சோலை பதிப்பகம், சென்னை–5 |
| 5. | அக்டோபர் 1990 | மகாநதி | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 6, | டிசம்பர் 1990 | மானுடம் செல்லும் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 7. | மார்ச் 1991 | கனவு மெய்ப்பட வேண்டும் | புதினம் | பூஞ்சோலை பதிப்பகம் சென்னை–5 |
| 8. | அக்டோபர் 1992 | ஒரு சினேகத்தின் கதை | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 9. | ஏப்ரல் 1993 | வானம் வசப்படும் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| 10. | டிசம்பர் 1993 | குமாரசாமியின் பகல் பொழுது | குறும் புதினங்கள் 5 | காண்டீபம் சென்னை–14 |

| | | | | |
|---|---|---|---|---|
| **11.** | அக்டோபர் **1995** | நேசம் மறப்பதில்லை | புதினம் | கங்கை புத்தக நிலையம் சென்னை–17 |
| **12.** | டிசம்பர் **1995** | தீயிலே வளர்சோதி | குறும்புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **13.** | டிசம்பர் **1995** | காகித மனிதர்கள் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **14.** | நவம்பர் **1995** | சந்தியா | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **15.** | மார்ச் **1996** | நேற்றுவந்த நிலா | புதினம் | கங்கை புத்தக நிலையம் சென்னை–17 |
| **16.** | ஆகஸ்ட் **1996** | இன்பக்கேணி | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **17.** | அக்டோபர் **1996** | நீல நதி | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **18.** | நவம்பர் **1996** | தீவுகள் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **19.** | செப்டர்பர் **1997** | பூக்கள் நாளையும் மலரும் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **20.** | ஆகஸ்ட் **1998** | கண்ணீரால் காப்போம் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **21.** | டிசம்பர் **1998** | நானும் நானும் நீயும் நீயும் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |
| **22.** | ஏப்ரல் **2000** | கனவுகளைத் திண்போம் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–17 |

| | | | | |
|---|---|---|---|---|
| *23.* | ஜூலை *2000* | முதல் மழைத்துளி | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–*17* |
| *24.* | நவம்பர் *2000* | இது என் சொர்க்கம் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–*17* |
| *25.* | டிசம்பர் *2000* | நிகழ் உலகம் | புதினம் | கவிதா பதிப்பகம் சென்னை–*17* |

**நாடகங்கள்**

| எண் | ஆண்டு | நூலின் பெயர் | வகை | வெளியீடு |
|---|---|---|---|---|
| *1.* | மே *1983* | முட்டை | நாடகம் | அகரம் பதிப்பகம் கும்பகோணம் |
| *2.* | *2003* | அகல்யா | நாடகம் | கவிதா பதிப்பகம் சென்னை–*17* |

# தொகுப்புரை

மனிதனின் செம்மையான சிந்தனையின் பயனாக உருவான படைப்பிலக்கியம் காலந்தோறும் மாறக்கூடிய ஒன்றாகும். படைப்பிலக்கியங்கள் கட்டுரை, கவிதை, புதினம், சிறுகதை, உரைநடை போன்ற பல்வேறு வகையில் அடங்கும். அவற்றில் சிறுகதையைப் படித்து மதிப்பிடும் போக்குத் தற்பொழுது வளர்ந்துள்ளது.

1832 இல் எட்கார் ஆலன்போவும் நதானியல் ஆதார்லும் பல கதைகள் எழுதினர். அமெரிக்காவில் ஓஹென்றி, பிரட் ஆர்ட் செயிண்ட் எக்சுபெரி போன்றோரின் சிறுகதைகள் உலகப் புகழ்பெற்றவை ஆகும். இதேபோல் ரஷ்யாவில் மாக்சி, கோர்க்கி, அலெக்சிதால் சுதாய், இங்கிலாந்தில் ஆர்.எல்.ஸ்டீவன்சன் போன்றோர் சிறுகதை வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

முதல் புதினம் மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் ‘பிரதாப முதலியார் சரித்திரம்’ ஆகும். தாகூரின் ‘காபூலிவாலா’ ‘செக்கோவின் முத்தம்’ மிகச்சிறந்த சிறுகதைகளாகும். இச்சிறுகதை ஆசிரியர்கள் வாசகர்களின் உள்ளம் கவர்ந்தவர்கள். அந்த வரிசையில் பிரபஞ்சனும் தமிழ்ச் சிறுகதைக் கலையில் வேரூன்றிய படைப்பாளர் ஆவார். இவரது முதற்சிறுகதை ‘என்ன உலகமடா?’ என்பதாகும். இச்சிறுகதை பரணி என்கிற பத்திரிக்கையில் வெளியானது.

சி.என். பார்த்தசாரதி, புதுமைப்பித்தன், சித்தானந்தன் போன்றோர் இவர் எழுத்தாளராக உருவாகக் காரணமாய் இருந்த நண்பர்கள். இவர் கரந்தைக் கல்லூரியல் படித்த பொழுது தமது கல்லூரி நண்பர் கொடுத்த இலக்கிய இதழ்களும் இவருக்கு எழுத்தாளர் ஆகவேண்டும் என்ற எண்ணத்தை வளர்த்தது.

*1970 ஆம் ஆண்டு வானம்பாடிக் கவிஞர்களிடத்தில் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக 'பிரபஞ்சன்' என்ற பெயர் இவருக்கு உருவானது. இப்பெயர் வானம்பாடிக் கவிஞர்களால் சூட்டப் பெற்றதாகும்.*

*1971 முதல் 1972 வரை புதுச்சேரியிலுள்ள ராஜா உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகவும் பின்பு புதுச்சேரி பல்கலைக்கழகத்தில் நாடகத்துறையில் கௌரவ விரிவுரையாளராகவும் பணியாற்றினார்.*

*1981 முதல் 1988 வரை குங்குமம், குமுதம், ஆனந்தவிகடன் வார இதழ்களில் சிறுகதை எழுத்தாளராகவும், திரைப்பட விமர்சகராகவும் பணியாற்றினார்.*

*பிரபஞ்சன் தம் படைப்புகளை இதழில் எழுதும் நோக்கத்திற்காக 1980க்குப்பின் சென்னை திருவல்லிக்கேணியில் தங்கியிருந்தார். இவர் நக்கீரன், தினமணி, இந்தியாடுடே போன்ற இதழ்களில் 1985 முதல் 2001 வரை சிறுகதை, கட்டுரை, பேச்சு, விமர்சனக்கட்டுரை போன்ற பல்வேறு இலக்கியத் தளங்களில் எழுதி வந்துள்ளார். ஜூன் 1982 முதல் 2001 ஆம் ஆண்டு வரை கட்டுரைத் தொகுப்புகள், சிறுகதைத் தொகுதிகள், புதினங்கள், குறும்புதினங்கள், நாடகங்கள், பெரியார் வரலாறு போன்ற இலக்கிய வகைகள் நூல் வடிவம் பெற்றுள்ளன. இந்தப் படைப்புகளைச் சென்னை கவிதா பதிப்பகம், அகரம், கும்பகோணம், கங்கை புத்தக நிலையம், பூஞ்சோலை பதிப்பகம், காண்டீபம், கங்கை, தமிழ்ச்சங்கம், சூர்யா போன்ற பதிப்பகங்கள் நூல்களாகத் தொகுத்து வெளியிட்டள்ளன.*

*பிரபஞ்சன் படைப்பிலக்கியம் படைப்பதில் வல்லவர், இசை, திரைப்படம், நாடகம் ஆகிய துறைகளில் மிகுந்த ஈடுபாடு உடையவராக*

விளங்குபவர். மிகுந்த தமிழ்ப்பற்று உடையவர். பிரபஞ்சன் தன்னுடைய படைப்பாற்றலால் தமிழ் இலக்கிய உலகிற்குச் சிறுகதைகளையும், புதினங்களையும், கவிதைகளையும் வழங்கியுள்ளார். மனித உணர்வுகளை யதார்த்தத்தோடு இணைத்துப் பார்க்கும் இவரது படைப்புகள் ஆழமான சிந்தனையுடனும் தெளிந்த நீரோட்டம் போன்று அமைகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கிய திறனாய்வியல், ப.68

2. இரா.சாந்தி, இலக்கிய முகங்கள்,ப.19

3. ச.வே.சுப்பிரமணியன், (எ.மே.) தமிழ் இலக்கிய வரலாறு, ப.303

4. டாக்டர் சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.27

5. த.டான்ஸ்டோனி (எ.மே.), வண்ணதாசன் சிறுகதைகளில் மனிதநேயச் சித்தரிப்பு, ஆய்வேடு, ப.11

6. மேலது, ப.11

7. மேலது, ப.11

8. கா.சிவத்தம்பி, தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.9

9. செ.மகேஷ்வரி, பிரபஞ்சன் சிறுகதைகளில் ஆண் பெண் உறவுமுறைகள் ஆய்வேடு, ப.7

10. பிரபஞ்சன் சிறுகதை தொகுதி-I, ஆசிரியரின் என்னுரை, ப.27

11. மேலது, ப.27

12. மேலது, ப.28

13. மேலது, பக்.24–25

14. மேலது, ப.24

15. சா.கந்தசாமி, 20 ஆம் நூற்றாண்டின் தமிழ்ச் சிறுகதையாசிரியர்கள் தொகுதி-II, ப.212

16. மு.சாதிக்பாட்ஷா, பிரபஞ்சனும் படைப்புகளும், ப.164

17. சா.கந்தசாமி, 20 ஆம் நூற்றாண்டின் தமிழ் சிறுகதை ஆசிரியர்கள் தொகுதி-II, ப.214

18. மேலது, ப.215

19. மேலது, ப.215

20. மேலது, ப.216

21. மு.சாதிக்பாட்ஷா, பிரபஞ்சனும் படைப்புகளும், ப.265

# 2. வாழ்வியல் நெறிகள்

வாழ்க்கை என்பது ஒரு கலை, மனித வாழ்க்கை, பண்புகளின் வாயிலாக நிர்ணயிக்கப்படுகின்றது. நல்ல பண்புகள் மனிதனை உயர்த்துகின்றன. நல்ல எண்ணத்துடன் பிறர் நலம் நாடுதலே வாழ்வின் நெறியாக அமைகின்றது. இதனை,

"வாழ்க்கையை வாழ்ந்து முழுவதும் நுகர்வது என்பது ஒரு கலை. நுண்கலைகளில் ஒன்றாக அதைக் கூறலாம். மனிதப் பண்பாட்டுக் கலைகளுடனும் அதனை ஒன்றுபடுத்தலாம். அதற்கு வாழ்க்கையின் அடிப்படைப் பண்பும் நோக்கமும் பற்றிய அறிவு வேண்டும். வாழ்க்கையின் நற்பண்புகளைப் பாராட்டி நுகர்ந்து சுவைத்து இன்பம் பெறும் சுவைத்திறம் வேண்டும். இவற்றின் மூலமே வாழ்வின் ஒவ்வொரு கூறிலிருந்தும் அதன் முழுப்பயனைப் பிழிந்தெடுத்து முழுவாழ்வின் முழுப்பயனும் திரட்டி உருவாக்க முடியும். இம்முழுப்பயனின் மரபே மனித நாகரிகமாகவும் பண்பாடாகவும் பெருக்கமுறுகிறது"[1] என மனித வாழ்க்கையைப் பற்றி அப்பாத்துரையார் விளக்குகின்றார்.

மனிதருக்குக் கிடைக்கக்கூடிய மாபெரும் வரம் வாழ்வாகும். சரியாக வாழவேண்டுமெனில் வாழ்க்கை என்றால் என்ன? என்பதையும் அதை எப்படி நெறிப்படுத்தி வாழ்வது என்பதையும் அறிந்து கொள்வது இன்றியமையாததாகும்.

இந்த இனிய வாழ்வின் குறிக்கோள் பற்றிக் காந்தியடிகள் "எளிய வாழ்க்கை வாழ்தல், உண்மையைக் கடைபிடித்தல், எல்லாரிடத்திலும் அன்பாயிருத்தல், உலகம் முழுவதற்கும் தொண்டு செய்தல், இறந்தவர்களுக்குச் சிறப்புச் செய்வதைவிட உயிரோடு இருப்பவர்களுக்கு உழைத்தல் ஆகிய இவைகளே வாழ்க்கைக் குறிக்கோள்"[2] என்கிறார்.

திரு.வி.க. மனிதன் என்பதற்கு விளக்கம் தருகையில் "ஆறாவது அறிவு விளங்கப்பெற்று அதன்வழி நிற்கும் மனிதன், தன்னுயிரைப் போலவே மன்னுயிரையும் பார்ப்பான். இரக்கமே அவன் உள்ளத்தில் குடிகொண்டு நிலவும். அவன் தனக்கென்று உலகத்தில் வாழான். தன் வாழ்க்கை மற்றவர்க்கே என்று அவன் கருதுவன். அவன் கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் ஐம்பெரும் பாவங்களுக்கு அஞ்சுவான். அவன் கரணங்களெல்லாம் அன்பு வண்ணமாகப் பொலியும். விலங்கியல்பு அவனிடத்தில் தோன்றுதல் அருமை. அன்னாள் பிற உயிர்களின் துன்பத்தைத் தன் துன்பமாகக் கொள்வான். இன்னோரன்ன இயல்புகளை மேற்கொண்டு வாழ்ந்த ஒருவனையே மனிதன் என்று கூறலாம்"[3] என்கிறார்.

இதன் அடிப்படையில் நல்ல எண்ணங்களுடன் எளிய வாழ்க்கை வாழ்ந்து, பிறர் விரும்பும் செயல்களைச் செய்பவன் நன்நெறிப்பட்டவன் ஆகின்றான். அவனின் நன்நெறிப்பட்ட வாழ்வே அவனைப் புகழுடையச் செய்கின்றது. நல்லநெறிகளைச் செய்தால் வாழ்வில் நன்மை உண்டாகும் என்பதை உணர்த்துகின்றது.

**படைப்பு இலக்கியமும் வாழ்வியலும்**

மனிதன் பின்பற்ற வேண்டிய வாழ்வியல் நெறிகளைப் படைப்பிலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. இப்படைபிலக்கியங்கள் மனித வாழ்க்கையை எடுத்துக்காட்டும் கண்ணாடியாகும். இலக்கியங்கள் படைக்கும் படைப்பாளன் தான் கண்ட மனித இனத்தின் நிகழ்வுகளைத் தன்னுடைய படைப்பிற்குக் கருவாக மேற்கொள்கின்றான். அவ்வாறு மேற்கொள்ளும் போது தன் சிந்தனையையும், முழுப்பட்டறிவையும் சேர்த்து உயர்கலை வடிவமாக்குகின்றான். இலக்கியங்களின் மூலம்

பெறப்படும் அறிவுரைகள் மனிதனுக்குச் சிறப்பான வாழ்வு நெறியினை வழங்குகின்றது.

"இலக்கியத்தின் உள்ளடக்கம் சமூகம். சமூகத்தின் உள்ளடக்கம் இலக்கியம் எனச் சமூகத்திற்கும் இலக்கியத்திற்கும் நெருக்கமான உறவு உண்டு. இரண்டையும் பிரித்துப் பார்த்தல் இயலாது. ஒவ்வொரு இலக்கியமும் அந்தந்தக்காலச் சமூகத்தைத் தன்னுள் கொண்டுள்ளது. அவ்வாறு சமூகத்தோடு நெருங்கி இருக்கிற இலக்கியம் வெறுமனே சமூகத்தின் நிகழ்வுகளை மட்டும் சொல்லிச் செல்லாது. சமூகம் நல்ல கட்டுமானத்தோடு, ஒழுங்கான நெறிகளுக்கு உட்பட்டுச் சிறப்பான வாழ்க்கையை நகர்த்திச் செல்வதற்கு அந்தச் சமூகத்திற்கு வழங்குகின்றது. இலக்கியம் சொல்கின்ற அறிவுரைகளைப் பெற்று வாழ்க்கைத் தளத்தில் சமூகம் சிறப்பான வாழ்க்கை நெறியை அமைத்துக் கொள்வதைத்தான் இலக்கியம் உணர்த்தும் வாழ்க்கை நெறி என்கிறோம்"[4] என்கிறார் க.சுஜாதா.

வாழ்வை இன்பமாக்குவது என்பது முடியாதச் செயலல்ல. முயற்சியின்றித் தானாக முற்றிலும் எளிதாக அமையும் செயலன்று. வாழ்வு நெறிகளைக் கடைபிடித்து ஒழுகுவதன் மூலமும் அப்பயிர்ச்சியின் வழி வாழ்க்கை இன்பமாக அமையும் என்பது உறுதி. வாழ்க்கையைக் கடமையுணர்ச்சியுடன் கொண்டு வாழ்வதன் மூலம் வாழ்வில் வெற்றியடைய முடியும். வாழும் வகை தெரிந்தவர்கள் நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் மூன்றையும் திட்டமிட்டு நுகர்ந்து புகழடைகின்றான். இவ்வாழ்க்கையின் கலைக்கூடமாக வீடு அமைகின்றது. அமைதி ஒழுங்கு, இன்பநலம் ஆகியவை வீட்டில் தொடங்கி வீட்டிலேயே பேணப்படுகின்றன. மக்களின் இவ்வாழ்க்கையை வெளிப்படுத்தும் கண்ணாடியாகச் சிறுகதைகள் அமைகின்றன.

மக்களது அன்றாட வாழ்க்கையைப் பிரதிபலிப்பதில் முக்கிய இடம் வகிப்பது சிறுகதைகள் ஆகும். இலக்கியப் படைப்பாளி, தன் காலச் சமுதாயத்தின் சூழல், அதில் நடைபோடும் மனிதர்தம் இயல்புகள், அவர்தம் கருத்துக்கள், அவர்தம் விருப்பு, வெறுப்புகள், அவர்தம் நாகரிகக் கூறுபாடுகள் ஆகியவற்றைத் தம் சிறுகதைப் படைப்பின் வழி வெளிக்கொணர்கின்றான். இங்ஙனம் படைக்கப்படும் சிறுகதைப் படைப்பிலக்கியங்கள் யாவும் சமுதாயத்தின் உணர்வுகளோடும், உண்மைகளோடும் பிறக்கின்றன. இவற்றின் அடிப்படையில் சிறுகதை படைக்கும் படைப்பாளிகள் மனிதனுக்கு உரிய வாழ்வியல் நெறிகளைப் பிரதிபலிக்கும் வகையில் தமது படைப்புகளை அமைக்கின்றனர். இதனை,

"சிறுகதையின் உள்ளடக்கமாக எதுவும் அமையலாம். கலைஞனின் ஆழமான வாழ்க்கை நோக்கும் சமூக உணர்வும் இணைந்து புதிய புதிய உள்ளடக்கங்களை இக்காலச் சிறுகதைகள் பலவற்றில் காணலாம்"[5] என்கிறார் சு.வேங்கடராமன்.

படைப்பிலக்கியங்கள் யாவும் வாழ்க்கையின் பிரதிபலிப்பாக அமைகின்றன. சிறுகதைகளின் நோக்கும் போக்கும் கால மாற்றத்திற்கேற்ப வளர்ச்சியடைந்து வருகின்றன. சிறுகதைகள் மூலம் வலுவான கருத்துக்களை வாழ்வியல் நெறிகளைச் சமூகத்திற்குச் சொல்ல முடியும் என்பதைப் பல சிறுகதைப் படைப்பாளர்கள் நிரூபித்துள்ளனர். சிறுகதை எழுதும் கலைஞர்கள் தங்கள் அனுபவங்களைச் சாட்சியாகக் கொண்டு வாழ்க்கை நெறிகளை வெளிப்படுத்தும் வகையில் சிறுகதையைப் படைக்கின்றனர்.

கலைஞர்கள் தம் கலையை மக்களின் வாழ்க்கை மேம்பாட்டிற்காகப் படைக்கின்றனர். சமுதாயத்தில் காணும் வாழ்க்கைச் சிக்கலைத் தமது சிறுகதைகளோடு இணைத்துப் படைக்கின்றனர். அவற்றின் மூலம்

அச்சிக்கல்களை நீக்கி மக்கள் வாழ்க்கையில் நன்னிலை எய்திடப் பல வாழ்க்கை நெறிகளையும் சேர்த்தே படைக்கின்றனர். அத்துடன் வாழ்க்கை பற்றிய தம் கண்ணோட்டத்தையும் அதில் பதிவு செய்கின்றனர் எனலாம். அந்தவகையில் பிரபஞ்சன் தமது சிறுகதைகளில் பதிவு செய்துள்ள வாழ்வியல் நெறிகளை இவ்வியல் ஆராய முற்படுகிறது.

நெறி என்பதன் விளக்கமாக வழி, நீதி, ஒழுங்கு, வளைவு என தமிழ்ப் பேரகராதிப் பொருள் விளக்கம் கூறுகின்றது. இவற்றிலிருந்து வாழ்க்கையில் கடைபிடிக்கக்கூடிய வழிமுறைகள், நீதி நல்ல ஒழுக்கம், ஏற்ற இறக்கங்களுக்குத் தன்னைத் தயார் படுத்திக் கொள்ளுதல் வாழ்வியல் நெறிகளாக இங்கு அமைவதை அறியமுடிகின்றது. இதனை,

> "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப்படும்"[6]

என்னும் திருக்குறள் வழி அறியலாம். இதில், உலகில் வாழ வேண்டிய நெறிப்படி வாழ்கின்றவன், வானுலகில் வாழும் தேவர்களுள் ஒருவனாக மதிக்கப்படுவான் என்கிறார் திருவள்ளுவர்.

திருநாவுக்கரசர் தமது தேவாரப் பாடலின் மூலம் வாழ்க்கைக்குத் தேவையான நெறிகளை எடுத்து வைக்கிறார்.

> "மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்தி,
> பொய்மையாம் களையை வாங்கிப் பொறை எனும் நீரைப்பாய்ச்சித்
> தன்மையுள் நோக்கிக் கண்டு தகவு எனும் வேலியிட்டுச்
> செம்மையுள் நிற்பாராகில் சிவகதி விளையுமன்றே"[7]

இதில் மெய்மை என்னும் உழவைச் செய்து விருப்பம் என்னும் விதையை விதைத்து, பொய்மையாகிய களைகளை நீக்கிப் பொறுமை என்னும்

நீரைப்பாய்ச்சி, தம்மை உள்ளே தாமே நுனிகிப் பார்த்து நடுவு நிலைமை என்னும் வேலியை அமைத்துச் சான்றாண்மை என்னும் செம்மைப் பண்பில் நின்றால் சிவகதி (நற்கதி) அடையலாம் என்று பாடியுள்ளார். இவற்றின்வழி மனிதனின் நல்வாழ்க்கைக்கு மிக அவசியம் நல்ல உண்மை முதலான சிறந்த பண்புகளைக் கடைபிடித்து ஒழுகுதலே ஆகும் என்பதை எடுத்துரைக்கின்றது.

**பிரபஞ்சனின் சிறுகதையில் வாழ்வியல் நெறிகள்**

மிகச் சாதாரணமான மனிதர்களைப் பாத்திரங்களாக வைத்துச் சிறுகதைகளைப் படைத்த பிரபஞ்சன், அவர்களின் வாழ்க்கைப் போக்குகளையும், வாழ்வின் பல்வேறு நெறிகளையும் அமைத்துள்ளார். பிரபஞ்சன் சிறுகதைகளில் அன்பு, மனிதநேயம், இல்லற வாழ்வு, அறம், தியாக மனப்பான்மை, நாட்டுப்பற்று, முதுமையைப் போற்றுதல், தீண்டாமையை எதிர்த்தல், அரசியல் நிலை, கல்வி போன்ற நெறிகளைத் தனது படைப்பின் வழி வெளிப்படுத்தியுள்ளார். பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–ஒன்றில் அமைந்த தொன்னூறு சிறுகதைகளுள் வாழ்வியல் நெறிகளை வெளிப்படுத்தும் சிறுகதைகள் ஐம்பத்து எட்டு ஆகும்.

**அன்பு**

அன்பு என்ற சொல்லை “பற்று, பாசம், அருள், காதல், நட்பு, பக்தி, கருணை, நேயம் எனப் பல சொற்களில் வழங்கலாம். தமிழ்ப் பேரகராதி நேயம், நேசம் என்ற சொற்களுக்கும் அன்பு என்று பொருள் தருகின்றது”[8] நேயம் என்ற சொல்லுக்கு இணையாக Love, affection, piety, devotion எனப் பல ஆங்கிலச் சொற்களும் வழங்கி வருகின்றன.

அமைதியான வாழ்க்கைக்கு அடிப்படையாய் அமைவது அன்புடைமை. குடும்பத்தில் பல்வேறு குணம் படைத்தவர்கள், மாறுபட்ட

எண்ணங்கள் கொண்டவர்களைக் காண்கிறோம். அப்படி பல்வேறுபட்ட குணநலம் கொண்டவர்களைப் படைத்த ஆசிரியர் அவர்களுள் அன்புள்ளம் கொண்டவர்களையும் படைத்துள்ளார்.

"அன்பிலார் எல்லாந் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"[9]

என்பார் திருவள்ளுவர்.

"ஒரு மனிதன் இடம், கருத்து முதலியன பற்றிய ஆழ்ந்த அன்பு 'நேயம்' எனக் கருதப்படுகிறது. இது ஓர் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையில் இருக்கும் உறவைக் குறித்து முதற்கண் எழுந்தது. பின்னர் நாட்டன்பு, இசையன்பு, பிள்ளையன்பு, கடவுளன்பு"[10] எனவும் வழங்கப்பட்டது.

அன்பு என்ற உயரிய ஓர் உளநெகிழ்வைப் பின்வரும் படிநிலைகளாகக் காணலாம்.

1. "பெற்றோர்க்கும் குழந்தைக்கும் உள்ள அன்பைப் பற்று, பாசம் என்றும்
2. கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள அன்பை காதல், காமம் என்றும்
3. குருவிற்கும் சீடன் இடையே உள்ள அன்பை பக்தி, மரியாதை என்றும்
4. இறைவனுக்கும், மனிதனுக்கும் உள்ள அன்பை அருள் என்றும்
5. மனிதனுக்கும் பிற உயிர்களுக்கும் உள்ள அன்பை அருள் என்றும்
6. ஒத்தவயதுடையோர் கொள்ளும் அன்பை 'நட்பு' என்றும்"[11]

குறிப்பிடுவர்.

அன்பு என்னும் விழுமியத்தை கு.ப.ரா. சிறுகதைகளில் காணலாம். அவர் தமது 'சபரியின் பிரேமை'யும் என்னும் சிறுகதையில் முற்றும் துறந்த முனிவரும் உண்மை அன்பிற்கு அடிபணிவர் என்ற உண்மையை வலியுறுத்துகின்றார். இக்கதையின் முடிவில் மதங்க முனிவர் சபரியிடம் கூறும் சொற்கள் ஆழ்ந்த தத்துவப் பொருளை உணர்த்துகின்றன.

"அன்பும் இரக்கமும் சேவையும் தான் உடலை உறுதியாகச் செய்யும் என்று இப்போது அறிகிறேன். அவை தான் சிரஞ்சீவித்துவம் அளிக்கும். நீ சிரஞ்சீவினி! என்னுடைய பிராணனைத்தொட்டு அன்பால் சற்று இளக்கு! அந்தப் பாத்திரத்திலிருக்கும் சுத்த ஜலத்தை உன்கையால் என்மேல் தெளி! பிரேமையற்ற வரட்சி என் அந்திம தாகமாக என்னைத் தகிக்கிறது. உன் கையால் என் வாயில் ஜலம் ஊற்றி என் மரணதாகத்தை நீக்கு! 'சவ தமோரஸ' என்று ஞான விருத்தர்கள் வர்ணித்த இந்த ஜலத்தின் மூலம் நமக்கு ஐக்கியம் ஏற்படட்டும்"[12] என்கிறார். பெண்ணின் தூய அன்பு தான் ஆணை – அவன் எத்தகைய உயர்ந்த நிலையில் இருந்தாலும் – இளக்கிப் பதப்படுத்தி வைக்கிறது என்பதும் தத்துவத்தைவிடவும் அன்பு போன்ற உயர் குணங்களே உடலை உறுதியாக வைத்திருக்கத்தக்க சக்தியைப் பெற்றவை என்பதை இச்சிறுகதையின் மூலம் உணர்த்துகின்றார்.

ஒரு மனிதன் மற்ற மனிதன் மீது அன்பு செலுத்துதல் இயல்பு. அதே மனிதன் மரத்தின் மீது அன்பு செலுத்துதல் என்பது அரிது. இந்த அரிதான அன்பு என்னும் விழுமியத்தை பிரபஞ்சன் 'பிரும்மம்' என்ற சிறுகதையில் விளக்குகின்றார். ஒரு முருங்கை மரத்தைத் தனது தங்கையோடு ஒப்பிட்டுக் காட்டுகின்றார். முருங்கை வளர்ந்து நின்ற காட்சி தனது தங்கை வளர்ந்து நின்றதை அவருக்கு நினைவுபடுத்துகின்றது.

இந்த அன்பு வெளிப்பாடு 'பிரும்மம்' என்னும் சிறுகதையில் "நான் சைக்கிளை எடுத்துக் கொண்டு வேலைக்குப் புறப்படுகையில் அது கையை அசைக்கும், பேசுவதாய் இருக்கும். எங்கள் சம்பாஷனைக்கு வார்த்தை அவஸ்யப்படவில்லை. ஒலி இன்றியமையாமை இல்லை. உணர்வுகள் போதுமானவையாய் இருந்தன. இமைகள் உதடுகளாகிப் போயின"[13] என்கிறார். இதில் 'அது' என்று தான் அன்பு கொண்ட முருங்கை மரத்தைக் குறிப்பிடுகின்றார். இதில் தன் வீட்டின் முன் வளர்ந்துள்ள முருங்கை மரத்தின் மீது காட்டும் அன்பு மனிதர்களிடத்தில் அன்பு செலுத்துவது போன்ற நிலையைக் காணமுடிகின்றது.

தன் உறவுகள்மீது கொண்டிருக்கும் அன்பு யதார்த்தமானது. மற்ற பழகிய மனிதர்கள் மீது வைக்கப்படும் அன்பு சிறப்பானது. 'சூரியனைப் பார்க்காமல்' என்னும் சிறுகதையில் பள்ளிக்கூடத்திற்கு முன் மிட்டாய் விற்கும் தாத்தாவின் மீது அன்பு வைத்திருக்கிறான் 'வைத்தியலிங்கம்' என்கின்ற மாணவன். பள்ளிக்கூட லீவு முடிந்ததும் மிட்டாய்த் தாத்தாவைப் பார்க்கப் போகிறோம் என்று மகிழ்ச்சியடைகிறான். இதனை,

"லீவு நாட்கள் முடிந்து பள்ளிக்கூடம் தொடங்கும் நாள் நெருங்க, நெருங்க மீண்டும் பள்ளிக்கூடம் போகவேண்டுமே என்கிற விசாரம் என்னைப் பிடித்துக் கொள்ளும். லீவை அனுபவிக்கவே தோன்றாது. அந்த விசாரத்துக் கூடேயும் லீவு முடிந்தால் தாத்தாவை பார்க்கப் போகிறோம் என்கிற சந்தோஷமும் வராமல் இருக்காது"[14] வைத்தியலிங்கம் தனது தாத்தா வீட்டிற்குச் சென்றிருந்த போதும் மிட்டாய் விற்கும் தாத்தாவின் மீது கொண்டிருந்த அன்பை வெளிப்படுத்துகின்றது.

இவ்வுலகில் யாரும் அநாதை இல்லை. அனைவரும் உறவுடையவர்கள் என்பதையும் அனைத்து மனிதர்கள் மீதும் அன்பு

செலுத்த வேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு 'அரி என்கிற நண்பன்' என்கிற சிறுகதையின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

"தான் ஓர் அநாதை என்று என்னிடம் அரி சொன்னான். அந்த வார்த்தையின் முழுப்பொருள் தெரியாமலேயே அப்போது 'ஓகோ' என்று தலையை ஆட்டி வைத்தேன். இதை எழுதும்போது தோன்றுகிறது. இத்தனை கோடி மனிதர்கள் வாழ்கிற இந்த உலகத்தில் யார் தான் அநாதையாக இருக்க முடியும்? எல்லோரும் இல்லாமல் ஆகி, தன்னந் தனியனாக வாழ நேர்கிற அந்தக் கடைசி மனிதன் தானே அநாதையாக இருக்கமுடியும்"[15] எனக் கேட்பதின் மூலம் இவ்வுலகில் உள்ள மனிதர்கள் அனைவரின் மீதும் அன்பு கொண்டவர் பிரபஞ்சன் என்பதை உணரமுடிகின்றது.

தன் மனைவி மீது அன்பு கொண்ட கணவனை 'சுமதிக்கு ஒரு கடிதம்' என்னும் சிறுகதையின் மூலம் காணலாம். தன் மனைவி சுமதி எழுதிய கடிதத்திற்குப் பதில் கடிதத்தில் கணவன் எழுதும் வார்த்தைகள் உறவைப் பலப்படுத்தும் விதத்தில் அமைகின்றன. இதனை,

"என் அன்பான சுமதிக்கு. உன் கடிதம் இப்போது என் கைகளில், இன்று வருமோ, நாளைக்கு வருமோ என்று வருமோ என என் ஊனும் உயிரும் விழித்திருந்து எதிர்பார்த்த உன் கடிதம் இப்போது என் கைகளில், என் கைகளுக்குள் நீயே இருப்பதாக ஓர் எண்ணம், தப்பில்லையே! கடிதங்கள் மனிதர்களின் வேறு வடிவங்கள்"[16] என்பதிலிருந்து கிருஷ்ணமூர்த்தி மனைவி மீது கொண்ட அன்பினைக் காணமுடிகின்றது. இதன்மூலம் கணவன் மனைவி ஒருவர் மீது ஒருவர் வைத்திற்கும் அன்பு அவர்கள் வாழ்வு மேம்பட உதவும் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு பசுவின் மீது அன்பு கொண்ட அறுபத்து ஏழு வயது முதியவளின் பாசத்தின் சிறப்பை 'மனுஷி' என்னும் சிறுகதையில்

உணர்த்துகின்றார். இக்கதையில் 'லட்சுமி' என்கிற பசுவைக் கண்ணும் கருத்துமாக வளர்த்துவருகிறாள் அம்மா. அவள் ஒரு நாள் ஊருக்குச் சென்றிடவே அப்பசு தவிக்கின்றது. ஊரிலிருந்து திரும்பி வந்த அம்மாவும் பசுவைப் பார்த்தவுடன் தான் பெற்ற குழந்தைகளை விட்டுச் சென்றது போல் ஆவலுடன் வந்து பசுவை அனைத்துக் கொள்கின்றார். இந்த உணர்ச்சிப் போராட்டத்தை,

"அம்மா ஊரிலிருந்து வந்து பையைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தாளோ இல்லையோ, லட்சுமி தும்பை அறுத்துக் கொள்ளும் ஆவேசம் கொண்டு அலற ஆரம்பித்தது. அம்மா ஓடோடியும் போய், அதை அணைத்துக் கொண்டு தடவிக் கொடுத்தாள்"[17] என்று வர்ணிக்கின்றார்.

ஒரு மனிதன் மற்ற மனிதன் மீது செலுத்தும் அன்பைப் போலவே தன்னைச் சுற்றியுள்ள பறவை, விலங்குகள் மீதும் அன்பு கொள்வது மனித மனத்தை வளப்படுத்தும் என்று பிரபஞ்சன் சிறுகதை வாயிலாக எடுத்துரைக்கின்றார். )

கிளியின் மீது கொண்ட பாசத்தால் அதற்கு உணவு கொடுக்கக்கூட வழி இல்லையே என வருத்தப்படும் பெரியசாமி நாயக்கரை 'சினேகம்' என்னும் சிறுகதையில் காணமுடிகிறது. இச்சிறுகதையில் கிளி ஜோசியம் பார்க்கும் பெரியசாமி நாயக்கர் தன் பசியைப் போக்கிக் கொள்ளக் காசில்லாமல் துன்பப்படுகிறார். தன் நிலையை எண்ணி நொந்து கொள்கின்றார். ஒரு டீ, வடை சாப்பிட்டால் கூட தன் வயிற்றுப் பசி போய்விடுமே அதற்கும் காசில்லையே என்று வருத்தப்படுகின்றார். திடீரென கிளியின் ஞாபகம் வரவே அதனிடம் உன் ஞாபகம் எனக்கில்லையே என்று தன் தவற்றைக் கிளியிடம் கூறுகின்றார்.

“உம்... பாத்தியா... நான் என்னைப் பத்திதானே, என் வவுத்துப் பசியைப் பத்திதானே நொந்துகிட்டு இருக்கேன்... உன்னைப் பத்தி என்னடா ஒரு உசுரு ஜென்மம் பக்கத்துல குந்திக்கிட்டு கிடக்கேன்னு யோசிச்சுப் பார்த்தன...”[18] என்கிறார். இது கிளியை வைத்துப் பிழைப்பு மட்டும் நடத்தாமல் அதை உண்மையான பாசத்தோடும் பரிவோடும் உள்ளன்போடும் பராமரித்து வரும் பெரியசாமி நாயக்கரின் உன்னதமான அன்பை உணர முடிகின்றது.

‘பங்காளிகள்’ என்னும் சிறுகதையில் புதிதாகக் குடிவந்த வீட்டின் பரண் மீது இருந்த குருவிகள் பரந்துவிடும் என்பதற்காக அப்பரண் மீது இருந்த எந்தப் பொருளையும் எடுக்கக் கூடாது என்கிறாள் சுமதி. “உஸ்... அதைத் தொடாதீங்க அதுங்க பயந்துடும்”[19] என்கிறாள். மனிதன் வாழுமிடத்தில் பறவைகளுக்கும் இடம் கொடுக்கும் அன்புள்ளம் சுமதியிடம் உள்ளதை அறிய முடிகின்றது. இதைப்போல தன்னைக் கன்னத்தில் அறைந்த மகனை அன்புள்ளத்தோடும் சற்று வேதனையோடும் நோக்கிய தந்தையை ‘அந்த மனிதர்’ என்னும் சிறுகதையில் காணலாம். தனக்கு மவுத்ஹார்கன் வாங்கித் தராத தந்தையை மகன் அறைந்துவிடுகின்றான். தந்தையோ திருப்பி எதுவுமே செய்யாமல் விட்டுவிடுகின்றார். மாறாக வீட்டிற்கு வந்ததும் மனைவியிடம் மகனுக்கு முட்டையும் பாலும் கொடுத்து கவனிக்கும்படிக் கூறுகின்றான். இதைக்கேட்ட மகன் தன்மீது கொண்ட தந்தையின் அன்பை எண்ணி நெஞ்சுருகிப் போகின்றான். இதனை,

“எனக்கு அப்போது அந்த மிருக உணர்ச்சி எப்படி ஏற்பட்டது என்று விளங்கத்தான் இல்லை.

ஓங்கி அப்பாவின் கன்னத்தில் அறைந்தேன்.

அப்பா கன்னத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டே என்னைப் பார்த்துச் சிரித்தார்"[20] என்கிறான்.

இது அன்பின் உச்சநிலையினைக் காட்டுகின்றது. இது எப்படிப்பட்ட அரக்கக் குணம் வாய்ந்தவர்களையும் அன்பு என்ற ஆயுதத்தால் மாற்றிவிடலாம் என்பதைப் புலப்படுத்துகின்றது.

தன் அப்பாவின் மீது கொண்ட மரியாதை கலந்த அன்பை 'அப்பாவின் வேஷ்டி' என்னும் சிறுகதையின் மூலம் அறியலாம். இச்சிறுகதையில் தன் தந்தை இறந்த பின்பும் அவரின் பழைய வேஷ்டியைக் கட்டி மகிழும் மகனைப் படைத்துள்ளார்.

"வேஷ்டியை வெளியே எடுத்தேன். அதன்மேல் சுற்றிய துண்டை நீக்கினேன். அதே குழந்தையின் மென்மை, அதே கத்தியின் பளபளப்பு, அதே வாசனை கொஞ்சம் கூட நிறம் மங்கல் இல்லை. இடுப்பில் சுற்றிக் கொண்டேன். மனசு அப்பாவை நினைத்துக் கொண்டது"[21] என்பதிலிருந்து தந்தையின் மீது கொண்ட பரிபூரண அன்பினைக் காணலாம். இதோபோல் "சிக்கி"[22] என்னும் சிறுகதையில் மூர்த்தியும் அவனின் மனைவியும் தங்கள் வீட்டில் வளர்க்கும் நாய் ஒன்றிற்காக மாடியில் கூரை நிழலில் இடம் ஒன்றை ஏற்பாடு செய்து, மழை வெயில் படாமல் அதைப் பாதுகாத்து, பழஞ்சாக்கு விரித்து, சாப்பாட்டிற்குத் தட்டு, பால்கிண்ணம், அதற்கெனச் சமையல் செய்யத் தனிப்பாத்திரம் போன்றவற்றை ஏற்பாடு செய்து, அந்நாயின் மீதுத் தனிக்கவனம் செலுத்தி பாசமுடன் வளர்ப்பதைக் காணமுடியும்.

தன்னைக் கடிக்க வந்த நாயின் மீது கதாநாயகன் கொண்ட அன்பினைப் "பகை"[23] என்னும் சிறுகதையில் காணலாம்.

மனிதன் மனிதனிடமும், பிற உயிரினங்களிடமும் காட்டுகின்ற அன்பு நெறியினைச் சிறுகதைகள் மூலம் உணர முடிகின்றது. மனித வாழ்வை இன்பமுடையதாக ஆக்கும் வலிமை அன்பிற்கு உண்டு என்பதையும் தனது சிறுகதையின் வழி மக்களுக்கு உணர்த்துவதைக் காணமுடிகின்றது.

**மனிதநேயம்**

மற்றவர்களுடன் நட்புக்கொள்ளுதல், அன்பினை வளர்த்துக் கொள்ளுதல், சுயநலமின்மை போன்றவை மனிதநேயப் பண்புகள் எனப்படுகிறது. இவ்வகையில் அமைந்த பிரபஞ்சனின் சிறுகதை மனிதநேயப் பாத்திரங்கள் நெஞ்சுருக வைக்கின்றது. இவ்வுலகத்தில் காணாமல் போன மனிதநேயத்தைப் பிரபஞ்சன் தனது சிறுகதையின் மூலம் படைத்துக் காட்டுகின்றார். மனிதர்கள் ஒருவர் மீது ஒருவர் அன்பு செலுத்தி வாழ்வதே வாழ்வின் நோக்கமாகும். இதுவே மனிதநேயத்தின் அடிப்படையுமாகவும் அமைகின்றது.

“மனிதநேயம் என்பது வெறும் மனிதாபிமானம் மட்டுமன்று, மனிதனுடைய எல்லையில்லாத எல்லைகாட்ட இயலாத முழுமையான அறிவாற்றலும் ஆன்மீகச் செல்வமும் மனிதனுடையப் பண்புகளும் ஆகிய இவையணைத்தையும்”[24] தன்னுட்கொண்டது.

மனிதாபிமானம் என்பது “மனித நலத்தில் அக்கறை காட்டல், அவனுடைய பன்முக வளர்ச்சியில் சமுதாய நல வாழ்வுக்கும் சுகமான சூழ்நிலையில் உண்டாக்கிக் கொடுத்தல் போன்றவற்றைக் குறிப்பது. சுருங்கச் சொன்னால் ‘யாம் பெற்ற இன்பம் பெரு இவ்வையகம்’ என்றும் ‘எல்லோரும் இன்புற்று இருக்க வேண்டும் என்று கருதும் மனப்பான்மையாகும்.”[25]

“மன்னுலகத்தில் வாழும் மக்களெல்லாம் சாதி, மத, இன பேதமில்லாமல் சமாதானம், உழைப்பு, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், மகிழ்ச்சி என்பன மனித நேயக் கொள்கைகளாகும்.”[26] மேற்கண்ட கருத்துக்களின் வழி மனிதநேயம் என்பது மனிதனின் நலம் பேணுவதைக் குறிக்கோளாகக் கொண்டது என்பது தெளிவு.

‘மாமன் உறவு’ சிறுகதையில் வரும் கதாநாயகியின் அப்பா மாமனை மகனாகப் பாவித்து வளர்க்கிறார். வளர்ந்த பின்பு மாமன் நன்றி கெட்டவனாக மாறுகிறான். அவனுக்கு வசதி வாய்ப்பு இருந்தும் தன்னை வளர்த்தவரைப் புறக்கணித்து விடுகின்றான். “அப்பாவோ... ஒருத்தனிடம் பணம் இருந்தா நமக்கு அதை தரணும்னு விதியா? நான் அவனுக்குச் செஞ்சது ஒரு தகப்பன் மகனுக்கு செய்யற மாதிரிதான் – கடன் இல்லே. அதை அவன் திருப்பி அடைக்க வேண்டிய கட்டாயமில்லே”[27] என்ற கூற்றிலிருந்து மனிதநேயச் சிந்தனை வியக்கவைக்கின்றது. இதன்மூலம் மனிதன் செய்யும் உதவிக்கு கைமாறாக எதிர்பார்ப்பது நியாயமற்றது என்பதை அப்பாவின் கூற்று புலப்படுத்துகின்றது.

கிருஷ்ணமூர்த்தியின் மனிதாபிமானக் குணத்தை ‘ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்’ என்னும் சிறுகதையில் காணமுடிகிறது. கிருஷ்ணமூர்த்தியிடம் கடனாக வாங்கிய பணத்தை நீண்ட நாளாகியும் திருப்பித்தராமல் இருக்கிறான் கோபால். அப்பணத்தைத் திருப்பிக் கேட்கத் தயங்குகிறான் கிருஷ்ணமூர்த்தி. கிருஷ்ணமூர்த்தியிடம் வேலைபார்த்த ரங்கசாமி என்பவன் ஒருநாள் கோபாலுவை திரை அரங்கில் பார்த்து கிருஷ்ணமூர்த்தி அண்ணனிடம் கடன் வாங்கிய பணத்தை எப்பொழுது கொடுக்கப்போகிறாய் என்று கேட்டு அவனைத் திட்டி அனுப்பினான். அதைக்கேட்ட கிருஷ்ணமூர்த்தி கோபாலுவிற்காக இறக்கப்படுகின்றான்.

“நீ இப்படி அவனை அசிங்கப்படுத்தியிருக்கக் கூடாது என்றான் கிருஷ்ணமூர்த்தி. இதாண்ணே உங்கிட்ட கஷ்டம். உனக்குப் பிழைக்கத் தெரியல்லே. இவனுங்கிட்ட எல்லாம் மரியாதை பார்த்தா பிச்சை எடுக்கவிட்டுடு வானுங்க”[28] என்கிறான் கோபாலு.

இச்சிறுகதையில் தனக்கு வறுமை நிலை என்ற போதும் தன்னிடம் கடன் வாங்கியவனிடம் பணம் கேட்காமல் அவனுக்காக இறக்கம் கொள்ளும் மனித நேயப் பண்பு கொண்ட கிருஷ்ணமூர்த்தியைக் காணமுடிகின்றது. ‘ஆண் பிள்ளை’ என்னும் சிறுகதையில் காதலில் ஏமார்ந்துத் தாய்மையடைந்த செண்பகாவை கிச்சான் ஏற்றுக் கொள்கிறான். இதற்கு அவன் கூறும் காரணம் கல்லான மணத்தையும் கலங்க வைக்கக்கூடியது.

“அந்தப் பொண்ணோட வாழ்க்கை என்னவாறது? ஒண்ணு அவ செத்துப்போவா அல்லது கெட்டுப்போயி தெருவிலே நிப்பா. அது நமக்குத்தானே கேவலம்? ஒரு சினேகிதியா, அவளோட பழகிட்டேன். சரி, என் மிச்ச வாழ்க்கையை அவளோட சேர்ந்து அவளுக்கு நான் துணையா, எனக்கு அவ உதவியாக இருந்துடுவோம்னு தீர்மானிச்சிட்டோம்”[29]

கோலம் போடுதல் முதலிய பெண்கள் செய்யும் வேலைகளை கிச்சான் செய்வதால் அவனைப் ‘பொட்டைப்பயல்’ என்று கேலி செய்தவர்களுக்கு தான் ஒரு சரியான ஆண் பிள்ளை என்பதைச் செண்பகாவை திருமணம் செய்ததின் மூலம் நிரூபித்துக் காட்டுகின்றான். இதன்மூலம் இச்சிறுகதையில் வரும் கிச்சானின் மனிதநேயம் அதிர வைக்கின்றது.

‘குழந்தைகள்’ என்னும் சிறுகதையில் வரும் வாசு என்பவரிடம் வீணை படிக்கவருகிறார்கள் இரு நண்பர்கள். அவர்களில் ஒருவனுக்கு அவர் மகள் விதவை ஜானகியிடம் நாட்டம், காதல் கடிதம் கொடுக்கிறான்.

கடிதம் வாசுவிடம் போய்விடுகிறது. அவர் இளைஞர்களிடம் அவர்கள் செய்தது இயற்கையே என்றாலும் ஜானகிக்கு நேரக்கூடிய அவமானத்தைச் சொல்கிறார். மீண்டும் வீணை கற்க கடித மூலம் அழைக்கிறார். இதனை,

"ஒரு வாலிபன் இந்த மாதிரி ஒரு கடிதம் கொடுத்தான்னா, அது என்னவாய் இருக்கும்னுகூட அந்தக் குழந்தைக்குத் தெரியல்லே. அவளுக்குப் போய் இப்படி எழுதிட்டீங்களே? சே, சே! இதைத் தப்புன்னு சொல்லமாட்டேன். எந்தப் புருஷனுக்கும் ஒரு பெண்ணைப் பார்த்து இந்த மாதிரி கேட்கிற உரிமை உண்டு. அந்தப்படிக்கு நீங்களும் கேட்டுட்டீங்க. ஆனால் இதையெல்லாம் புரிஞ்சுக்கிற பக்குவத்திலே அந்தக் குழந்தை இல்லியே.... நான் உங்களைப் பத்தி ஒண்ணும் நெனச்சுடலை. நீங்க தொடர்ந்து வந்திட்டிருக்கணும்"[30] என்று கூறுவதிலிருந்து வாசுவின் மனிதநேயம் பிரமிக்க வைக்கிறது. தன் விதவை மகளுக்குக் காதல் கடிதம் கொடுத்தவனையே மன்னிக்கக்கூடிய உன்னதமான மனிதனைத் தன் சிறுகதையில் பிரபஞ்சன் படைத்துள்ளதைக் காணமுடிகிறது.

"அப்பாவு கணக்கில் 35 ரூபாய்"[31] என்னும்சிறுகதையில் வரும் ஆசிரியர் முன்பின் தெரியாத அப்பாவு என்பவனின் மீது இறக்கம் கொள்ளும் மனிதநேயப் பண்பினையும், "கருணையில் தான்"[32] என்னும் சிறுகதையில் 'சுமதி' என்னும் பெண்ணைப் பலாத்காரம் செய்து கொன்ற 'தண்டபாணி' என்பவனைக் கொலை செய்த 'கேசவனை', 'தேவராஜ்' என்னும் காவல்துறை அதிகாரி கைது செய்கிறான். 'கேசவனை' விசாரணை என்னும் பெயரில் நாளை சித்ரவதை செய்யப் போகிறார்கள் என்று எண்ணி வருந்துகிறான் 'தேவராஜ்'. அந்தச் சித்திரவதைக்கு அவன் ஒரேயடியாகச் சாவதே மேல் என்று நினைத்த தேவராஜ் கேசவனைச் சுட்டுக்கொள்கிறான்.

உயர் அதிகாரியிடம் தப்பி ஓட நினைத்தான் சுட்டுட்டேன் என்கிறான். இதன் மூலம் காவல்துறை அதிகாரியின் மனிதநேயம் வெளிப்படுகின்றது. குற்றவாளி என்றாலும் அவனுக்கு ஏற்படவிருக்கும் துன்பத்தைக் கண்டு உள்ளம் வெதும்பிய காவல்துறை அதிகாரியின் மனிதநேயம் வியக்க வைக்கின்றது.

"மரி என்கிற ஆட்டுக்குட்டி"[33] என்னும் சிறுகதையில் வரும் தமிழாசிரியர், தந்தையும் தாயும் வேறுவேறு திசையில் செல்ல மரி என்பவள் ஆதரவற்று நிற்கிறாள். அவளுக்கு ஆதரவு தருகிறார். இதில் தமிழாசிரியரின் மனிதநேயப் பண்பு வெளிப்படுகின்றது என்பதை ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார்.

இவ்வாறாக அனைத்து மனிதனுக்குள் இருக்கும் மனிதத் தன்மையை வெளிக்கொணர்கின்றது. மனிதனை மனிதன் கொன்று பலி தீர்க்கும் இக்கால கட்டத்தில் மனிதத்துவம் சமுதாயத்தை நெறிப்படுத்தும் சிந்தனைப் போக்காக பிரபஞ்சன் தமது சிறுகதைகள் வழி எடுத்தியம்புகிறார்.

**இல்லற வாழ்வு**

பழந்தமிழர் குடும்ப வாழ்வு பற்றி மிகவும் உயர்ந்த கொள்கைகளைக் கொண்டிருந்தனர். அவர்கட்கு அறம் என்பது ஒரு பகுதியன்று. வாழ்வு முழுவதுமே அறமாகும். எனவேதான் குடும்ப வாழ்க்கையை இல்லறம் என்றனர்.

மனித சமுதாயம் பன்நெடுங்காலமாகப் பண்பட்டு வந்ததின் வழியே இல்லறம் ஆகும். இல்லறம் என்பது இல்லின் கண் நிகழும் அறம் ஆகும். அறம் என்று சிறப்பாகச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையேயாகும்; அதுவும் பிறர் பழிக்கும் நிலையில் இல்லாமல் நேர்மையுடனும் சிறப்புடனும்

வாழ்வதே புகழுடைய வாழ்க்கையாகும். அவ்வாறாக வாழும் வாழ்க்கை இன்பம் நிறைந்ததாக அமையும். அதுவே இல்வாழ்வின் பயனாக அமைகின்றது.

"வாழ்வின் பயனே இன்பம். வாழ்நாள்களில் இன்னல் வந்துற்ற போது, உள்ளம் தளராது, எல்லாம் நன்மைக்கென நம்பிக்கை கொள்வதோடு, அதனை இன்ப வாழ்வுக்கு அடிப்படையாகவும் கொள்வர் மேலோர்"[34] என்பர் அண்ணல் சுப்பிரமணியனார்.

இக்கருத்திலிருந்து வாழ்க்கையில் துன்பம் ஏற்படும்போது அவற்றை எதிர்த்து நின்று வெற்றி பெறுபவர்கள் சான்றோர்கள் ஆவர் என்பது தெளிவு.

கணவன் மனைவியாக வாழும் இல்லற வாழ்வில் மனைவி பேணத்தக்கக் கடமைகள் புலப்படுத்தப்படுகிறது. கணவனுக்கு அறுசுவை உணவளித்து மகிழ்வது மணவியின் கடமை. கணவன் சுவைத்து உன்பதைக் கண்டு மனைவி மகிழ்ச்சியடைகிறாள். இதனை,

"தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிது எனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"[35]

என்கிறது குறுந்தொகை. இத்தகைய உண்மை அன்பினாலே வன்மைமிக்க ஆடவரையும், மென்மைமிக்க மகளிர் பிணித்துவிடுகின்றனர்.

இல்லறத்திற்குரிய பண்பு நல்லறம் செய்வதாகும் "இல்லறம் அல்லது நல்லறம் அன்று"[36] என்பது ஔவையின் அமுதமொழியாகும். இதை நோக்க, மனைவியுடன் கூடிச்செய்யும் இல்லறமே நல்லறம் ஆகும் மற்ற வாழ்வெல்லாம் நல்லறம் ஆகாது. இல்வாழ்க்கையில் இன்பம் காணுவது மட்டும் நோக்கம்

இல்லாமல் எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்டி வாழ்கின்ற வாழ்க்கை தான் உயர்வுக்கு ஏணிப்படியாகும் என்பது உணர்த்தப்படுகின்றது.

இத்தகைய உயர்ந்த மனிதர்களை பிரபஞ்சன் படைப்புகளில் காணமுடிகிறது. பிரபஞ்சனின் படைப்புலக மனிதர்கள் சாதாரண, யதார்த்தமான, இயல்பான மனிதர்கள். அவர்களின் குடும்பங்கள் சாதாரணமானவை. அவர்களுடைய வாழ்வில் துன்பங்கள் துயரங்கள் ஏற்பட்டபொழுதும் வாழ்ந்து காட்டியவர்கள். இதனை,

"பெரும்பாலும் நடுத்தரவர்க்கம் அல்லது கீழ்தட்டு வர்க்கத்தின் வாழ்வியல் அசைவுகளே பிரபஞ்சனின் சிறுகதைகளில் பண்பும் பயனுமாக வடிவெடுத்திருக்கின்றன."[37] என்னும் சிற்பி பாலசுப்பிரமணியம் கூற்றிலிருந்து அறியலாம்.

பல ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழ்க் குடும்பங்களில் கணவனும் மனைவியும் தங்களுக்குள் எத்தனையோ வேறுபாடுகள் இருந்தாலும் அவற்றைப் பெரிதுபடுத்தாது வாழ்ந்தார்கள்.

குடும்பத்தில் ஒருவர் மற்றவர் உரிமையை மதித்து வாழவேண்டும் என்றும் வலியுறுத்துகிறார். இதனை 'சலிப்பு' என்னும் சிறுகதையில் அப்பா கோபத்தில் அம்மாவை அடித்துவிட்டபோது அதைப்பார்த்த குழந்தை, அம்மாவுக்கும் தான் கோபம் இருந்திருக்கும் அவங்க ஏன் உங்களை அடிக்கவில்லை? என்று கேட்கிறது. தான் செய்த தவறை நினைத்து வருந்துகிறான்.

> "ஏம்ப்பா... அம்மாவை அடிச்சே...
>
> 'பச்... தப்புத்தான்'
>
> 'கோவத்துல தப்புப் பண்ணிட்டேன்... யாரையும்
>
> அடிக்கப்படாது தான்'

'அம்மாவுக்கும் தானே கோவம்...'

'ஆமா...'

'ஆனா அவங்கமட்டும் உன்னை ஏன் அடிக்கலே' "[38]

என்று கேட்கிறது குழந்தை. இதில் கணவன் மனைவி இருவருக்குமுள்ள உரிமையைச் சித்திரித்துள்ளார் ஆசிரியர். இங்கு ஒருவர் மற்றவர் உரிமையை மதித்து வாழ வேண்டும் என்பதை வலியுறுத்துவதையும் அறியமுடிகின்றது.

ரகுநாதன் தனது 'மனைவி' என்னும் சிறுகதையில் இல்லறத்தில் கணவன், மனைவிக்கிடையே நிலவும் உரிமைகளைப் பற்றியும், அவ்வுரிமை இல்லறத்திற்கு எங்ஙனம் வலுசேர்கின்றது என்பது பற்றி எடுத்துரைக்கின்றார்.

"கணவனும் மனைவிக்கு அடிமையல்ல. மனைவியும் கணவனுக்கு அடிமையல்ல. ஆனால் சுதந்திரம் என்று இருவரும் ஒருவரை ஒருவர் அறியாமல் பிரிந்து தான்தோன்றியாகச் சென்று கொண்டிருப்பது தான் சுதந்திரமா? நான் பெண். எனக்கு அவர் துணை, அவரின்றி நான் இயங்க முடியாது. அப்படியிருக்கும் போது அவர் என்னைச் சுதந்திரமாய் விட்டுவிட்டேன் என்று சொல்லி என்னை விட்டு விலகிச் சென்றால்... நல்ல சுதந்திரம் அவிப்பிராயம் கூறுவதால் கூடவா சுதந்திரம் கெட்டுவிடப் போகின்றது?... நான் அவருக்கு அடிமையாக வேண்டாம். ஆனால் அவரது அன்புக்கு நான் அடிமையாகத் தான் வேண்டும். இல்லறத்தில் ஒருவருக்கொருவர் அடிமையானால் தானே ஆனந்தம் பிறக்கும்?"[39] இச்சிறுகதையில் இல்லறத்தில் கணவன் மனைவியிடையே உரிமை என்பது பொதுவானது எனினும் இல்லறத்தில் ஒருவருக்கொருவர் அடிமையாகினால்தான் இல்லறம் நல்லறமாக மேன்மை அடையும் என்பதை உணர்த்துகின்றார்.

தன் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக மற்றொருவன் செய்த தவறுக்காகத் தான் சிறை சென்று, அதன்மூலம் வரும் பணத்தைக் கொண்டு குடும்பத்தைக் காப்பாற்றும் கிருஷ்ணமூர்த்தியை 'நிகழ் உலகம்' என்னும் சிறுகதையில் பிரபஞ்சன் காட்டுகின்றார். இச்சிறுகதையில் திருட்டுத் தனமாகப் பிராந்திப் பாட்டிலை விற்ற சண்முகசுந்தரம் போலீசில் மாட்டிக் கொள்கின்றான். தற்கலிகமாகப் பணத்தைக் கொடுத்து காவலர் வாயை அடைக்கின்றான். பின்பு வறுமையில் வாடும் கிருஷ்ணமூர்த்தியிடம் எனது தவற்றை ஏற்றுக் கொண்டு சிறைக்குப் போனால் பணம் தருவதாகக் கூறுகின்றான். அதற்கு கிருஷ்ணமூர்த்தியும் சம்மதிக்கிறான்.

"எனக்காக நீ உள்ளே போயிட்டு வந்துடு. ஆயிரம் ரூபா முதல்லே தர்ரேன்... மாசாமாசம் உன் சம்சாரத்துக்கிட்டே ஐநூறு குடுத்துடறேன் கிருஷ்ணமூர்த்தி... என் மானத்தைக் காப்பாத்துப்பா..."[40] என்று கேட்கிறான். கிருஷ்ணமூர்த்தி சற்று யோசிக்கின்றான் பின் தன் குடும்பம் வாழ்வதற்காகப் பிறர் செய்த தவற்றை ஏற்கத் துணியும் குடும்பத் தலைவனைக் காணமுடிகின்றது.

குடும்ப வாழ்விற்காக இராணுவப் பணியைத் துறந்துவிட்டு வரும் இராணுவ வீரரை 'வீடு' என்னும் சிறுகதையில் படைத்துள்ளார். இச்சிறுகதையில் ரோடு போடுவதற்காக இராணுவ வீரரின் வீட்டை இடிக்க முயல்கின்றனர் அரசாங்க அதிகாரிகள். அதனை எதிர்க்கிறார் இராணுவ அதிகாரி. அதனால் தன் குடும்பத்திற்காகத் தமது இராணுவப் பணியையே துறக்க முன்வருகின்றார்.

"சொர்வீஸ்ஸை ராஜினமா பண்ணிட்டு வரப்போறேன்... இந்த நாட்டுலே அறுபது கோடி பேருங்க நிம்மதியா அவுங்க அவுங்க வூட்டுல வாழணும்கிறதுக்காக இருபது வருஷம் வாழ்ந்திருக்கேன் சார்... ஆனா

எனக்கொரு வீடு... ஆனா, நான் இத்த விட்டுறதா இல்ல சார்... நான் நியாயம் கேட்டுக்கத்தான் போறேன்”[41] என்கிறார். இங்கு இராணுவ அதிகாரியின் செயல் நாட்டுக் கடமையைவிட வீட்டுக் கடமையே முதன்மையானது என்பதை வெளிப்படுத்துகின்றது. இங்கு இல்லறத்தின் முக்யத்துவம் உணரப்படுகின்றது.

கணவன், மனைவிக்குள் எந்தவிதமான ரகசியங்களும் இருக்கக்கூடாது என்பதனை ‘அன்னை இட்டதீ’ என்னும் சிறுகதையில் காட்டுகின்றார். கதையின் நாயகனின் மனைவி ‘ஹேமாவதி’ படிக்கும் காலத்தில் எனக்கும் ஒரு காதலன் இருந்து அவனைப் பற்றி உங்களிடம் கூறினால் அதை ஏற்றுக் கொள்வீர்களா? என்மீது அன்பு செலுத்துவீர்களா? என்கிறாள்.

“அன்பு செலுத்துவேன். ஹேமாவதி! உனக்கு இந்த மாதிரி ஒரு அனுபவம் வாய்த்திருந்தால் நான் கவலைப்பட்டிருக்கமாட்டேன்”[42] என்று கூறுவதிலிருந்து தன் மனைவிமீது கொண்டுள்ள ஆழமான நம்பிக்கையையும், காதலையும் வெளிப்படுத்துகின்றன. இது கணவன், மனைவியிடையே இல்லறத்தில் இருக்க வேண்டிய நம்பிக்கையின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றது.

இதைப்போலவே மழை நேரத்து இரவில் தன் குடும்பத்தார் உறங்குவதற்காக இடம் கொடுத்துத் தான் வெளியில் சென்று திரைப்படம் பார்க்கப்போகும் நாயகனை “தலைசாய்க்க”[42] என்னும் சிறுகதையில் காணமுடியும். இச்சிறுகதையில் நாயகனின் வீடு இரண்டு பகுதிகளை மட்டும் கொண்டது. கூடுதலாக ஒருவர் வந்துவிட்டால் தங்குவதற்கு இடம் போதாது. இந்நிலையில் ஊரிலிருந்து மாமியார் வந்துவிடவே தூங்குவதற்கு இடமில்லாமல் போகின்றது. இந்நிலையில் நாயகன் மாமியாருக்குத் தூங்க

இடம் தந்துவிட்டுத் தான் திரையரங்கிற்குத் திரைப்படம் பார்க்கச் சென்றிருக்கிறான். இது ஒரு பொறுப்புள்ள குடும்பத் தலைவனின் கடமையை வெளிப்படுத்துகின்றது. பல வருடம் இல்லறத்தில் சிறப்புடன் வாழ்ந்த முதியவர்களின் குடும்ப வாழ்வினைக் "கேசவன் கல்யாணத்தின் போது"[44] என்னும் சிறுகதை வெளிப்படுத்துகின்றது.

மேலும் இல்லத்தில் உள்ள அனைவரின் மீதும் அதீத பற்றுக் கொண்ட மூர்த்தியை 'சொந்த ஊர்' என்னும் சிறுகதையிலும் காணமுடிகின்றது. வெளியூரில் இருக்கும் மூர்த்தி சொந்த ஊருக்கு வருகின்றான். தன் மனைவி பிள்ளைகளுக்காகப் பொருட்கள் வாங்கப் பணம் இல்லாத சூழலிலும் 'சுக்லா' என்பவரிடம் நூறு ரூபாய் கடன் பெற்று பொருள் வாங்குகின்றான். "சுமதிக்கு ஒரு புடவையும், பெரியவனுக்கும், சின்னவனுக்கும் டீ சர்ட்டுகளும் வாங்கினான் மூர்த்தி. எனினும் தனக்கு ஒன்றும் வாங்கிக் கொள்ளவில்லை. தோன்றவில்லை என்பது தான் காரணம்"[45] என்பதிலிருந்து மூர்த்தி தன் குடும்பத்தின்மீது கொண்ட பாசம் வெளிப்படுகின்றது. தன்னைப்பற்றிச் சிந்திக்காமல் மனைவி குழந்தைகளுக்குப் பார்த்துப் பார்த்துப் பொருள் வாங்கும் மூர்த்தியின் இல்லறப்பற்று வெளிப்படுகின்றது.

இதேபோல் "மாறுதல்கள்"[46] என்னும் சிறுகதையிலும் வெளியூரிலிருந்து சொந்த ஊருக்குத் திரும்பும் தந்தை, தன் மகன் ஓடிவந்து தன்னைக் கட்டிக் கொள்வான். அவனைத் தூக்கிக் கொள்ள வேண்டும். மனைவி மகிழ்ச்சியடைவாள் எனப் பலவாறு எண்ணும் நாயகனின் குடும்பப் பற்றைக் காணடிகின்றது. இவை யாவும் இல்லற வாழ்வின் முக்கியத்துவத்தை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இச்சிறுகதைகளில் குடும்ப வாழ்க்கை வாழ்வதற்காகவே என்று நினைத்து வாழ்ந்த மனிதர்களைக் காணமுடிகின்றது. கணவன் மனைவியர் ஒற்றுமையுடனும், பொறுப்புடனும் இருந்து இல்லறக் கடமைகளைச் சிறப்புடன் செய்தமையையும் அவர்களுக்குள்ள உரிமைகளைப் பற்றியும் அறியமுடிகின்றது. இவற்றின்வழி இங்கு இல்லறத்தில் கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகளைப் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் பிரதிபலிப்பதைக் காணலாம்.

**அறம்**

அறம், சிறப்பையும் செல்வத்தையும் அளிக்கவல்லது. நம்முடைய உயிர்க்கு அறத்தைவிட நன்மையான ஒன்று வேறெதுவுமில்லை. ஒருவருடைய வாழ்க்கைக்கு அறத்தைவிட நன்மையானது எதுவுமில்லை. அறத்தைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும். அதை மறப்பதைவிடக் கெடுதியான ஒன்று இவ்வுலகில் எதுவும் இல்லை. ஒருவன் தன் மனத்தில் தூய்மை இல்லையென்றால் எல்லாமே ஆரவாரத் தன்மையுடையனவாகிவிடும். தீய எண்ணங்களுக்கு இடம் கொடுக்காமல் ஒழுக்கத்தையே மேற்கொள்வது அறமாகும்.

அறம் என்பது இருவகைப்படும், ஒன்று இல்லறம் மற்றொன்று துறவறம். இல்வாழ்க்கைக்கும் அறத்திற்கும் அடிப்படையான உறவை இல்லறம் என்ற சொல் தெளிவாகக் கூறுகின்றது. இவ்வுண்மையை,

“அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று”[47]

என்ற குறள் அடிகள் நன்கு விளக்குகின்றது.

மனிதர்கள் வாழும் காலத்தில் அறம் செய்து வாழ வேண்டும் என்னும் கருத்தை,

"கொள்ளும் கொடும் குற்றம் கொல்வான்
உள்ளங் கனிந்தறஞ்சேய் துய்கவே – வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணை கோலிவையார்
பெருகுதற்கண் என் செய்வார் பேசு"[48]

என்னும் நீதி இலக்கியச் சான்றுப் பாடல் புலப்படுத்துகின்றது. இதில் நம் உயிர் பூமியைவிட்டு போகும் முன்பு அறம் பல செய்து மற்றவர்கள் மனத்தில் இடம் பெறவேண்டும் என்கிறது இப்பாடல்.

படைப்புகள் மனுதனுக்கு நற்பண்புகளை வளர்க்கும் விதத்தில் அமைய வேண்டும். மனிதன் வாழ்வில் கடைபிடிக்கும் நற்பண்புகள் அறமாகக் கொள்ளப்பெறும். அவற்றில் தர்மமும் நீதியும் நேர்மையும் மனிதனுக்கு மிகச்சிறந்த அறங்களாக அமைகின்றன. அவ்வறத்தைக் கடைப்பிடிப்பதின் மூலம் மனிதன் வாழ்வு வளம் பெறுகிறது. மனிதனை வளப்படுத்துகிறது. அப்பண்பை மையப்படுத்திப் படைப்புகள் உருவாகும் போது அப்படைப்புகளும் வெற்றியடைகிறது எனலாம்.

"எல்லோரும் தம்மால் இயலும் அறங்களைச் செய்து கொண்டு அறவாழ்வு வாழவேண்டும். அறவழியில் பொருளைத்தேடி அறவழியில் இன்பம் துய்க்க வேண்டும்"[49] என்னும் அண்ணல் சுப்பிரமணியனாரின் கருத்து மனிதன் அறத்துடன் கூடிய வாழ்வைக் கடைப் பிடித்தல் வேண்டும் என்பதனைப் புலப்படுத்துகிறது. இங்ஙனம் சிறப்புமிக்க அறக்கருத்துக்களைப் பிரபஞ்சன் சிறுகதைகளில் பிரதிபலிக்கக் காணலாம்.

'மீன்' என்னும் சிறுகதையில் மீன்காரியிடம் காணும் நாணயம் மெய்சிலிரிக்க வைக்கிறது. அனந்தாயிக்கு நாலு ரூபாய்க்குப் பேசி முடித்த மீனை பணக்காரி ஒருத்தி பணம் அதிகம் தருகிறேன். அந்த மீனை, எனக்கே தந்துவிடு எனக் கேட்கிறாள்.

“இன்னாடி சொன்னே... சிலிர்த்துக் கொண்டு எழுந்தாள் பவுனு மயிர் அவிழ்ந்து விழுந்தது. நீ ஆயிரம் ரூபாய் கொடேன்... மீன் தருவனா அது இன்னாடி? நாக்கு ஒன்னா ரெண்டா மனுசாளுக்கு; வாயின்னா சுத்தம் ஒனுன்டி... நான்இதுக்குக் குடுத்துட்டேன்னு சொன்னப்புறமும் ஏத்தி தர்றாளாம் ஏத்தி... இன்னாடி பணக்கொழுப்பா... ஒன் பணமும் பீயும் எனக்கு ஒன்னுடி...”[50] என்று கொதித்தெழுந்த மீன்காரியிடம் இருக்கும் நேர்மை பிரமிக்க வைக்கிறது. சாதாரண ஏழைப்பெண் ஏழ்மை நிலையிலும், நேர்மையான வழியில் வியாபாரம் செய்ய வேண்டும் என எண்ணுகிறாள். இந்த அற நெறி, ஏழை மக்களிடத்திலும் புதைந்துள்ளதைக் காணமுடிகிறது. பேச்சில் நாணயம் வேண்டும் வாக்கு சுத்தம் வேண்டும். இதுவே ஒரு நல்ல மனிதப் பண்பு என்பதை மீன்காரி பவுனுவின் வழி ஆசிரியர் வெளிப்படுத்துவதை உணரமுடிகின்றது.

வாழ்வில் குழந்தைகளைப் பெற்றோர் காப்பாற்றுவதே நியதி. அதற்கு பிரதிபலனாகப் பிள்ளைகள் பெற்றோரைக் காப்பாற்றுவது ஒன்றும் நியதி இல்லையே என்று கேட்கும் தந்தையை ‘தந்தையும் மகனும்’ என்னும் சிறுகதையில் காணலாம். இதனை,

“கோபாலு எனக்கு மகனா இருக்கிறதுனால அவன்தான் என் அந்தி காலத்துல சோறு போடனும்னு என்ன நியதி சொல்லுங்க...? தென்னங்கன்றுக்குத் தண்ணி பாய்ச்சறது இளநீ குடிக்கவா? அப்படி நினைச்சுக்கிட்டுத் தண்ணீ ஊத்தறதே தப்பு. குருத்தை வாடவிடக்கூடாது, குருத்துவாடுனா, வாடுற இடத்துல மனுஷங்க இல்லேன்று அர்த்தம்.”[51] என்று கூறுகிறார் அப்பா.

வருங்காலத்தில் பிள்ளைகள் தம்மைப் பாதுகாப்பர் என்று எதிர்பார்த்து வளர்ப்பது தவறான காரியமாகும். அவர்களை எந்தவிதமான

எதிர்பார்ப்பும் இன்றி சிறந்த முறையில் வளர்ப்பதே பெற்றோர்களின் கடமையாகும். அதுவே வாழ்வின் நியதியுமாகும் என்ற கூற்று மனிதன் அறநெறியில் வாழ வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றது.

நேர்மையே உருவான 'கொண்டப்பா' என்னும் பாத்திரத்தை 'சிறுமை கண்டு...' என்னும் சிறுகதையில் படைத்துக் காட்டியுள்ளார். வேறு ஒருவரின் பெயரில் இருக்கும் நிலத்தைத் தனது பேருக்கு மாற்றி எழுதச் சொல்லுகிறான் அரசியல்வாதி. அதனை ஏற்று அப்பணியை எழுத்தரான கொண்டப்பாவைச் செய்யச் சொல்கிறான் மேலதிகாரி. ஆனால் கொண்டப்பா அதனை மறுத்ததோடு மட்டுமல்லாமல்... "தவறு என்று தெரிந்தும் அதை எவ்வாறு செய்வது ஐயா"[52] என்று மேல் அதிகாரியிடமே எதிர்த்துக் கேட்கிறான் கொண்டப்பா.

இதில் பொய் சொல்லுவது, தவறு செய்வது, லஞ்சம் வாங்குவது இவற்றையெல்லாம் பாவச் செயல்களாகக் கருதும் கொண்டப்பாவைப் படைத்துக் காட்டி அறநெறியை நிலை நிறுத்தியுள்ளார்.

கொடுப்பதில் மகிழ்ச்சி அடையும் மனிதர்கள் இப்பூலகில் இன்னும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்பதை 'பப்பா' என்னும் சிறுகதை உணர்த்துகிறது.

"கொடுப்பதில் சிலருக்கு சந்தோசம் கொடுப்பதில் உயிர் வாழ்பவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுக்கு அது ஒரு யாகம் பப்பா, அந்த யாகத்தைதான் செய்தார்"[53]

இச்சிறுகதையில் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் 'பப்பா' தன் கையில் உள்ளதை கொடுப்பார். அவரது சட்டைப்பையில் சில்லறைகளை அள்ளிப்போட்டுக் கொண்டு தான் அவர் எங்கும் புறப்படுவார். அவர் காரில்

வந்து இற்கும்போது அங்கு நிற்கும் கூட்டத்திற்குத் தான் வைத்திருக்கும் சில்லறைகளை அள்ளிப்போடுவார். ஈகை என்பது வாழ்வின் மிகப்பெரிய அறமாகும். இதனை 'பப்பா' ஒரு யாகமாகவே செய்கிறார் என்பதைப் படிக்கும் போது, கொடுத்து வாழ்வதால் மனிதனுக்குப் பெருமை மட்டுமன்றி மனமகிழ்ச்சியும் உண்டாகும் என்பதை அறியமுடிகிறது.

இவற்றின் வழி 'பப்பா' என்னும் பாத்திரம் புராணகால கர்ணனை நினைவுபடுத்துகின்றது எனலாம்.

இதேபோல் இறைவனிடமே உண்மைக்காக வாதாடிய கீரரை "இராஜகோபுரமும் சங்கப் பலகையும்"[54] என்னும் சிறுகதையில் காணமுடிகிறது. இச்சிறுகதையில் இறைவனே என்றாலும் பொய்யிலிருந்து தப்பமுடியாது என்பதையும், உண்மை பேசுபவர்களுக்கு இறைவனிடத்தில் கூட அச்சமில்லை என்பதையும் எடுத்துரைக்கின்றன.

எந்தத் தொழில் செய்தாலும் உண்மையுடனும் மனம் ஒன்றியும் செய்தலே தொழில் அறம் என்பதை "ராட்சஸக் குழந்தை"[55] என்னும் சிறுகதையிலும் தன்னை ஏமாற்றிய மகனைச் சொற்களால் திருத்தும் தந்தையின் நற்குணத்தை "அடி"[56] என்னும் சிறுகதையிலும், குற்றவாளி என்று தவறாகக் கருதி அழைத்து வரப்பட்டவனிடம் தான் ஒரு அதிகாரி என்பதையும் மறந்து அவரிடம் மன்னிப்பும் கேட்டு உரிய மரியாதையுடன் வீட்டிற்கு அனுப்பி வைக்கும் உயர்ந்த குணம் கொண்ட போலீஸ் அதிகாரியை "ஆகஸ்ட் 15"[57] என்னும் சிறுகதையிலும் காணமுடிகிறது. மனிதன் உண்மையுடன் வாழவேண்டும் என்பதையும் போலி முகத்துடன் வாழும் வாழ்வு சிறக்காது என்பதையும் "பிம்பம்"[58] என்னும் சிறுகதையிலும் தான் செய்யக்கூடிய தொழில் மீது கொண்டுள்ள நேர்மையினை "ஒரு நெகட்டிவ் அப்ரோச்"[59] என்னும் சிறுகதையிலும் காணமுடிகிறது.

மேற்கண்ட அறச்செய்திகள் அனைத்தும் மனித சமுதாயம் மேம்படுவதற்கு வழிவகுக்கும் பண்புகளாகும். இப்பண்புகளை மனிதன் வாழ்க்கையில் கடைபிடித்து ஒழுகவேண்டும் என்ற நோக்கத்தில் தமது சிறுகதைகளில் படைத்துள்ளார் பிரபஞ்சன். இவ்வாறானப் பண்புகள் மனிதனை மேம்படுத்த உதவும் கருவியாக அமையும் என்பது தெளிவு.

**தியாகம்**

தியாகம் என்னும் சொல்லிற்குக் "கைவிடம், தருமம், ஈகம்"[60] என்று அகராதிப் பொருள் தருகின்றது. ஈக என்பது கொடை, கொடுத்தல் எனப் பொருள்படுகின்றது. கொடை என்பது மற்றவர்களுக்குக் கொடுத்தலாகும்.

சங்கத் தமிழச் சான்றோர்களிடையே கொடை உள்ளம் இருந்தமையை நற்றிணை தெரிவிக்கின்றது. பிரதிபலன் எதிர் நோக்காமல் வழங்கும் தியாக உள்ளம் கொண்டவர்களே கொடையாளி என்று அழைக்கப்படுகின்றனர். நற்றிணை காட்டும் தலைவன் கொடை உள்ளம் கொண்டவனாகத் திகழ்கின்றான். கொடை கொடுப்பதற்குப் பொருள் இல்லையே என்று கருதிய தலைவன் கொடை கொடுப்பதற்காகவே பொருள் ஈட்டச் செல்கின்றான். இதனை,

> "இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
> அசையுநர் இருந்தோர்க்கும் அரும்புனர் வின்பமென
> வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை"[61]

என்னும் நற்றிணைப் பாடல் வழி அறியலாம்.

இப்பாடலில் தலைவன் இம்மைக்குரிய புகழும் மறுமைக்குரிய இன்பமும், மறுமையில் இன்பத்தைத் தேடித்தரும் இரந்தோர்க்கு ஈதலாகிய கொடையும் இம்மூன்றும், முயற்சியின்றி தம் வீட்டின் கண்ணே சோம்பி இருந்தால் ஈதல் பணியைச் செய்ய முடியாது என்று பொருள் ஈட்டப்பிரிந்த தலைவனின் கொடை உள்ளத்தைத் தலைவி வெளிப்படுத்துகிறாள். இக்கருத்து அம்மக்களின் செம்மைவாய்ந்த தியாக உள்ளத்தை வெளிப்படுத்துகின்றது. மற்றவர்களின் நலனில் அக்கறை கொள்வதும், கொடுக்கும் மனப்பான்மையும் கொண்ட உயர்ந்த உள்ளங்களைச் சங்க காலத்திலிருந்தே காணமுடிகின்றது. இங்ஙனம் உயர்ந்த உள்ளம் படைத்த மனிதர்களைப் பிரபஞ்சன் சிறுகதைகளிலும் காணமுடிகின்றது.

சமுதாயத்தில் மனிதர்கள் இயன்றளவு ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து வாழவேண்டும். அவ்வாறு விட்டுக் கொடுத்து வாழும் போது தியாக மனப்பான்மை வளர்கின்றது. பிரபஞ்சன் சிறுகதைகளில் வரும் கதை மாந்தர்கள் நாம் அன்றாடம் காணும் வாழ்க்கையிலிருந்து வந்தவர்கள், அந்தச் சாதாரண மனிதர்களிடத்தில் உள்ள தியாக மனப் பான்மையைச் சிறுகதைகள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

நாட்டுக்காகச் சேவை செய்த சிவபாதசுந்தரம் தன் மகன் காந்திக்கு வேலை கிடைத்ததும் தனக்கு வரும் ஓய்வூதியத்தைத் தரவேண்டாமென அரசாங்கத்திடம் மன்றாடி உத்தரவு பெறுகிறார். தியாகத்துக்குக் கூலி வேண்டாம் என்று மறுத்த அவரது பேருள்ளம் அதிகாரிகளையே திடுக்கிட வைக்கிறது. இதனை, தியாகி என்னும் சிறுகதையில், “தானமாக வரும் பென்ஷன் பணம் இனி எனக்குத் தேவையில்லை. உயிரைக் கட்டிப்பிடித்து வைத்துக்கொள்ள மட்டுமே பிச்சை ஏற்கலாம். அதைச் சாஸ்திரம்

அனுமதிக்கிறது. இதற்குமேல் பையில் பணமிருக்கப் பிச்சை எடுப்பவன் சண்டாளன். ஆகவே வரும் மாதம் தொட்டு எனக்குத் தரும் பென்ஷனை நிறுத்திவிடுங்கள்"[62] என்கிறார்.

தான் செய்த சேவைக்காகத்தான் ஓய்வூதியம் தருகிறார்கள் என்ற எண்ணம் இல்லாமல், ஓய்வூதியத்தைத் தானமாக எண்ணும் எண்ணம் படிப்போரைப் பிரமிக்க வைக்கிறது. ஒருவன் தான் செய்த தொண்டிற்காகப் பணம் பெறுவது சிறந்த சேவையாகாது என்பதையும் அவர் கூற்றிலிருந்து அறியலாம். இங்குச் சாதாரணக் கதாபாத்திரம் மிகச்சிறந்த தியாகப் பண்பை வெளிப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கது.

'தியாக உள்ளம்' கொண்ட பாத்திரங்களை ஜெகாதாவும் தனது சிறுகதைகளில் படைத்துள்ளார். அவர் தனது 'மனுஷி' என்னும் சிறுகதையில் ரங்கநாயகி தனது வாழ்நாளின் பெரும்பகுதியை அனாதைக் குழந்தைகளைப் பாதுகாப்பதிலேயே தியாகம் செய்தவள். 'சாரதா' அனாதை இல்லத்தில் தான் வயதாகித் தளர்ந்து போகும் வரையில் தொண்டாற்றியவள். "அம்மா நீங்க அநாதைக் குழந்தைகளுக்காக இவ்வளவு காலமும் உழைத்தது போதும்மா... இனி உங்களைப் பார்த்துக்க வேண்டிய காலம் வந்திருச்சும்மா..."[63] என்கிறாள் அந்த அநாதை இல்லத்தில் பணியாற்றும் கமலா. இது ரங்கநாயகியின் தன்னலமற்ற தியாக உள்ளத்தை வெளிப்படுத்துகின்றது.

சுந்தரேசன் என்பவன் தொழில் செய்ய ஷேட்டுவிடம் பணம் கேட்கிறான். ஷேட்டோ சுந்தரேசனின் நண்பன் ஜாமீன் கையெழுத்துப் போட்டால் தான் பணம் கொடுப்பேன் என்கிறார். இதனையறிந்த நண்பன் உன்னை நம்பாதவனிடத்தில் நீ பணம் வாங்க வேண்டாம். நான் என் வீட்டை அடமானம் வைத்து உனக்குப் பணம் தருகிறேன் என்கிறார். இந்த தியாக உள்ளத்தை, 'அபஸவரம்' என்னும் சிறுகதை வெளிப்படுத்துகின்றது.

“சுந்தரேசன்... பணம் உன்னுடைய தேவை. சேட்டு உன்னை நம்பித்தான் பணம் தரணும்... உன்னை நம்பாம நான் கையெழுத்துப் போட்டாத்தான் தருவேன்னு சொன்னான்... அதனால ஒன்னு செய்வோம். நானே என் வீட்டை வெச்சு, என் பேரிலேயே கடன் வாங்கறேன்”[64] என்று கூறுகிறான். இதில் தன் நண்பனுக்காக வீட்டையே அடமானம் வைக்கும் தியாகியாக சுந்தரேசனின் நண்பனைக் காணமுடிகின்றது. சுந்தரேசன் பணத்தைத் திருப்பித்தராமல் ஏமாற்றுகின்றான். விசயம் நீதிமன்றம் வரைச் செல்கின்றது. அந்த நிலையிலும் நண்பன் சுந்தரேசனுக்காக தான் வாங்கிய கடனைத் தானே அடைப்பதாக நீதிமன்றத்தில் சொல்லிவிட்டு வெளியேறுகிறான். அப்பொழுது கூட தான் ஏமாற்றப் பட்டதிற்காக அவன் வருந்தவில்லை. தங்கள் இருவரின் நட்பில் விரிசல் வந்துவிட்டதே என்பதையே எண்ணுகிறான். “நல்ல சங்கீதத்துல ஒரு அபஸ்வரம் விழுந்துட்ட மாதிரி, எங்க சினேகிதத்துல ஒரு சின்ன விரிசல் ஏற்பட்டிருச்சேன்னு தான் வருத்தம்”[65] நண்பனுக்காக ஒருவிதத்தில் தன் வாழ்கையையே தியாகம் செய்த கதிரேசனின் நண்பன் போன்ற தியாக மனப்பான்மை கொண்ட மனிதர்களைத் தன் சிறுகதையில் காணமுடிகின்றது. இப்பண்பு மனித உறவுகள் மேம்பட வழி வகுக்கும். துன்பத்தில் உள்ள நண்பனுக்கு எந்த விதத் தியாகத்தையும் செய்ய முன் வரவேண்டும் என்பதும் இங்கே உணர்த்தப்படுகிறது.

பொருளை மற்றவர்களுக்குக் கொடுத்து உதவுவதுபோல தனக்கு வரவேண்டிய புகழை மற்ற ஒருவருக்குக் கொடுக்கும் உயரிய தியாக உள்ளத்தைத் ‘தோழமை என்பது’ என்னும் சிறுகதையில் காணலாம். புதிதாகப் பணிக்கு உதவியாளராக நியமிக்கப்பட்ட சதீஷிற்கு உதவாமல் விலகியே செல்கிறார் ராயர். சதீஷோ சைக்கிள் டயர் விற்கும் பொறுப்பை ஏற்று அதில் வெற்றியும் பெறுகின்றான். அதுமட்டுமல்லாமல் அந்த வெற்றிக்குக் காரணம் ராயரும் உண்டு என்கிறான். சதீஷ் எம்.டி.யிடம்.

அதனைக் கேள்விப்பட்ட ராயர் தனது செயலை எண்ணி வருந்தி அவன் செயலைப் பாராட்டுகின்றார்.

"என்னை இப்படி சின்னப் பையனா, அடுச்சுட்டியே சதீஷ் என்ன சார் சொல்றீங்க?

அது தான் எம்.டி. கிட்டே, உன் யோசனைகளையெல்லாம், உன் உழைப்பையெல்லாம் என்மேலே போட்டுட்டு உன் கழுத்துக்கு வரும் மாலையை என் தோளுக்கு மாத்தினியே, அதைத்தான் சொல்றேன்...

எப்படி வந்ததுப்பா உனக்கு இந்தப் பெரிய மனசு? எங்கே படிச்ச இதை? ஒவ்வொருத்தனும் யார், யாருடையதையோ தன்னோடதுன்னு சொல்லிட்டு கிரீடம் சூட்டிக்கிட்டுத் திரியறான். நீ என்னடான்னா... எப்படி எப்படி, இது பண்ணனும்னு தோணிச்சு... இந்தக் கெழவனுக்குக் கடைசி காலத்தில் ஒரு மரியாதையைத் தேடிக் கொடுத்திட்டியே"[66] என்கிறார்.

தனக்கு மட்டுமே உண்டான புகழைத் தன்னை எதிர்த்த ராயருக்கும் உண்டு என்று கூறுவதின் மூலம் சதீஷ் மனிதகுலத்தில் ஒரு உயர்வான மனிதனாக மாறுகின்றான். இது சதீஷின் தியாக உள்ளத்தை மெய்ப்பிக்கின்றது. இத்தியாக உணர்வு கொண்ட மனிதர்கள் சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்வார்கள் என்பதை சதீஷ் நிரூபிக்கின்றான்.

பிரபஞ்சன் நாட்டுப்பற்று குறித்த தனது சிந்தனையைச் சிறுகதையின் வழி மிகத் தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார்.

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனிசிறநதனவே!"[67]

என்கிறார் பாரதியார். நாடு சிறக்க வேண்டும் என்ற பாரதியின் கொள்கைக்கு ஏற்றபடி பிரபஞ்சனும் தாய் நாட்டுப் பற்றுக் கொண்டு வாழவேண்டும் என்பதையும், நாட்டு வளத்தையே ஒவ்வொருவரின் கொள்கையாக இருக்க வேண்டும் என்பதையும் நாட்டுப்பற்றின் மேன்மையையும் சிறுகதை வழி உணர்த்துகிறார்.

நாட்டுப் பற்றுள்ளவர்களுக்கு வேறு எவற்றிலும் நாட்டம் செல்லாது. தேச நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொள்வர். 'தியாகி' என்ற சிறுகதையில் நாட்டு நலனுக்காகத் தன்னையே அர்ப்பணித்த 'சிவபாதசுந்தரம்' என்னும் தியாகியைக் காணமுடிகிறது. "ஒரு நாளில் இருபத்து நான்கு மணி நேரத்தையும் தேசச் சேவைக்காகத் தன்னை அர்பணித்துவிட்டோம். தேசச் சேவைக்காகத் தன்னை அர்பணித்துக் கொள்கிற தொண்டனுக்கு வேறு எதிலும் நாட்டம் இருக்க முடியாது"[68] என்று கூறுவதிலிருந்து ஒரு மனிதன் நாட்டிற்காகத் தன்னை அர்பணித்துக் கொள்வதே சிறந்த நாட்டுப்பற்று என்பதை உணர்த்துகின்றது. நாடு வளமடைவதும், நாடு முன்னேறுவதும் தன்னலமற்ற, நாட்டுப்பற்றுக் கொண்ட தியாகிகளால் தான்! என்பதைப் பிரபஞ்சன் சிறுகதை வழி எடுத்துரைக்கிறார்.

இது, நாட்டுமக்கள் தம் நலன்களையே எண்ணிக் கொண்டிராது நாட்டின் நலன்களைப் பற்றியும் சிந்தித்தபடி இருக்க வேண்டும். நாமும் வாழவேண்டும்; நாடும் வளமாதல் வேண்டும் என்பது தான் ஒவ்வொருவரின் கொள்கையாயிருக்க வேண்டும்.

"கனம் நீதிபதி அவர்களே, மரியாதைக்குரிய இந்த மன்றத்துக்குள் தாங்கள் பிரான்ஸ்காரராகவோ, நான் இந்தியனாகவோ பிரவேசிக்கவில்லை. நீதியைப் பரிபாலனம் செய்யவே வந்திருக்கிறோம். வழக்கறிஞர்கள் என்ன உடை உடுத்த வேண்டுமோ அந்த மரபுப்படி நான் உடுத்தியிருக்கின்றேன்.

ஐரோப்பிய வழக்கறிஞர்கள் இன்ன விதமாயும் இந்திய வழக்கறிஞர்கள் இன்ன விதமாயும் உடுத்த வேண்டும் என்ற நியதியை நம் நீதிமன்றம் ஏற்படுத்தவில்லை. ஆகவே நான் எந்தவிதமான உரிமையையும் மீறும் பிரச்சனையைச் செய்யவில்லை. தாங்கள் நான் சப்பாத்து அணிந்து வருவதை மறுப்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை"[69] என்கிறார். இவ்வாதம் தனக்கு மட்டுமல்ல பிரஞ்சு ஏகாதிபத்தியத்தால் அடிமைப்பட்டிருக்கும் தன் நாட்டிற்காகவும் தான் வாதாடுகின்றார். இது பிரஞ்சுக்காரரை எதிர்த்துச் சமஉரிமைக்காகவும் நாட்டு உரிமைக்காகவும் போராடிய உயர்குணம் கொண்ட பொன்னுத் தம்பிப் பிள்ளையைப் பற்றியதாய் அமைகின்றது. நாட்டுப்பற்று ஒவ்வொரு தனிமனிதனுக்கும் அமைதல் வேண்டுமென்பதை மேற்கண்ட கருத்து வழியுறுத்துகின்றது.

படிப்பை முடித்து நம்நாட்டில் வேலை செய்யாது வெளிநாட்டில் வேலை செய்ய மோகம் கொண்டு அலைபவர்களுக்கு நாட்டுப் பற்றினை உணர்த்தும் வகையில் 'ஒரு ஏழை நாடும் ஒரு பரம ஏழையும்' என்னும் சிறுகதை அமைந்துள்ளது.

அனந்துவும் அவன் நண்பனும் ஒரே பள்ளியில் படித்தவர்களாய் இருந்தும் அனந்துவிற்கு மட்டும் பிரான்சில் வேலை கிடைக்கின்றது. நண்பனாகிய கதை நாயகனுக்கு இருமுறை வாய்ப்பு வந்தும் தட்டி போயிற்று. அவன் வருந்தவில்லை. காரணம் அவன் தாய்நாட்டின்மீது கொண்ட பற்று. ஏழையாக இருந்தும் தம்மை ஆதிக்கப்படுத்தும் பிரான்சிற்குச் செல்வதை அவன் மனம் ஏற்கவில்லை.

"இது ஏழை தேசமல்ல, மக்கள் ஏழைகள் இந்த தேசத்தின் இந்தத் துணைக் கண்டத்தின் செல்வம் சரிவரப் பயன்படுத்தப் பெறவில்லை. தேசத்தின் செல்வம் வேறு சிலரிடம் சேர்வதால், மக்கள் ஏழைகளாக்கப்

பட்டார்கள்"[70] என்று வருந்துகின்றான். இந்நாட்டு முன்னேற்றத்திற்காக உழைக்காமல் பிரான்சிற்கு இந்தியநாட்டு இளைஞர்கள் செல்வதை எண்ணியும் இந்நாட்டின் நிலையினை எண்ணியும் வருந்துகின்றான்.

ஒவ்வொரு மனிதனும் தேசப்பற்று கொண்டு வாழ்வதால் நாடு நலமடையும் என்பதை "தியாகி"[71] என்னும் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**முதுமைநிலை**

நம் நாட்டுப் பாரம்பரியத்தில் முதுமைக்கு ஒரு மரியாதை இருந்தது. கூட்டுக் குடும்பங்களின் நடு நாயகமாக முதியோர்கள் போற்றப்பட்டார்கள். "நம் நாட்டில் சில ஆண்டுகளுக்கு முன்னர் வரை முதியோர்கள் வணங்கத்தக்கவர்களாக, அனுபவ அறிவு பெற்றவர்களாக, மேதைகளாகக் குடும்பங்களில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டார்கள். நம் சமயங்களெல்லாம் முதியோர்களைத் தொழுது ஏத்துவதுதான் 'முந்தையோர் கண்டமுறை' எனக் கோடிட்டு வற்புறுத்துகின்றன. தந்தை, தாயாரை முதுமையில் காத்து அவர்களுக்குத் தொண்டாற்றுவதை ஒரு தர்மமாக மைந்தனின் தலையாய கடமையாக, நமது பழம்பெரும் சாத்திரங்கள் வகுத்து வைத்திருக்கின்றன"[72] என்கிறார் ஜான்லூயி. இக்கருத்தினைப் போற்றிப் பிரபஞ்சன் முதுமை குறித்த மிக நுட்பமான சிந்தனைகளைத் தமது சிறுகதையில் கையாண்டுள்ளார். முதியவர்களின் மன உணர்வுகளையும், முதுமை நிலை பற்றியும் அவரின் சிறுகதைகளின் வழி அறிந்து கொள்ளமுடிகின்றது.

'விழுது' என்னும் சிறுகதையில் முதியவரின் மன உணர்வினை வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர். துளிகூட லட்சணம் இல்லாத அம்மாவைத் திருமணம் செய்து வாழ்ந்த அப்பாவிற்கு வயது முதிர்ந்த போது அவரின் இளமைக்காலத் தோழி சொர்ணத்தைக் கண்டு அவளுடன் பேசி அதனை

அப்பாவிடம் கூறுகிறான் மகன். இதைக்கேட்ட தந்தை ஒன்றும் பேசாமல் அவன் கையைப் பிடித்துக் கொண்டார். சொர்ணத்தின் பழைய நினைவுகள் முதியவர்க்கு மகிழ்ச்சியைத் தருகின்றன.

"ஒனக்கு... ஒங்களுக்கு ஆரு வேணும்...?

சொர்ணம் கிறது...?

நான்தான்... நீங்க... ஒக்காருங்க... நிக்கறீங்களே...

இருக்கட்டும்... நான் புதுச்சேரி சாமிக்கண்ணு... மவன்...

ஆரு. நாடாரா...?

தொப்பேன்று திண்ணையில் உட்கார்ந்து கொண்டாள்.

தோல் சுருங்கி, வற்றி உலர்ந்து கிடந்தாள் கிழவி.

ஆனாலும் மேனியின் சந்தனவர்ணம் மட்டும் மங்கவில்லை

தலைமுடி கழுத்துவரைதான் இருந்தது."[73]

இம்மேற்கோள் முதியோரின் நிலையான மன உணர்வினை வெளிப்படுத்து கின்றது. முதியவர்களின் நலனில் இளையோர் அக்கறை கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகின்றது.

முதியோரைப் பேணாத இளைய தலைமுறை பற்றியும் ஆசிரியர் சிறுகதையில் எடுத்துரைக்கின்றார். சாகும் தருணத்தில் கூட தம் கௌரவத்தை விட்டுப் பிறரிடம் இரந்து உண்ணுவதைக் கேவலமாக என்னும் முதியவரை 'நேற்று மனிதர்கள்' என்னும் சிறுகதையில் காணலாம்.

இச்சிறுகதையில் யாருமின்றி தனியே வாழ்ந்த முதியவர், மூர்த்தியின் மாமா ஆவார். மூர்த்தி அவரைப் பார்க்க வந்த போது,

"எங்க.. அஞ்சலையைக் காணோம் என்கிறான்.

சமையல்காரியா? இந்த மழையில் எங்க ஒடுங்கிக் கிடக்கிறாளோ, நாலு நாளா ஆளையேக் காணோம் என்கிறார்.

அப்போ நாலு நாளா சாப்பாடு?

மாமா சிரித்தார். மனுஷன் சோத்தாலயா வாழறாள். அதைவிடு என்றார்

நான் வீட்டிற்குப் போயி சாப்பாடு கொண்டு வரட்டுமா மாமா?

வேணாம் நான் எப்படி வாழ்ந்தேனோ அப்படியே தான் சாகனும்... இரந்து திங்கறா? சீச்சீ..."[74]

என்கிறார் மாமா. தான் பட்டினியாகக் கிடந்த நிலையிலும் பிறர் கொடுக்கும் உணவை உண்பது கேட்டப் பெறுவதற்குச் சமம் என நினைக்கும் முதியவரின் மனநிலையை உணரமுடிகின்றது. இதில் முதுமையிலும் தனது கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் வாழும் முதியவர்களின் மனநிலையை இச்சிறுகதை வெளிப்படுத்துகின்றது.

திருப்பிலியார் வயதான காலத்தில் தன் மகனை எதிர்பார்க்காமல் தானே உழைத்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுவதைத் "தந்தையும் மகனும்"[75] என்னும் சிறுகதையிலும், தள்ளாத வயதில் தானே சமையல் செய்து, தன் துணிகளைத் துவைத்துக் கொண்டு வாழ்ந்த ஆதரவற்ற வாத்தியாரை "அமரத்துவம்"[76] என்னும் சிறுகதையிலும் படைத்துக் காட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

முதியவர்களின் மன உணர்வுகள் பற்றியும் வயதான காலத்தில் தனக்கென ஒரு கொள்கை கொண்டு குழந்தைகளின் நிழலில் வாழாத முதியவர்கள் பற்றியும் சுய கௌரவத்தைக் கைவிடாமல் வாழும் மூத்தோர் பற்றியும் பிரபஞ்சன் தனது சிறுகதையில் படைத்துள்ளதை உணரமுடிகிறது. இன்றைய சமுதாயத்தில் முதுமையின் பல்வேறு நிலைகள் பாதுகாக்கப்படுவதில்லை. அவர்கள் உதாசினப்படுத்தப்படுகிறார்கள் எனலாம்.

**தீண்டாமை**

நம் நாட்டில் தீண்டாமை ஒழியவேண்டும் என்று பல அறிஞர்களும், இலக்கியவாதிகளும் போராடி வருகின்றனர். தீண்டாமையும் ஏற்றத்தாழ்வும் மக்களிடத்தில் இன்றளவும் நிலவி வருகின்றன. "தீண்டாமை என்கின்ற பெயரால் மக்களை மக்களே இழிவு செய்வதைப்போல் உலகத்தில் கொடுமை வேறெதுவும் இல்லை; இந்நிலை இந்தியாவைத் தவிர வேறெங்கும் இல்லை என்றார் பெரியார். இத்தகைய இழிவான தன்மைக்குத் தாழ்த்தப்பட்ட மக்கள் கடவுளாலேயே அப்படிப் பிறப்பிக்கப்பட்டவர்கள் என்று கூறும் வேதபுராண சாஸ்திரங்களும் மதமும் தான் காரணம் என்று கூறினார் பெரியார்"[77]

நாகரிகம் அடைந்த சமுதாயத்தில் மாறாமல் இருக்கும் சாதியத்தையும், தீண்டாமையையும் படைப்பாளிகள் பலர் தங்கள் படைப்புகளில் சுட்டிக் காட்டியுள்ளனர். அந்த வழியில் பிரபஞ்சனும் தனது சிறுகதையில் தீண்டாமை பற்றிய செய்திகளைக் கையாண்டிருக்கின்றார் எனலாம்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஆங்கிலேயர் தமக்கு நிகராக இந்தியர்களை மதிக்காமல் இழிவுபடுத்தியதை 'சைக்கிள்' என்னும் சிறுகதையில் காணமுடிகிறது. மு.ஸே.நட்ராஜன் என்பவர் கோயில் திருவிழாவின் போது ஆங்கிலேயர்களுக்கு நிகராக அமர்ந்தார். அதனை ஆங்கிலேயத் துரையின் மனைவிக்குப் பிடிக்கவில்லை. அவரை எழுந்து கீழே அமரச் சொல்கிறார்கள். மு.ஸே.நட்ராஜன் இந்த ஏற்றத் தாழ்வைப் பார்த்து மணம் நொந்தார். ஆங்கிலேயர்கள் இந்திய நாட்டை ஆண்டபொழுது இந்தியர்களை கீழ்த்தரமாக நடத்தினார்கள் என்பதை 'சைக்கிள்' என்ற சிறுகதை வெளிப்படுத்துகின்றது.

"மன்னிக்கணும் முஸே நட்ராஜன்

என்னங்க...

நீங்க பக்கத்தில் உட்காருவது துரை

மனைவிக்குப் பிடிக்கல்லே

பிடிக்கல்லியா... எதுக்கு?

நான் நினைக்கிறேன் என்ன இருந்தாலும்

நீங்க எங்களுக்கு சரிசமமா உட்காரலாமா?

அதுவும் ஒரு பொது நிகழ்ச்சியில்..."[78]

ஆங்கிலேயர் இந்தியர்களை இழிவாக நடத்தியமையையும் அறிய முடிகின்றது. இங்கு சமுதாயத்திலும் பல சாதிப் பிரிவுகள், மனிதர்களிடத்தில் ஏற்றத் தாழ்வுகளைக் கற்பிக்கிறது. இந்தியர்கள் மொத்தத்தையும் ஆங்கிலேயத்துரைகள் இழிவாக நடத்திய போக்கை இங்கு காணமுடிகிறது.

'பிறை' என்னும் சிறுகதையில் பிராமணர் சாதியில் பிறந்த மாமியின் வீட்டு மாடியில் வாடகைக்கு குடிவந்தவர் வைத்தியநாதன். இங்கே தங்கிப் படிப்பதற்காக வந்தவரிடம் பாகுபாடு பார்க்கிறாள் மாமி. வைத்தியநாதனுக்கு குடிக்கத் தண்ணீர் கொடுத்த மாமி 'செம்பைத் தூக்கிக் குடிங்கோ' என்கிறாள்.

"செம்பையும் அதன் வாயில் கவிழ்த்து

டம்ளரையும் திண்ணை விளிம்பில் வைத்தாள்

நான் டம்ளரை எடுத்தேன்

தூக்கிக்குடிங்கோ... என்றாள் மாமி"[79]

பழங்காலத்தில் கொண்டிருந்த சாதிய அடிப்படையிலான ஏற்றத் தாழ்வுகள் மறையாமல், வளர்ந்த சமுதாயத்திலும் தொடர்ந்து வந்துகொண்டு இருப்பதைக் காணமுடிகின்றது. இச்சிறுகதையில் மாவட்ட அளவில் உயர்பதவியில் இருக்கும் அதிகாரியை மாமியின்

கணவர் வீட்டிற்கு அழைத்து வருகிறார். இதனைக் கண்ட மாமி "ஏன்னா... அவாள்ளாம் என்ன ஜாதியோ என்ன எழவோ? கண்ட கண்டவாளையெல்லாம் ஆத்துக்கு அழைச்சுண்டு வந்துடறேள்..."[80] என்கிறாள். இது நம் சமுதாயத்தில் மண்டிக் கிடக்கும் மூடப்பழக்க வழக்கத்தை எடுத்துக்காட்டுகின்றது.

தாழ்ந்த சாதி என்பதற்காகவே உயர்ந்த சாதிக்காரர்கள் வாழும் பகுதியில் செல்லும் போது செருப்பைக் கழற்றி கையில் வைத்துக் கொள்ளும் கொடுமையும் நடக்கிறது. இதனைக் கருப்பொருளாகக் கொண்டு ஆசிரியர் 'பிறை' என்னும் சிறுகதையில் எடுத்துக் காட்டுகிறார். இச்சிறுகதையில் கிராமத்தில் நிலவும் சாதி வேறுபாட்டைப் பற்றி 'டேவிட் முத்தையா' என்பவன் "இன்னும் எங்க கிராமத்துல, நான் செருப்பைக் கையில் எடுத்துக்கினுதான் நடக்க வேண்டியிருக்கு... இல்லேன்னா, 'அவ்வளவு ரப்பாடா, தாழ்ந்த சாதிப்பயலே'ன்னு மரத்தில் கட்டி வச்சு அடிப்பானுங்க"[81] என்று கூறுகின்றான். மதமும், சாதியும் மக்களை நல்வழிப்படுத்த தோன்றியது. ஆனால் அதைச்சில மதவாதிகளும் அரசியல் வாதிகளும் கையில் எடுத்துக்கொண்டு விளையாடி மக்களுக்கு இன்னல் விளைவிக்கின்றனர். மதத்தலைவர்களும், சாதிப்பெரியவர்களும் தங்கள் மதத்தையும், சாதியையும் உயர்வுபடுத்தி மக்கள் மனதில் பதிய வைத்தனர்.

'வர்க்கம்' என்னும் சிறுகதையில் பிறர்மூலம் வரும் பணத்தை ஏற்றுக் கொள்ளும் பிராமணர், பிறர் செய்யும் தொழிலைச் செய்து பணம் சம்பாதிக்கும் பிராமணர் அந்தப் பிறரை மட்டும் ஏற்றுக் கொள்ளத் தயங்குவது ஏன்? என்ற கேள்வியை ஒரு பிராமண் வாயிலாகவே கேட்பது போலப் படைத்துள்ளார் ஆசிரியர். இதனை,

"பெரியவா, நீங்களே தர்ப்பையைத் தூக்கி எறிஞ்சுட்டு, கறுப்புக்கோட்டைப் போட்டுண்டு வக்கீல்னு நீட்டி முழக்கிண்டு கோர்ட் கோர்ட்டா ஏறி வியாஜ்ஜியம் பேசறேன்னு பொய்யைச் சொல்லிண்டு, கள்ளன், திருடன், கேப்மாரிப் பயல்களோட காசை வாங்கிச் சீவிச்சுண்டு தானே மாமா பெரிய மனுஷாள் ஆனேள்... அப்புறம் நான் மட்டும் ஏன் ஆலையிலேயே பஞ்சு புடுங்கற உத்யோகம் பண்ணப்படாது? பிராமணன் என்ன பிராமணன் நமக்கு என்ன கொம்பா முளைச்சிருக்கு?"[82] என்பதிலிருந்து அறியலாம். இதில் ஒரு பிராமணரே மற்றொரு பிராமணனிடம் கூறும் கூற்றாக அமைத்துள்ளது.

தான் சம்பாதிக்கும் பணம் எவ்வழியில் வந்தாலும் அதைப்பற்றிக் கவலை கொள்ளாமல் மனிதர்களிடத்தில் மட்டும் உயர்வு தாழ்வு பார்ப்பது ஏன்? என்ற கேள்வியைத் தனது சிறுகதையின் மூலம் கேட்கிறார் ஆசிரியர். இது சமுதாயத்தில் மண்டிக்கிடக்கும் கொடிய பழக்கங்களின் மேல் பிரபஞ்சன் கொண்டுள்ள வெறுப்பைக் காட்டுகிறது.

"நேற்று மனிதர்கள்"[83] என்னும் சிறுகதை வேறு சாதிப் பையனைக் காதலித்த தன் பெண்ணையே கொலை செய்யும் தகப்பனையும், "காலகண்டன்"[84] என்னும் சிறுகதையில் பைத்தியம் என்பதற்காக மண் கிண்ணியில் சோறு கொடுக்கும் அவலத்தையும் எடுத்துக் காட்டுகின்றன.

பிராமண சமுதாயத்தை மையப்படுத்தியும் அவர்கள் மற்ற மனிதர்களை ஒதுக்கும் போக்கையும் இச்சிறுகதைகள் வெளிப்படுத்துகின்றன. இவற்றின்வழி சாதியின் பெயரால் இளைக்கப்படும் தீமைகளையும் இத்தீமைகள் நீங்கி சமுதாயம் சமதர்மம் உடையதாக மாறவேண்டும் என்பதையும் சிறுகதைகள் வெளிப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**அரசியல் நிலை**

இந்தியா இன்று மக்களாட்சி நடைபெறுகிற ஒரு சனநாயக நாடு. மக்களை மக்களால் மக்களுக்காகத் தேர்ந்து எடுக்கப்பட்டு ஆட்சி நடைபெற்று வருகின்றது.

அரசியல் தடையின்றிச் செல்வதற்கு உறுப்புகள் ஆறு இன்றியமையாவாம். அவை படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் எனப்படும். தன்னறிவின் ஒளி மட்டும் கொண்டு ஆட்சி செலுத்தும் மன்னனிலும் அமைச்சரின் அறிவையும் துணைக்கொண்டு ஆள்பவன் அரசர்களுள் சிறந்தவனாகின்றான் என்பதைத் திருவள்ளுவர்,

> "படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு"[85]

என்கிறார். இத்திருக்குறள் நாட்டை ஆளும் அரசர்களுக்குரிய பண்புகளை எடுத்துக்காட்டுகின்றது.

"தொண்டு பலவகைப்படும். அரசியல் தொண்டு, சமூகத் தொண்டு, சமயத் தொண்டு என்பவை அவற்றுள் சிறந்தவை. அரசியலே சிறந்தது என்று நம்பி உழைத்த பெரியோர்கள் பலர் பலவகை இடர்பாடுகளை உற்றிருக்கிறார்கள்"[86] என்ற கருத்து சமுதாயத்திற்குத் தொண்டு செய்து வாழ்வதை நோக்கமாகக் கொண்டு உழைத்த பெரியோர்களைப் பற்றி அறியவிக்கின்றது. இன்று ஊழல் நிறைந்த அரசியலையும் சுயநலம் கொண்ட அரசியல் வாதிகள் சிலரையும் காணமுடிகிறது., இந்நிலையினை ஆசிரியர் சிறுகதையின் வழி எடுத்துரைக்கிறார்.

'கருப்பட்டி' என்னும் சிறுகதையில் இன்றைய அரசியலின் உச்சத்தைப் படம் பிடித்துள்ளார் ஆசிரியர். இக்கதையில் இரண்டு அரசியல்

வாதிகள் ராமநாதனும், விநாயகனும் திரைப்படத்துறையில் இருந்து அரசியலுக்கு வந்தவர்கள். எதிரும் புதிருமாக இருந்தவர்கள். அவர்களின் ரசிகர்களும் அவ்வாறே இருந்தனர். விநாயகம் ராமநாதனுடன் அரசியல் லாபத்திற்காக ஒன்று சேர்கிறான். இருவரின் ரசிகர்களும் ஒன்று சேர்கிறார்கள். மனிதர்களின் உயிரைப் பலி கொடுத்து அரசியலில் முன்னேறும் அரசியல் வாதிகளை இச்சிறுகதைப் படம் பிடித்துக்காட்டுகின்றது. "ராமநாதனும், விநாயகமும் வரப்போகும் தேர்தலுக்காக ஒன்று சேர்ந்துவிட்டார்கள். இருவரின் ரசிகர்களும் கூட ஒன்று சேர்ந்துவிட்டார்கள்"[87] தன் சுயலாபத்திற்காக மனிதர்களையே பலி கொடுக்கும் மனசாட்சி இல்லாத அரசியல் வாதிகளை இன்றைய அரசியலில் காணமுடிகிறது.

ஒரு நல்ல அரசியல் வாதி எவ்வாறு இருக்க வேண்டும் என்ற அடையாளத்தை ஆசிரியர் 'தியாகி' என்னும் சிறுகதையில் சுட்டிக் காட்டியுள்ளார். ஆட்சி மாற்றத்தை அடிப்படையாக வைத்து செயல்படுவது ஒரு நல்ல அரசியல் வாதிக்கு அழகல்ல. மாறாக பொதுமக்களின் நலனை மனதில் கொண்டு செயல்படுவதே ஒரு நல்ல அரசியல் வாதியின் பண்பாகும் என்று தெளிவுபடுத்துகின்றார்.

"அரசியல் என்றால் ஆட்சி மாற்றம் என்பதையே குறியாய் வைத்து இன்றைய அரசியல் இயங்குகிறது. எங்களுக்கும் ஆட்சி, அதிகார மாற்றம் நோக்கமாய்த்தான் இருந்தது. ஆனால் அது பத்தாவது நோக்கம் எங்களைப் பூர்ணப்படுத்திக் கொள்வதையும், பொது மக்களை மனத்தளவில் முழுமைப் படுத்துவதையுமே நாங்கள் முதலான அரசியல் பணியாக நினைத்தோம்."[88] என்பதிலிருந்து ஒரு நல்ல அரசியல் வாதி ஆட்சியை விரும்பினாலும் அது கடைசி ஆசையாகத்தான் இருக்க வேண்டும். மற்றபடி மக்கள் நலன்தான் முதன்மையாக இருக்க வேண்டும் என்பதை உணரமுடிகின்றது.

'வாஸந்தியும்' போலித்தனமான அரசியல் வாதிகளைச் சாடுகின்றார். 'மண்ணின் மைந்தர்கள்' என்னும் சிறுகதையில், "அரசியல் ரொம்ப நாற்றமெடுத்துவிட்டது அம்மா முன்பெல்லாம் காந்திக் குல்லாவைப் பார்த்தாலே மரியாதை தோன்றும். காந்திக் குல்லாவை அணிந்தவன் நேர்மையானவன், பொய் சொல்லமாட்டான் என்று சனங்கள் நம்பினார்கள். இப்பொழுது குல்லாவை அணிந்தாலே சந்தேகப்படுகிறார்கள். உலகம் தலைகீழாகப் போய்விட்டது"[89] என்று வருந்துகின்றார். இது இன்றை அரசியலின் இழிநிலையை வெளிப்படுத்துவதாய் அமைகின்றது. 'சங்கம்' என்னும் சிறுகதையிலும் சாதி அடிப்படையிலான அரசியலைப் படம் பிடிக்கின்றார் பிரபஞ்சன். ராஜரத்தினம் வேலைக்காக ஒரு பெரியவரைச் சந்திக்கின்றான். சுரங்கத் தொழிற்சாலையில் வேலை வாங்கிக் கொடுக்கிறார். அதற்குத் தன் சாதிக்காரரான சுரங்கத் தொழிலாளர் சங்கச் செயலரும் உதவுகின்றார். அச்செயலர் அரசியலில் இருந்து கொண்டு சாதியை வளர்ப்பவராக இருக்கின்றார் சுந்தரேசனிடம் செயலர் பற்றி அப்பெரியவர் கூறும்பொழுது,

"போன வாரம் கூட என் கொழுந்தியா மகனைச் சேர்த்துவிட்டேன். நம்மளவங்கனா அவருக்கு உசுரு. சாதி சனம்ன்னா ரொம்பப் பிரியம். கட்டாயம் நான் சொன்னா செய்வாரு

அவரு கம்யூனிஸ்டுன்னு கேள்விப்பட்டனே...

ஆமாமா – அந்தக் கட்சிதான் அவரு – நல்ல மனுஷன்பா – எந்தக் கட்சியில் இருந்தால் தான் என்ன – நல்லா இருக்கனும். அதைப் பார்த்து நாம்ப சந்தோஷப்படனும். எந்த நிலைக்குப் போனாலும் நம்ம ஆளுக நாலுபேருக்கு உதவியா இருந்து கை தூக்கி விடணும். ஊருல என்ன நடக்குதுங்கறே, இப்போ ஐயரு மானேஜ்மண்ட்க்கு வந்தப்ப ஐயரு பசங்களா

வேலைக்கு வந்தாங்க – பின்னால நல்லமுத்துக் கவுண்டரு வந்தாரு – ஊருல உள்ள வன்னியன் எல்லாம் தலையே நிமித்திக்கிட்டு நடந்தான். இப்போ முதலியாரு வந்திருக்காரு – நம்ப செக்ரட்டரியும் முதலியாரு – ஒண்ணுக்குள்ளே ஒண்ணு. இப்போ எல்லோரும் சௌகரியமா இருக்காங்க"[90] என்கிறார். சாதி அரசியல், சாதியின் மென்மையான ஊடுருவல் சமுதாயத்தை எங்ஙனம் சூழ்ந்து பாடுபடுத்துகின்றது என்பதை வெளிச்சமிட்டுக் காட்டியுள்ளார் பிரபஞ்சன். எதையும் துணிச்சலுடன் சமுதாயத்திற்குப் படம் பிடித்துக் காட்டும் ஆற்றல் பிரபஞ்சனையே சாறும் என்பது குறிப்பிடத்தக்கது.

இன்றைய சூழலில் அரசியல் மிகவும் போலித்தனமாக இயங்குவதையும் கட்சிக்காரர்களுக்காக கட்சித் தலைவர்கள் பலர் சட்ட விரோதமாக உதவுவதையும் தன்னுடைய சுய நலத்திற்காக மக்களைப் பற்றி சற்றும் சிந்திக்காத அரசியல் வாதிகளையும் காணமுடிகின்றது. அரசியல் வாதிகளே பல குற்றங்களைச் செய்துவிட்டுப்பின் தன் அதிகாரத்தால் அதனை மறைத்துவிடும் போக்கையும் காணமுடிகின்றது. இந்நிலை ஓர் ஆரோக்கியமான சமுதாயத்திற்குப் பாதிப்பையே உருவாக்கும். நல்ல சமுதாய்திற்கு நல்ல அரசியல் வாதிகள் தேவை என்பதையும் நல்ல அரசியல் எப்படி இருக்க வேண்டும் என்பதையும் ஆசிரியர் தனது சிறுகதைப் பாத்திரத்தின்வழி எடுத்துரைக்கிறார். இதன்மூலம் நல்ல அரசியல் வாதிகளால் தான் சிறந்த சமுதாயம் மலரும் என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

பலி வாங்கும் அரசியல் நிலைபற்றி "பலி"[91] என்னும் சிறுகதையிலும், தன் தந்தை உயிரோடு இருந்தபோது அவருக்கு ஒரு வேளை சாப்பாடு கூடப் போடாமல், அரசியல் வாதியான பின்பு கௌரவத்துக்காக அப்பாவின் முதலாமாண்டு நினைவு விழாவில் பெரிய கூட்டத்திற்கே விருந்தளிக்கும் 'கோபாலு'வை "தந்தையும் மகனும்"[92] என்னும் சிறுகதையிலும் தன்

நண்பன் பெரிய அரசியல்வாதி, தனக்கு உதவி செய்வான் என்று எண்ணி கடிதம் எழுதிய நடராஜனின் கடிதம் படிக்காமலே குப்பைத் தொட்டிக்குள் போகும் அவலத்தை "யாரும் படிக்காத கடிதம்"[93] என்னும் சிறுகதையிலும், வேலை வாங்கித் தருவதாகப் பல பேர்களை ஏமாற்றும் அரசியலின் போலித்தனமான முகத்தை "சிக்கன் பிரியாணியும் சீதேவி படமும்"[94] என்னும் சிறுகதையிலும் எடுத்துரைக்கிறார் பிரபஞ்சன். இச்சிறுகதைகளில் இன்றைய அரசியல் சீர்கேட்டை வெளிப்படுத்துவதைக் காணமுடிகிறது.

**கல்வி**

கல்வி பழமையானது, கல்வி, குடும்பம், அரசு, சமயம் போன்ற சமூக நிறுவனங்களுடன் சேர்ந்தே வளர்கின்றது. ஒருவனுக்குக் கல்வி என்பது மிக இன்றியமையாதது. அந்தக் கல்வியைப் பிச்சையெடுத்தாவது கற்றல் வேண்டும் என்பதை,

> "பிச்சைபுக் காயினும் கற்றல் மிகஇனிதே
> நற்சுவையில் கைக்கொத்தல் விலவும் முன்னினிதே"[95]

என்று இனியவை நாற்பது பாடல் கூறுகின்றது. கல்விச் செல்வத்தைப் பற்றிக் கூறும்போது ஒளி தரும் அணிகலன்களை அணியும் அவயங்கள் அவற்றை அணியாத கண்ணுக்கு ஈடாகாது. பலவகை தங்க ஆபரணங்களால் அலங்கரித்துக் கொள்ளும் வேந்தர்கள் அணிகலனே அணியாத கல்வியறிவுடைய அறிஞர்களுக்கு நிகராகமாட்டார்கள் என்பதை,

> "பொன் அணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
> மன்னம் அறிஞரைத் தாம் மற்று ஒருவார் மின்னுமணி
> பூணும் பிறஉறுப்புப் பொன்னே அதுபுனையாக்
> காணும்கண் ஒக்குமோ காண்"[96]

என்னும் பாடல் கல்வியின் சிறப்பை உணர்த்துகின்றது. ஒருவர் தம் வாழ்நாளில் பெறக்கூடிய செல்வங்களுள் எல்லாம் முதன்மையானது கல்விச் செல்வம் ஆகும்.

நிலையற்ற வாழ்வு எனக் கருதப்படும் வாழ்வில், ஏழேழு தலைமுறைக்கும் ஒருவன் கற்ற கல்வி புகழைத் தேடித்தரும் என்பர். அறிவின் பயனும் நலமும் இடையறாது வரும். எவரும் விரும்பித் தேடிச்செல்லும் செல்வத்தையும் கல்விச் செல்வத்தையும் ஒப்புமைப்படுத்திக் கூறுங்கால் கல்வியே அழிவற்ற செல்வமாகும்.

இவ்விலக்கியச் செய்திகள் யாவும் உயர்வான சிந்தனைகள் தோன்றக் கல்வி அவசியமாகும் என்பதையும் கல்வியறிவே ஒரு மனிதனை உயர்த்திக் காட்டும் என்பதையும் உணர்த்துகின்றது. மனிதனிடம் உள்ள அறியாமை இருளைப் போக்கி அறிவையும் நல்ல எண்ணங்களையும் வளரச் செய்வது கல்வியாகும். இத்தகைய கல்விச் செல்வத்தைப் பிரபஞ்சனும் சிறுகதைகளில் கையாண்டுள்ளார் எனலாம்.

தான் கற்ற கல்வியை வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்வதன் அவசியத்தை 'ஒரு பகல் நேர நாடகம்' என்னும் சிறுகதையில் காட்டுகின்றார். நடராஜன் தான் கற்ற கல்வியைப் பதிவு செய்யச் சிரமப் படுகிறான். புலவர் பட்டம் படித்த அவன் எந்தப் பிரிவில் பதிவது என்று தெரியாமல் இருக்கின்றான். இருப்பினும் கல்வி கற்றதின் பயனே பதிவு செய்வது தான் என்பதால் காத்திருக்கின்றான். பின்பு மாலைவரைக் காத்திருந்து புலவர் பட்டத்தைப் பதிவு செய்கின்றான்.

"நடராஜன் ஆபீஸை விட்டு வெளியில் வரும்போது மணி ஐந்தை நோக்கிக் கொண்டிருந்தது. வெய்யில் அவ்வளவாக இல்லை. ஆனாலும் உஷ்ணம் இருந்தது"[97] தான் பதிவு செய்த திருப்தியோடு வெளியே வந்தான் நடராஜன்.

'தட்சணை' என்னும் சிறுகதை கல்வி கற்கும் குழந்தைகளுக்குச் சிறுவயதிலேயே நற்பண்புகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றது. இச்சிறுகதையில் தந்தை வாங்கிக் கொடுத்த வெளிநாட்டுப் பேனாவை ஆசிரியர் வருகைப் பதிவு எடுக்க வாங்குகிறார். திருப்பிக் கொடுக்க மறந்துவிடுகின்றார். அப்பா அடிப்பாரோ என்று பயம் கொள்கிறான் நவநீதகிருஷ்ணன். அப்பாவோ "அதனால என்ன? வாத்தியாரு தானே வாங்கிட்டாரு. வாத்தியாரு தெய்வம் மாதிரிப்பா. அவங்களுக்கு கொடுக்கிறது கடமை, நீ வருத்தப்படாதே, உனக்கு வேற பேனா வாங்கித் தர்றேன்"[98] என்கிறான். அதுகேட்ட நவநீதகிருஷ்ணன் மகிழ்கின்றான். இச்சிறுகதையில் ஆசிரியர் இறைவன் போன்றவர் என்பதை பிரபஞ்சன் வலியுறுத்துவதைக் காணமுடிகின்றது.

'அடி' என்ற சிறுகதையில் தன் மகன் இங்கிலாந்து சென்று பெரிய படிப்பு படிக்க வேண்டும் என்று தந்தை நினைப்பதை, "ராசா... நீ கூட அங்க போயிதான் படிக்கனும்! பெரிய கலைக்டரா வரனும்னா லண்டனுக்குப் போயி ஐ.சி.எஸ். படிக்கனும் இல்லையா?"[99] என்கிறார். தந்தை தன் மகனின் எதிர்காலம் பற்றிக் கூறுகிறார். இங்கு கல்வியின் முக்கியத்துவம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. "பூக்களை மிதிக்கக்கூடாது"[100] என்னும் சிறுகதையும் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றது. கல்வியை ஆழமாகக் கற்க வேண்டும். அப்பொழுது தான் அது அழியாது பலன் கொடுக்கும். மனிதனின் ஒவ்வொரு செயல்பாட்டுக்கும். வளர்ச்சி நிலைக்கும் காரணமாய் அமைவது கல்வி என்பதை ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். கல்வியினால் உண்டாகும் பயனையும் உயர்வினையும் பெருமையினையும் சிறுகதைகளின் வழி மிகச் சிறப்பாக வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர்.

# தொகுப்புரை

மனித வாழ்க்கை, பண்புகளின் வாயிலா நிர்ணயிக்கப்படுகின்றது. மனிதனுக்குக் கிடைத்த மாபெரும் வரமாகிய வாழ்வை எப்படி வாழ்வது என்பதை அறிந்து கொள்வது இன்றியமையாதது. உலகில் உள்ள பல சமயங்கள் மனிதனுக்குரிய நெறிகளைத் தத்துவங்களாக வெளிப்படுத்தியுள்ளன. இத்தத்துவங்கள் மனிதனை நெறிப்படுத்தி வாழ்வை வளப்படுத்துவன. உயர்வான இவ்வாழ்வியல் நெறிகளைப் படைபிலக்கியங்கள் வெளிப்படுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.

இலக்கியங்கள் மூலம் பெறப்படும் அறிவுரைகள் மனிதனுக்குச் சிறப்பான வாழ்வு நெறியினை வழங்குகின்றன. மக்களின வாழ்க்கை நிலையினை வெளிப்படுத்தும் காலக்கண்ணாடியாகச் சிறுகதைகள் அமைகின்றன. சிறுகதைப் படைப்பாளர்கள் வாழ்வியல் நெறிகளைப் பிரதிபளிக்கும் நிலையில் தனது படைப்புகளைப் படைத்துள்ளனர். எனவே சிறுகதைகள் வாழ்க்கையின் பிரதிபலிப்பாக அமைகின்றன. இதனடிப்படையில் பிரபஞ்சன் சிறுகதைகளில் அன்பு, மனிதநேயம், இல்லறவாழ்வு, அறம், தியாகம், நாட்டுப்பற்று, முதுமைநிலை, தீண்டாமை, அரசியல் நிலை, கல்வி போன்ற நெறிகளை எடுத்துரைக்கின்றார்.

அமைதியான வாழ்க்கைக்கு அடிப்படையாய் அமைவது அன்பு ஆகும். பிரபஞ்சன் மனித வாழ்வில் மகிழ்ச்சித் தோன்றுவதற்கு அன்பினை அடிப்படையாக கொண்ட வழியினைச் சிறுகதைகளின் வழி கூறுகின்றார்.

பிரபஞ்சன் தனது படைப்புகளில் மரத்தின்மீது மனிதர்கள் கொண்ட அன்பு, பறவை மீது கொண்ட அன்பு, அறிமுகமில்லாதவர்கள், அநாதையாக விடப்பட்ட பெண், பசு, கிளி ஆகியவற்றின் மீது வைத்துள்ள

அன்பு பற்றி தம் படைப்புகளில் பேசுகிறார். இவை அனைத்தின் வழி பிரபஞ்சன் இந்த பிரபஞ்சத்தையே நேசிக்க வேண்டும் என வலியுறுத்துகிறார்.

பிறருடன் நட்புக் கொள்ளுதல், அன்பினை வளர்த்துக் கொள்ளுதல், சுயநலமின்மை போன்றவை மனிதநேயப் பண்புகள் எனப்படுகின்றன. இப்பண்புகள் மனிதனிடம் சமூக மனிதநேயமாகக் காணப்படுவதைப் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் படைத்துக் காட்டியுள்ளார். அவர் படைத்த மனித நேயப்படைப்புகள் அனைத்தும் சமுதாயத்தை நெறிப்படுத்தும் சிந்தனைப் போக்காக அமைகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

அறம் என்பது மனிதன் தன் வாழ்வில் கடைப்பிடிக்கும் நற்பண்புகளைக் குறித்து அமைகின்றது. நேர்மை, பெற்றோர் கடமை, சுயநலமின்மை, ஈகை போன்ற நல்லறப் பண்புகள் மனிதனை மேம்படுத்த உதவும் கருவியாகத் திகழ்கின்றன என்பதனைப் பிரபஞ்சன் சிறுகதைகள் எடுத்துரைக்கின்றன.

நாட்டுப்பற்று கொண்டவன், நாடு வலம் பெறுவதையே தமது கொள்கையாகக் கொண்டு வாழ வேண்டும் என்பதனை நாட்டுப்பற்று கொண்ட பாத்திரத்தைக் கொண்டு வெளிப்படுத்தியுள்ளார்.

ஆசிரியர் முதுமை குறித்த மிக நுட்பமான சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளார். முதியவர்களின் மன உணர்வுகள் பற்றியும் இளைய தலைமுறையினர் முதியவர்களைப் பேணாத போக்கினையும், பழமை மாறாத முதியவர்கள் பற்றியும் பிரபஞ்சன் சிறுகதைகளில் காணமுடிகிறது.

ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் இருந்த தீண்டாமை பற்றியும், நம்நாட்டில் காணப்படும் தீண்டாமை பற்றியும் சாடியிருக்கிறார். இவரது சிறுகதைகளில் ஆங்கிலேயரின் அடக்குமுறை, ஈ.வெ.ரா.வின் சமத்துவக் கருத்துக்கள் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

பிரபஞ்சன் சிறுகதைகளில் சுயநலம் வாய்ந்த அரசியல் வாதிகளையும், ஏமாற்றும் அரசியல் வாதிகளையும் படம் பிடித்துக் காட்டுகிறார். ஒரு நல்ல அரசியல் வாதிக்குப் பதவி ஆசை இருக்கக்கூடாது என்பதையும், மக்கள் நலனை மட்டும் தான் கருத்தில் கொள்ள வேண்டும் என்பதையும் தன் படைப்பின் மூலம் வலியுறுத்துவதைக் காணமுடிகிறது.

மனிதனுக்குக் கண்போன்று அமையக்கூடிய கல்வியைப் பிச்சை எடுத்தாவது கற்க வேண்டும். இக்கல்வியின் சிறப்பை உணர்த்தும் வகையில் பிரபஞ்சன் சிறுகதைப் படைத்துள்ளார். ஒவ்வொரு மனிதனின் உயர்வான செயல்பாட்டிற்கும் வளர்ச்சி நிலைக்கும் காரணமாய் அமைவது கல்வியே என்பதை ஆசிரியர் சிறுகதைகளின் வழி புலப்படுத்தியுள்ளார்.

வாழ்வியல் நெறிகள் அனைத்தும் குடிமக்களை நற்குடிமக்களாக உயர்த்தும் கருவிகளாகும். இந்தக் கருவிகளைத் தகுந்த இடத்தில் பயன்படுத்தி சமூகத்திற்கு நற்சிந்தனைகளை விதைத்துள்ளார் ஆசிரியர் என்பதனை அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. கா.அப்பாத்துரையார், வாழும் வகை, ப.183
2. அண்ணல் சுப்பிரமணியனார் & டாக்டர் வி.கே.இராமச்சந்திரன், வாழ்வுநெறி, பக்.17–18
3. மேலது, ப.17
4. க.சுஜாதா, செவ்வியற் தமிழ் ஆய்வுக்கோவை, ப.419
5. சு.வேங்கடராமன், தமிழ்ச் சிறுகதைகள் அன்றும் இன்றும், ப.21
6. குறள், எண்.54
7. ச.வே.சுப்பிரமணியன் (எ.மே.), தமிழ் இலக்கிய வரலாறு, தேவாரம், பா.4895, ப.153
8. தமிழ்ப்பேரகராதி, சென்னை பல்கலைக்கழக, தமிழ் லெக்சிகன் ப.2353
9. குறள் எண்.72
10. சா.கிருஷ்ணமூர்த்தி, தமிழிலக்கியத்தில் மனிதநேயம், கருத்தரங்கக் கட்டுரை, ப.03
11. அன்புசெல்வி, சங்க இலக்கியப் பெண்களால் வெளிப்படும் மனித உறவுகள், முனைவர்பட்ட ஆய்வேடு, ப.10
12. இரா.தண்டாயுதம், தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள், பக்.118–119
13. பிரபஞ்சன் சிறுகதை தொகுதி–1, 'பிரும்மம்', ப.45
14. மேலது, 'சூரியனைப் பார்க்காமல்', ப.172
15. மேலது, 'அரி என்கிற நண்பன்', ப.224
16. மேலது, 'சுமதிக்கு ஒரு கடிதம்', ப.292
17. மேலது, 'மனுஷி', ப.353
18. மேலது, 'சினேகம்', ப.537
19. மேலது, 'பங்காளிகள்', ப.643
20. மேலது, 'அந்த மனிதர்', ப.649
21. மேலது, 'அப்பாவின் வேஷ்டி', ப.364
22. மேலது, 'சிக்கி', ப.795
23. மேலது, 'பகை', ப.140

24. கிருஷ்ணமூர்த்தி, தமிழிலக்கியத்தில் மனிதநேயம், ப.22

25. ந.பிச்சமூத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.38

26. மேலது, ப.38

27. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி-I, மாமன் உறவு, ப.189

28. மேலது, 'ஒரு ஊரில் இரண்டு மனிதர்கள்', ப.25

29. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–1, 'ஆண் பிள்ளை', ப.210

30. மேலது, 'குழந்தைகள்', பக்.484–488

31. மேலது, 'அப்பாவு கணக்கில் 35 ரூபாய்', ப.204

32. மேலது, 'கருணையினால் தான்', ப.221

33. மேலது, 'மரி என்கிற ஆட்டுக்குட்டி', ப.565

34. அண்ணல் சுப்பிரமணியனார் & டாக்டர் வி.கே. இராமச்சந்திரன், வாழ்வுநெறி, ப.15

35. கோவிந்தசாமி,ம. குறுந்தொகை நயவுரை, குறுந்.பா.167, ப.47

36. கண்ணம்பிரத்தினம், (எ.மே), நீதிக்களஞ்சியம், கொன்றைவேந்தன், பா.3, ப.17

37. பிரபஞ்சன் சிறுகதை தொகுதி–1, முன்னுரை, ப.5

38. மேலது, 'சலிப்பு', ப.107

39. இரா.தண்டாயுதம், தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள், பக்.231–232

40. பிரபஞ்சன் சிறுகதைத்தொகுதி–1, 'நிகழ் உலகம்', ப.231

41. மேலது, 'வீடு', ப.246

42. மேலது, 'அன்னை இட்ட தீ', ப.601

43. மேலது, 'தலை சாய்க்க', ப.109

44. மேலது, 'கேசவன் கல்யாணத்தின் போது', ப.503

45. மேலது, 'சொந்த ஊர்', ப.606

46. மேலது, 'மாறுதல்கள்', ப.271

47. குறள் எண்.49

48. நன்னெறி, பா.30

49. அண்ணல் சுப்ரமணியனார் & டாக்டர் வி.கே.இராமச்சந்திரன், வாழ்வுநெறி ப.50
50. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–1, 'மீன்', ப.85
51. மேலது, 'தந்தையும் மகனும்', ப.899
52. மேலது, 'சிறுமை கண்டு', ப.763
53. மேலது, 'பப்பா', ப.775
54. மேலது, 'இராஜகோபுரமும் சங்கப் பலகையும்', ப.251
55. மேலது, 'ராட்சஸக் குழந்தை', ப.332
56. மேலது, 'அடி', ப.435
57. மேலது, 'ஆகஸ்ட் 15', ப.753
58. மேலது, 'பிம்பம்', ப.133
59. மேலது, 'ஒரு நெகட்டிவ் அப்ரோச்', ப.747
60. தா.கோவேந்தன், திருமகள் தமிழ் கை அகராதி, ப.138
61. நற். பா.24 (1–3)
62. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–1, 'தியாகி', ப.573
63. ஜெகாதா, ஜெகாதா சிறுகதைகள், ப.36
64. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–1, 'அபஸ்வரம்', ப.622
65. மேலது, 'அபஸ்வரம்', ப.627
66. மேலது, 'தோழமை என்பது' ப.640
67. பாரதியார் கவிதை வரி, ப.40
68. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–1, 'தியாகி', ப.574
69. மேலது, 'பாதுகை', ப.489
70. மேலது, 'ஒரு ஏழை நாடும் ஒரு பரம ஏழையும்', ப.799
71. மேலது, 'தியாகி', ப.573
72. அ.ஜான்லூயி, அந்திப்பொழுது, பக்.46–47
73. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–1, 'விழுது', ப.167
74. மேலது, 'நேற்று மனிதர்கள்', ப.328
75. மேலது, 'நேற்று மனிதர்கள்', ப.322

76. மேலது, 'அமரத்துவம்', ப.739

77. இர.பிருந்தாவதி, நூற்றாண்டு காணும் அறிஞர்கள் குறித்தக் கருத்தரங்கக் கட்டுரைகள், ப.186

78. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி-1, 'சைக்கிள்', ப.197

79. மேலது, 'பிறை', ப.741

80. மேலது, 'பிறை', ப.743

81. மேலது, 'பிறை', ப.744

82. மேலது, 'வர்க்கம்', ப.840

83. மேலது, 'நேற்று மனிதர்கள்', ப.322

84. மேலது, 'காலகண்டன்', ப.578

85. குறள் எண். 381

86. மு.வரதராசன், நாட்டுப்பற்று, ப.83

87. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி-1, 'கருப்பட்டி', ப.522

88. மேலது, 'தியாகி', ப.574

89. வாஸந்தி, வாஸந்தி சிறுகதைகள், பா.25

90. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி-1, 'சங்கம்', ப.118

91. மேலது, 'பலி', ப.74

92. மேலது, 'தந்தையும் மகனும்', ப.396

93. மேலது, 'யாரும் படிக்காத கடிதம்', ப.494

94. மேலது, 'சிக்கன் பிரியாணியும் சீதேவி படமும்', ப,542

95. அருள்சாமி உரை (எ.மே), நீதி நூல்கள், இனியவை நாற்பது, பா.8, ப.62

96. கண்ணம்பரத்தினம் (எ.மே), நீதிக்களஞ்சியம், நன்னெறி பாடல், ப.98

97. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி-1, 'ஒரு பகல்நேர நாடகம்', ப.62

98. மேலது, 'தட்சனை', ப.349

99. மேலது, 'அடி', ப.113

100. மேலது, 'பூக்களை மிதிக்கக்கூடாது', ப.124

# 3. பெண்களின் வாழ்வியல் சிக்கல்கள்

இவ்வுலகில் மனிதனின் வாழ்வு பிறப்பு – வாழ்வு – இறப்பு என்ற மூன்று நிலைகளில் அமைந்துவிடுகின்றது. இன்பமும் துன்பமும் ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையில் பல மாற்றங்களை ஏற்படுத்துகின்றது. ஒரு மனிதனுக்கு நல்ல வாழ்க்கை என்பது தன்னையும், தன்னைச் சுற்றியுள்ளவர்களையும் சமுதாயத்தையும் பேணுவதிலுமே அமைகின்றது.

“ஒவ்வொரு தனி மனிதனும் தனது தனிமைச் சிறப்புக்கும், தன்னை ஈன்று புறந்தந்து தனக்கும் தன் வழியினர்க்கும் இடையறாத துணையாக நிற்கும் சமுதாயத்தின் மலர்ச்சிக்கும் பயன்படுவதே நல்ல வாழ்க்கை என்று முடிவு செய்யத்தக்கதே”[1] இக்கருத்திலிருந்து ஒரு மனிதனுக்குச் சிறந்த வாழ்வு என்பது அவன் சுயநலமின்றி பொது நலத்துடன் வாழ்வதே என்பது தெளிவாகின்றது.

“வாழ்க்கை என்பது ஒரு சிறந்த கலையாகும். அதனை நல்லமுறையில் அமைத்துக்கொள்ள வேண்டும். நாமும் வாழ்ந்து மற்றவர்களையும் வாழவைக்க வேண்டும். நாம் கொள்ளும் உயரிய கொள்கை வாழ்; வாழவை என்பது”[2] மனித வாழ்வு பற்றிச் சிந்திக்க வைக்கின்றது. மனிதன் தன்னை மட்டும் பேணாது தன்னைச் சுற்றியுள்ளவர்களையும் பேணிக்காத்திட வேண்டும் என்பதே கொள்கையாகக் கொண்டு வாழவேண்டும். இது மனிதக் கொள்கையாகவும் அமைகின்றது. இவற்றிலிருந்து மனிதன் செய்ய வேண்டிய கடமைகள், அடைய வேண்டிய புகழ், விரும்ப வேண்டிய பொதுநலப் பண்பு ஆகியவை மனித வாழ்க்கையின் அடிப்படையாக அமைகின்றது.

**வாழ்வியல் சிக்கல்கள்**

குடும்பம், சமுதாயம், நாடு, உலகம் என்று பறந்துபட்ட உறவுத் தொடர்புடன் மனிதன் வாழும் போது அவ்வாழ்வு சிறப்படைகின்றது. இவ்வுறவுகளில் விரிசல் ஏற்படும் பொழுது மனிதனின் வாழ்வு நிலையில் பல சிக்கல்கள் தோன்றுகிறது. அதனால் மாறிவரும் சமுதாயச் சூழல்களுக்கு ஏற்ப மனித வாழ்க்கையில் பல சிக்கல்கள் தோன்றி மறைகின்றன. சில சிக்கல்கள் நிலைபெற்றுவிடுகின்றன. இதனால் பொது வாழ்க்கை பெருமளவில் பாதிப்பு அடைகின்றது. இதற்குக் காரணம் மனிதன் தனக்கு வரையறுக்கப்பட்ட கோட்பாட்டிலிருந்து மீறுவதினால் தான். இதனை,

"நாட்டில் கொலையும், கொள்ளையும், கற்பழிப்பும், வன்முறைச் சம்பவங்களும், மதுவும், போதைப் பொருளும், மனிதனை அடிமைப்படுத்தும் நிலையும், ஜாதி, வரதட்சனை, பெண் அடிமை, வறுமை போன்ற சமுதாயத் தீமைகளும் நாளுக்கு நாள் பெருகிவருகின்றன. இவற்றிற்குக் காரணம் வாழ்வியல் விழுமியங்ளைவிட முரண் விழுமியங்கள் ஆதிக்கம் செலுத்துதலே ஆகும்"[3] என்று சேதுமணியன் கூறுவது சிந்திக்கத்தக்கது.

நிலவுடைமைச் சமுதாயம் மாறி முதலாளித்துவம் எழுச்சி பெற்றுள்ள இக்காலக்கட்டத்தில் பல புதிய சிக்கல்களும் எழுந்துள்ளன. இச்சிக்கல்களைப் படைப்பிலக்கிய ஆசிரியர்களும் தமது சிறுகதைகளில் பதிவு செய்கின்றனர். இவற்றில் பெண்கள் குறித்த சிக்கல்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன எனலாம். தொடக்கக் காலச் சிறுகதைகளில் சமுதாயத்தில் உள்ள வாழ்வியல் சிக்கலான பால்ய விவாகமும், விதவையர் நிலையும், முக்கியச் சிக்கல்களாகச் சித்திரிக்கப்பட்டள்ளன. வ.வே.சு. ஐய்யரின் 'குளத்தங்கரை அரசமர'த்துடன் தொடர்ந்து மாதவையா தொடங்கி பல சிறுகதை ஆசிரியர்களின் சிறுகதையில் பெண்கள் சிக்கல்கள் முதன்மையாக

அமைந்துள்ளன. கல்கியின் 'கேதாரியின் தாயார்' என்னும் சிறுகதை ஒரு மகனின் சிந்தனையில் விதவையான அம்மாவின் நிலையை ஆழமாகச் சித்திரிக்கின்றது. பிரபஞ்சன் எழுதியுள்ள 'அம்மா' என்னும் சிறுகதையிலும் விதவை அம்மாவைப் பற்றிச் சிந்திக்கும் மகனைக் காணமுடிகின்றது என்பது குறிப்பிடத்தக்கது. சிறுகதைகளில் முதிர் பெண்டிர் நிலைகளும் மனமுறிவுகளும், வரதட்சணைச் சிக்கலும் சிறுகதைகளில் அமைந்து வருவதைக் காணமுடிகிறது.

**பெண்கள் வாழ்க்கை ஒரு பார்வை**

பல நூற்றாண்டுகளாகப் பெண்களின் வாழ்க்கை கணவன், வீடு, குடும்பம் என்னும் இல்லறத்தைச் சுற்றியே சுழன்று வருகின்றது. தொடக்கக் காலத்தில் மானிட இனத்தின் வளர்ச்சிக்குப் பெண்களின் பங்கு அளவிடமுடியாத முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்துள்ளது. பெண்ணே குடும்பத்தைத் தாங்குபவளாகவும், வழி நடத்திச் செல்பவளாகவும் அமைந்தாள்.

மரபு வழிச் சமூக மதிப்புகளில் ஆண்களுக்குக் கிடைத்த சுதந்திரமும் உரிமைகளும் பெண்களுக்கு மறுக்கப்பட்டது உண்மை. சமூக மாற்றத்தினால் உருவான புதிய சமூக மதிப்புகளில் பெண்களின் சமூகநிலை குறிப்பிடத்தக்க அளவு முன்னேற்றமடைந்துள்ளது. எல்லாச் சமூகங்களிலும் பெண்களுக்குச் சிக்கல் உண்டு. அவை கல்வி, திருமணம், காதல், வரதட்சணை, குடும்ப உறவு நிலைகள், பொருளாதார நிலை போன்றவை பெண்களின் சமூகச் சிக்கல்களாக அமைகின்றன. தந்தையை, சகோதரனை, கணவனை, மகனைப் பேணுகின்றவளாகப் பெண் அமைகின்றாள். இங்ஙனம் அமைந்த பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களை ஆரம்ப காலச் சிறுகதைகள் பதிவு செய்துள்ளன எனலாம்.

புதுமைப்பித்தனின் சிறுகதைகளில் பெண் பற்றிய சிந்தனை ஆழமாக வேரூன்றியுள்ளதைக் காணமுடியும். இதிகாசக் கால அகலிகைக்குப் புது வடிவம் கொடுத்து அவளின் துன்பத்தை வெளிப்படுத்துகின்றார் 'சாப விமோசனம்' என்னும் சிறுகதையில்.

"சாலையில் ஒரு கற்சிலை, தளர்ந்து நொடிந்துபோன தசைக் கூட்டத்திலும், வீரத்தைத் துள்ள வைக்கும் மோகன வடிவம்; ஓர் அபூர்வ சிற்பி பூலோகத்தில் இதற்காகவென்றே பிறந்து தன் கனவையெல்லாம் கல்லில் வடித்துவைத்தானே என்று தோன்றும் அவ்வளவு லாகிரியை ஊட்டுவது. ஆனால் அந்தப் பதுமையின் கண்களில் ஒரு சோகம் – சொல்லில் அடைபடாத சோகம் – மிதந்தது. பார்க்கிறவர்களின் வெறும் தசை ஆசையான காமத்தைக் கொன்று அவர்களையும் சோகத்தில் ஆழ்த்தியது. அந்தச் சிற்பியின் அபூர்வக் கனவு அன்று சாபத்தின் விளைவு. அவள் தான் அகலிகை"[4] என்று தொடக்கத்திலேயே சிறுகதையின் கருவைத் தாங்கும் வகையில் அமைத்திருக்கிறார் ஆசிரியர். இச்சிறுகதை கல்லிலிருந்து விமோசனம் கிடைத்தாலும், அகலிகைக்கு அவளுடைய மனதிலிருந்தே விமோசனம் கிடைக்காத நிலையினை இச்சிறுகதை விளக்குகின்றது.

தி.ஜ.ர. சிறுகதையில் ஊனமுற்ற பெண்ணின் சமூதாயச்சிக்கல் பேசப்படுகின்றது. அவரது 'நொண்டிக்கிளி' என்னும் சிறுகதையில் ஊனமுற்ற பெண்ணின் துன்பத்தைப் படம் பிடிக்கின்றார் ஆசிரியர். இளமையில் வந்த இளம்பிள்ளை வாதத்தால் நொண்டியாகிவிட்ட ஒரு பெண்ணின் மண உணர்வுகளை மிக மென்மையாகவும் நுண்மையாகவும் வெளியிடும் சிறுகதை 'நொண்டிக்கிளி' இச்சிறுகதையில் வரும் ஊனமுற்ற பெண்ணை எதிர் வீட்டு வாலிபன் காதலிக்கிறான் பின் அவளின்

ஊனத்தை அறிந்து கொண்டவன் அவளை விட்டு விலகிச் செல்கின்றான். அதனால் அவள் மனம் பாதிப்புக்குள்ளாகிறது.

“ஐயோ! இறைவன் படைத்த படைப்பில் துளிக் கோணல் கூடாதா? அது என் குற்றமா? நான் என்ன நாட்டியமா ஆடப்போகிறேன்? சாமுத்திரிகா லெட்சணத்தைக் கரைகண்ட சித்திரக்காரனோ அவன்?”[5] என்றெல்லாம் சிந்திக்கிறாள். இச்சிறுகதை சமுதாயத்தில் ஊனமுற்ற பெண்ணிற்கு ஏற்படும் சிக்கலையும் துன்பத்தையும் வெளிக்கொணர்கின்றது. மேலும் ஊணமுற்ற பெண்களின் மனப்போராட்டத்தினையும் வெளிப்படுத்துகின்றது.

தி.ஜானகிராமனும் தமது சிறுகதைகளில் பெண்களின் வாழ்வியல் சிக்கல்களைப் படைத்துள்ளார். வறுமை காரணமாக விபச்சாரம் செய்து வாழ நேர்ந்த ஒரு பெண் இறந்துவிடவும், அவள் உடலைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்ல உதவாமல் ஊரார் மறியல் செய்ததைக் கண்டு உள்ளம் பதைத்த கோயில் மானேஜர் ஊரை இருட்டில் மூழ்க வைக்கும்படி விளக்கேற்றாமல் விட்டுவிட்டதையும், அவரது தர்மா வேசத்தையும் கூறுகிற “கோபுர விளக்கு”[illegible] என்னும் சிறுகதையில் ‘தமுரு’ என்கிற பெண் வறுமை காரணமாக விபச்சாரம் செய்து வாழ்பவள். அவள் இறந்தபோது அவளுக்காக வருந்த ஊரில் யாரும் இல்லை மாறாக கோயில் மானேஜரும் கௌரியும் வருந்தினார்கள். அவள் செய்ததை மறந்து அவளுக்காக இறக்கப்படும் மனிதநேயம் கொண்ட பெண்ணாக கௌரி வருகிறாள்.

மேற்கண்ட சிறுகதைகளில் பல்வேறு நிலைகளில் பெண்கள் அடையும் வாழ்க்கைச் சிக்கல்களை, துயரங்களை நுணுகி ஆராய்ந்துள்ளனர். இவை யாவும் பெண்கள் குறித்த மரபு சார்ந்த சிந்தனைகள் மாறி மக்கள் சமுதாயத்தில் பால் பாகுபாடின்றி வாழவேண்டும் என்பதை வலியுறுத்த படைக்கப்பட்டவையாகும்.

தாய்வழிச் சமுதாயத்தில் சொத்துரிமை பெண்ணுக்கே உரியது. பெண்ணின் வாழ்வில் தாய், சேய், பந்தம் நிலை பெற்றது. அச்சமயம் குடும்பத்தில் ஆணின் தேவை அதிகரித்தது. அதன் விளைவாக பெண் வாழ்வு படிப்படியாக அடிமைப்பட ஆரம்பித்தது. பெண்ணின் வாழ்விலும் சிக்கல்கள் தோன்ற ஆரம்பித்தது, குழந்தைப் பராமரிப்பு, வீட்டுவேலை, சமையல் போன்ற பூரண இல்லறப் பொறுப்பிற்கு அவளை நிர்பந்தப்படுத்தியது. தந்தைவழிச் சமுதாயம் வளர ஆரம்பித்தது. எனவே சொத்துரிமையும் ஆணிற்குச் சென்றது.

"குடும்பம் என்ற அமைப்பு செல்வத்தைப் பேணும் தளமாக அமைந்து பெண்களை அடிமைப்படுத்தியது. சமூகத்திலும் பெண்கள் எல்லா நிலைகளிலும் ஒடுக்கப்பட்டனர். பெண்களின் உழைப்பைப் பணி மதிப்பீட்டு அடிப்படையில் தாழ்த்தி, ஆண்களைவிடக் குறைந்த கூலி வாங்குபவர்களாக்கியது முதலாளித்துவம்"[7]

இக்கருத்துகளின் மூலம் வேட்டைச் சமுதாயத்தில் தலைமை கொண்ட பெண் குழுநிலையில் விவசாய சமுதாயத்தில் அடிமையானாள் குடும்ப அமைப்பு பெண்ணின் சுதந்திரத்தைப் பறித்து அவளின் வாழ்வில் சிக்கலை ஏற்படுத்தியது என்பது தெளிவாகின்றது.

**சார்பு நிலை**

அடுத்தபடியாகப் பெண்ணிற்கு அமைந்த சிக்கல் சார்புநிலை. ஒரு பெண் திருமணத்திற்கு முன்னும், திருமணத்திற்குப் பின்னும், முதுமையிலும் மற்றவர்களைச் சார்ந்திருக்கும் நிலையே அமைந்துள்ளது. ஒரு பெண் திருமணம் ஆகும் வரை தந்தையைச் சார்ந்தும், பின் கணவனைச் சார்ந்தும், முதுமையில் மகனைச் சார்ந்தும் வாழ வேண்டியவள் என்ற கருத்து ஆழமாக வேரூன்றியுள்ளது.

“முதலில் தாய் தந்தையர்க்கும், மணமான பிறகு கணவனுக்கும், வயது முதிர்ந்த காலத்தில் பிள்ளைகளுக்கும் அடிமைகளாக வாழும் நிலைகள் உள்ளன. படித்துப் பட்டம் பெற்ற பெண்களுக்குச் சமுதாயம் உயர்விடம் தர முன்வந்தாலும் வீட்டில் அவர்களுக்குச் சமமான உரிமை கிடைக்கப் பெறுவதில்லை. அப்படியே தட்டிக்கேட்டு உரிமைபெறத் துணியும் பொழுது அவர்களுக்குக் குடும்ப வாழ்க்கையில் சிறிது மகிழ்ச்சியும் பறிக்கப்படும் அவல நிலை காணப்படுகிறது”[8] என்கிறார் சு.விஜயலட்சுமி.

**விதவை நிலை**

சில மக்கள் கூட்டங்களுக்கிடையில் சிறுவர் சிறுமியருக்கு மணஞ்செய்யும் வழக்கம் இருந்து வருகின்றது. சின்னஞ்சிறு வயதில் மணஞ்செய்யப்பட்ட இருவருள் கணவன் இளமையிலேயே இறந்துவிட்டால் பெண் தன் வாழ்க்கைக் காலம் முழுவதும் திருமணம் செய்யாமல், கூந்தல் களைந்து எளிய வாழ்க்கை நடத்துதல் வேண்டுமென்னும் சமூகம் கட்டுப்பாடு விதித்தது.

“பால்ய விவாகம் நம் இந்திய நாட்டிற்கு விசேடமானது. பிரபஞ்சத்தின் மற்றெந்த தேசத்திலும் இத்துர் வழக்கமில்லை. பெண் சாதிகளைச் சுயமாக ஆதரிக்கும் தன்மையைப் பெறுகிறவரையில் புருஷர்கள் விவாகம் செய்துகொள்வதும் கிடையாது. நம்மவர்களிலோ தாய் தந்தையர்கள் தம் பிள்ளைகளுக்கு விவாகம் செய்துவிட்டால் தங்கள் கடன் தீர்ந்ததாக நினைக்கிறார்கள். இது காரணம் பற்றியே நமது நாட்டில் பால் மணம் மாறாத சின்னஞ்சிறு குழந்தைகளுக்குங்கூட மணம் செய்துவிட்டிருக்கின்றனர்”[9] என்கிறார் க.நடலாம்பாள்.

இக்கருத்து பெண்களின் இளவயதுத் திருமணத்தின் சிக்கலை வெளிப்படுத்துகின்றது. பெண்களுக்கு இளவயதில் திருமணம் செய்வதினால் அவர்களுக்குப் பல துன்பங்கள் ஏற்படுகின்றன. முக்கியமாக அவர்களுக்குக் கல்வி மறுக்கப்படுகிறது. இளம்வயதிலேயே விதவையாகும் நிலை ஏற்படுகிறது.

**பொது மகளிர்**

முற்காலத்தில் சமயத்தின் பெயரால் தீய ஒழுக்கங்கள் பல நிலவின. அவர்களுள் இந்த தேவர் அடியார்கள் வழக்கமும் ஒன்றாக இருந்தது. இது அக்கால மக்களால் குற்றமாகக் கருதப்படவில்லை. கோயில்களில் சேர்ந்து விடப்பட்ட பொது மகளீர் கடவுள் மனைவியர் என்று வழங்கப்பட்டனர். தந்தை ஆட்சி நிலவிய காலத்தில் வியபிசாரம் குற்றமாகக் கருதப்பட்ட காலத்திலும், ஆலயங்களில் செய்யப்படும் வியபிசாரம் குற்றமாகக் கருதப்படவில்லை. இதனை,

"முற்காலத்தில் தாயக் கடவுளரின் கோயில்களில் பெண்கள் பூசாரிகளாகவிருந்தனர். கன்னிப் பெண்கள் பலர் தேவர் அடியார்களாக வந்தடைந்தனர். ஆலயங்களில் நிகழும் ஆண் பெண் சேர்க்கை புனிதமுடையதென்று கருதப்பட்டதாதலின் அப்பெண்கள் ஆலயங்களுக்கு வரும் ஆண் தேவ அடியாரைச் சேர்வாராயினர். தேவ அடியார் ஆகிய பெண்கள் ஆண் கடவுளரின் ஆலயங்களுக்கு நேர்ந்து விடப்பட்ட போது அவர்கள் கடவுளின் மனைவியர் எனப்பட்டனர். கடவுளின் கடமையைக் குருமார் நிறைவேற்றி வந்தனர். இவைபோன்ற பழக்க வழக்கங்களின் வளர்ச்சியே தேவதாசி வழக்கமாக நிலவுகின்றது"[10]

இவ்வழக்கத்தில் பெண்கள் விரும்பாத பொழுதும் பலர் ஈடுபடுத்தப்பட்டனர். அவர்களின் வாழ்க்கை, சிக்கல் நிறைந்ததாகவும்

துன்பம் நிறைந்ததாகவும் இருந்தது. இவையாவும் பண்பாடுகளாகவும் கலாச்சாரங் களாகவும் சுட்டப்பட்டு பெண்களின் மேல் திணித்த சமூகக் கட்டுப்பாடுகள் ஆகும். இவ்விதிமுறைகள் யாவும் பெண்களையே மையப்படுத்துவதாக அமைகின்றன. இல்லத்தில இருந்து மனையறம் பேணும் பெண்ணே இன்றும் இந்திய நாட்டின் கலாச்சாரத்தைப் பாதுகாப்பவளாக நம்பப்படுகின்றது.

**பெண்ணின் இயல்பு**

பெண்ணிற்கு உரிய இயல்பைத் தொல்காப்பியர் காட்டும்போது,

"அச்சமும் நாணும் மடனும் முந்துறல்
நிச்சமும் பெண்பாற் குரிய"[11]

இங்கு பெண் அச்சம், நாணம், மடம் என்று இயல்புகள் உடையவளாகச் சித்தரிக்கப்படுகின்றாள். இக்கருத்தின் மூலம் பெண் இவ்வியல்புகளைக் கடைபிடித்து கட்டுப்பாட்டுடன் வாழவேண்டும் என்பது வலியுறுத்தப் படுவதை அறிய முடிகின்றது. இவ்வாறாக அமைந்த இலக்கண நூற்பாக்கள் வழி காலம் காலமாகத் தமிழ்ப் பெண்களுக்கு இருந்த வாழ்க்கை மரபுக் கட்டுப்பாடுகளை அறிந்து கொள்ள முடிகின்றது.

அடக்கம், பொறுமை, தியாகம், பொதுநலம், இரக்கம், அழகு, ஒப்புரவு, தொண்டு முதலியன அமைந்த ஒன்று பெண்மையின் இயபாகும். இவற்றைக் கடைபிடித்து ஒழுகும் பெண்கள் மதிப்பிற்குரியவர்களாகிறார்கள். இவை யாவும் பெண்களுக்குச் சிறந்த இயல்புகளாக சமுதாயத்தினால் வகுக்கப்பட்ட வரையறைகளாகும். இவ்வரையறைகளுக்கு உட்பட்டு வாழும் பெண்கள் உயர்ந்தவர்களாக, தெய்வமாக மதிக்கப் பட்டார்கள். இக்குணங்கள் அல்லாத பெண்கள் சமூகத்தில் பழிச்சொல்லிற்கு ஆளானார்கள். இது சமூகம் பெண்ணிற்கு விதித்த எழுதாச் சட்டமாகும்.

**சிறுகதையில் பெண்கள் நிலை**

படைப்பிலக்கியங்கள் சமூக மாற்றத்திற்கு உட்பட்டு இயங்குவன ஆகும். இவை பெண்களின் வாழ்வில் புரையோடிக் கிடந்த பல்வேறு சிக்கல்களை வெளிக்கொண்டுவர முனைந்தன. தாம் வாழ்க்கைச் சிக்கல்களால் அடிமையுற்றுக் கிடக்கின்றோம் என்பதைக்கூட அறியாத பெண்களிடத்தில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த உதவி புரிந்தன எனலாம். இன்றைய காலகட்டத்தில் பல சிறுகதைப் படைப்பாளர்கள் தமது உணர்வுகளை, அனுபவங்களை, எண்ணங்களை தமது படைப்புகளில் பதிவு செய்கின்றனர்.

எழுபதுகளில் தமிழகத்தில் பெண்ணியம் பற்றிய கோட்பாடுகளும் அதனோடு தொடர்புடைய இயக்கங்களும் தோன்றின. 1976 முதல் 1985 வரை பெண்கள் ஆண்டாகப் பத்தாண்டுகள் அறிவிக்கப்பட்டது. இதனடிப்படையில் பத்திரிக்கைகள் பெண்கள் பற்றிய செய்திகளுக்கு முக்கியத்துவம் தரத்தொடங்கின. அச்செய்திகளில், கட்டுரைகளில், துணுக்குகளில் மட்டுமின்றிச் சிறுகதைகளிலும் பெண்கள் பிரச்னைகள் மையப்படுத்தப்பட்டன. பெண்களின் பிரச்சனைகளாகிய மரபு, மரபுக் கட்டுபாடு, மரபு மீறல், ஆண் மேலாண்மை, இரண்டாம் தர குடிநிலை, சமுதாயத்தில் அவர்களுக்கான இடம், அலுவலகத்தில் ஏற்படும் இன்னல் போன்றவையும் பெண்ணியப் பார்வையில் தோற்றம் பெற்றன. இந்நிலையில் சிறுகதை ஆசிரியர்கள் பெண்களின் குடும்பச் சிக்கல்கள், சமுதாயச் சிக்கல்கள் ஆகியவற்றை மையப்படுத்தியும் தமது சிறுகதைப் படைப்பைப் படைத்தனர்.

எழுபதுகளில் அனுத்தமா, ராஜம் கிருஷ்ணன், ஸி.ஆர்.இராஜம்மா, லட்சுமி, கோமகள், சிவசங்கரி, இந்துமதி, வாசந்தி, அனுராதாரமணன்,

ஜோதிர்லதா கிரிஜா, ஆர்.சூடாமணி, விமலா ராணி, உஷா சுப்பிரமணியன், அம்பை, காவேரி, கிருத்திகா, ஹெப்சிபா ஜேசுதாசன் போன்ற பெண் எழுத்தாளர்கள் குறிப்பிடத்தக்வர்கள. இவர்களைத் தவிர, லட்சுமி ராஜரத்தினம், லட்சுமி சுப்பிரமணியம், நித்யாமூர்த்தி, கோதா பார்த்தசாரதி, கீதாபென்னட், கே.ஜெயலட்சுமி, பிரேமா நரசிம்மன், சுபாஷினி, ஜெயலட்சுமி சர்மா, சுமங்கலி, ரமணிசந்திரன், கமலா சடகோபன், ஸ்ரீபிரியா, கங்கா, ராமமூர்த்தி, வேதா கோபாலன், வித்யா சுப்பிரமணியன், லட்சுமி ரமணன், கோமதி சுப்பிரமணியம், வேம்பத்தூர் லலிதா போன்றவர்களும் சிறுகதைகளைப் படைத்து வந்துள்ளனர் எனலாம்.

ஆண் எழுத்தாளர்களில் பிரபஞ்சன், சு.சமுத்திரம், பாவண்ணன், புதுமைப்பித்தன், ராமசாமி, ராமையா, ஜெயப்பிரகாசம் என்ற சூரியதீபன், மேலாண்மை பொன்னுசாமி, சுஜாதா, தேவிபாலா, அய்க்கண், மனனார்குடி விசுவநாதன், மாலன், சத்யப்பிரியன், பட்டுக்கோட்டை பிரபாகர், ராஜேஸ்குமார், கந்தர்வன், சுதாங்கன், எஸ்.சந்திரன், அனுராதா, பெ.நாயகி போன்றோர் பெண்களை மையமிட்ட சிறுகதைகளை எழுதியுள்ளனர். இப்படைப்பாளர்கள் பெண் சிக்கல்களை ஆழமாகச் சிந்தித்து அவற்றின் காரணங்களைக் கண்டறிந்து தீர்க்கும் முயற்சியில் தமது சிறுகதையின் வழி ஈடுபட்டுள்ளனர்.

**பிரபஞ்சன் சிறுகதைகளில் பெண்களின் சமுதாய சிக்கல்கள்**

ஆணும் பெண்ணும் கூடி வாழ்வதே சமுதாயம் என்பதாகும். இருபாலரும் இணைந்து ஒரு பண்பட்ட சமுதாயத்தை வளர்த்தனர். ஆணும் பெண்ணும் சமமாக இணைந்து செயல்பட்டால் அன்றி சமுதாயம் ஒழுங்காகச் செல்லாது பழங்காலத்திலிருந்து இக்காலம் வரை ஆண் பெண் பாகுபாடு மற்றும் உரிமைச் சிக்கல்கள் தொடர்ந்து கொண்டே உள்ளது எனலாம்.

புதிய சமூகச் சூழலில் தமக்கென்று ஒரு தனித்துவம் இருப்பதைத் புரிந்து கொள்கின்ற பெண்களுக்குக் குடும்ப உறவுகளிலும் சிக்கல்கள் விளைகின்றன. பிரபஞ்சன் சிறுகதைகளில் பெண்களின் சமுதாயச் சிக்கல்கள் என்னும் தலைப்பில் முப்பத்திரெண்டு சிறுகதைகளில் காணப்படுகின்றன. இச்சிறுகதைகளில் பெண்களின் இளவயதுத் திருமணச் சிக்கல், குடும்பப் பெண்களுக்கு ஏற்படக்கூடிய சிக்கல், காதலில் ஏற்படும் சிக்கல், வாழ்க்கையின் அவல நிலைகள், பெண்களின் தன்னம்பிக்கைச் சிக்கல்கள். மனிதநேயச் சிக்கல்கள் முதலான எடுத்துரைக்கப்படுகின்றன. இச்சிக்கல்கள் யாவும் குடும்பம், சமூகம் என்ற இரு நிலைகளில் அமைகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

“மக்கட் சமுதாயம் மட்டுமின்றி எந்த உயிரினத்தும் ஆண் பெண் இரண்டும் இணைந்தே வாழ வேண்டியுள்ளன. இதுவே சமுதாயத்தின் அடிப்படை வாழ்வு. ஆடவரும், மகளிரும் கலந்ததே சமுதாயம். இந்த உண்மையை பலர் உணர்வதில்லை.”[12] என்னும் கூற்று பெண்ணிற்குச் சமுதாயத்தில் இன்று வரை சிக்கல்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைவதும், ஆண், பெண் சமம் என்பதை உணராத குறைபாடும் ஆகும். இந்த ஏற்றத் தாழ்வு மனப்பான்மை சமுதாயத்தில் பெண்ணிற்குப் பல சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றது. இக்கருத்துக்களை மையப்படுத்தி பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் பெண்ணிற்கு ஏற்படும் சமுதாயச் சிக்கல்கள் பலவற்றைத் தம் சிறுகதைகளில் பிணைத்துள்ளார்.

**இளவயதுத் திருமணம்**

சங்க காலத்திலிருந்து மணப்பெண்ணிற்கு உரிய வயது மிகக் குறைவாகவே இருந்துள்ளது. குழந்தை மணமும் அக்காலத்தில் நிகழ்ந்துள்ளது. “ஏழு, ஒன்பது, பதினொன்று, பன்னிரெண்டு ஆகிய ஆண்டுகளுள் ஏதேனும்

ஒன்றில் பெண்ணிற்குத் தாலி கட்டு நடைபெறும்."[13]

இக்கருத்து மிகக் குறைவான வயதிலேயே பெண்களுக்குத் திருமணம் நிகழ்ந்துள்ளதை உணரமுடிகின்றது.

இந்நிலையைத் திரு.வி.கலியாண சுந்தரணார் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார். "நமது நாட்டில் பலப்பல விதமாகத் திருமணங்கள் நடைபெறுகின்றன. திருமணத்திற்குரிய வயது முதலியவற்றின்மீது நம் நாட்டார் சிறிதுங் கவலை செலுத்துவதில்லை. பால்மணமாறாச் சிறு குழந்தைகள் கரத்தில் பழந்தந்து ஏமாற்றி மணவினை முடிக்க முந்திய தாய் தந்தையரும் இருந்தனர். இவர் தாய் தந்தையராவாரோ? என்று கேட்கிறேன்."[14]

அக்காலத்தில் பால்மணம் மாறாத குழந்தைகளுக்குத் திருமணம் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது.

இதனை "ஒத்த பண்பு ஒத்த நலன் முதலியன ஓதிய அறிஞர், வயதில் மட்டும் வேற்றுமை காட்ட வேண்டி, இவனும் பதினாறாட்டைப் பிராயத்தானாய் இவளும் பன்னீராட்டை பிராயத்தாளாய் ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடையராய்"[15] என்னும் திரு.வி.க.வின் கருத்து திருமணத்திற்குரிய வயது குறித்து சிந்திக்க வைக்கின்றது. அக்காலத் தமிழ்ச் சமூகம் வயதில் மிகக்குறைந்த பெண்ணைக்கூட மிக அதிகமான வயது மூத்த ஆணிற்குத் திருமணம் முடித்த நிலையைக் காணமுடிகின்றது.

இக்கருத்தையே பிரபஞ்சன் 'மிருகம்' என்னும் சிறுகதையில் வலியுறுத்துகின்றார். 'கோதை' என்பவள் தன் தோழியின் திருமணத்திற்குச் செல்கிறாள். அங்கு அவளுக்கு மாப்பிள்ளை வீட்டாரைக் கவனிக்கும் பொறுப்பு

கொடுத்திருந்தார்கள். மாப்பிளையின் அம்மா கோதையைப் பார்த்து உனக்கு இன்னும் திருமணம் ஆகவில்லையா? என்று கேட்கிறாள்.

"உன் வயசுல எனக்கு மூனு குழந்தைகள் பிறந்துடுச்சி, இன்னும் நீ சின்னப் பெண்ணாட்டம் மாப்பிள்ளை சீர் பண்ணிட்டிருக்கே... என்றாள். என்ன நாகரிகமற்ற பேச்சு! பெண்களுக்குப் பெண்கள் தான் எதிரிகள் என்பதை மாற்ற வேண்டாமா!"[16] என்கிறார். இச்சிறுகதையில் பெண்களே பெண்களைப் பற்றிப் பேசுவதை ஆசிரியர் சுட்டியுள்ளார். நம் சமூகத்தில் இளவயதுத் திருமணம் செய்யும் வழக்கம் இருந்து வருவதை அறியமுடிகின்றது. மிகக்கொடிய வழக்கமாக இருந்த இந்த வழக்கத்தை மாற்றச் சட்டங்கள் கூட இயற்றப்பட்டது. அக்காலக் கட்டத்தில் கூட இளவயதிலேய பெண்களுக்குத் திருமணம் செய்யப்பட்டது. பதினைந்து வயதைக் கடந்த பெண்கள் முதிர்ந்துவிட்டதாகக் கருதி அவர்கள் கேலிக்கும் கிண்டலுக்கும் ஆளானார்கள். இந்நிலையில் ஆசிரியர் தமது சிறுகதைப் படைப்பில் படம் பிடித்துள்ளார்.

'பச்சைக்கிளியும் காந்திய வாதியும்' என்னும் சிறுகதையில் நடராஜனுக்குப் பெண் பார்க்கப் போகிறார்கள். அங்கு ஒரு சிறுமியை அலங்கரித்து அவன் முன் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள். அச்சிறுமியைப் பார்த்து நடராஜன் திடுக்கிடுகிறான். பள்ளிப் பருவத்தையே தாண்டாத சிறுமியை மணப்பெண் போல் அலங்கரித்து நிறுத்தும் போக்கை நம் சமூகத்தில் நிகழ்கின்ற நிதர்சனப் போக்கை ஆசிரியர் எடுத்துரைக்கின்றார்.

"அப்புறம் கிளி என் முன்னால் நிறுத்தப்பட்டது. நான் திடுக்கிட்டேன். நாங்கள் வீட்டுக்குள் வரும்போது எங்களுடன் நுழைந்த அதே சிறுமிதான் அவள். சட்டை போட்டுக் கொண்டிருந்த குழந்தைக்குப்

புடவை சுற்றி என் முன் நிறுத்தியிருந்தார்கள். அவசரம் அவசரமாக முகத்தில் பூசப்பட்ட பவுடர் வியர்வையில் திட்டுத்திட்டாய் தெரிந்தது. அதே எலிவால் ஜடை. பள்ளிக்கூட வாசனையைக் கூட இன்னும் கழுவிக் கொள்ளவில்லை அவள். அந்தக் குழந்தையைப் பார்க்க பரிதாபமாய் இருந்தது"[17] என்கிறான் நடராஜன்.

திருமணத்தின் அரிச்சுவட்டைக் கூட அறியாத சிறுமிக்குத் திருமணம் செய்து வைக்கும் சமூகத்தின் போக்கு இங்குக் காட்டப்பட்டுள்ளது. தனக்கு நிகழ்வது என்ன என்பதைக் கூட அறியாத சிறுமி திருமணத்திற்காக மாப்பிள்ளை வீட்டார் முன் பச்சைக் கிளி போல் வந்து நின்ற நிலையை வருத்தத்துடன் வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர். இந்நிலை பெண்களுக்கு ஏற்பட்ட இளவயதுத் திருமணச் சிக்கலைக் காட்டுகின்றது. இவ்விளவயதுத் திருமணத்தால் பெண்களுக்குப் பல்வேறு இடர்பாடுகள் சமூகத்தில் ஏற்படுகிறது. இளம் வயதிலேயே பிள்ளைப்பேறு, கல்வியின்மை, குடும்பச்சுமை, குழந்தை வளர்ப்பு போன்ற சிக்கல்களுக்கு உட்படுகின்றனர் பெண்கள். இதனைத் தடுக்கப் பல சட்டங்களும் இயற்றப்பட்டது என்னும் கருத்தினை "மிக இளமையிலேயே பெண்கள் குழந்தைகளைப் பெறத் தொடங்கி விரைவில் இளைத்துப் போவதோடு பிள்ளைகளும் பலமற்றவர்களாகின்றார்கள் என்னும் கருத்தினாலும் சாரதா சட்டம் உண்டாவதாயிற்று"[18] என்கிறார் ந.சி.கந்தையா. இந்த சமூகத்திற்குத் தீமை பயக்கின்ற கொடுமையைத் தனது சிறுகதையின் வழி விளக்குகின்றார் ஆசிரியர். இது பெண்ணிற்கு எதிரான சமூகத்திற்கு முரணான வழக்கம். இவ்வழக்கம் சமூகத்தில் மாறவேண்டும் என்பது ஆசிரியரின் நோக்கமாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

**குடும்பப் பெண்கள்**

“மனையுறை மகளிர், உயிரென விளங்கிய தம் கணவரைப் பேணியும், பெண்ணின் பெருமையாய தம் திண்ணியக் கற்பினைக் காத்தும், மயக்குறு மக்களை மாண்புற வளர்த்தும் வருந்திவரும் விருந்தினரையோம்பியும், இடும்பெயெனக் கருதாது குடும்பச் சுற்றத்தைத் தழுவியும், கடவுளை வணங்கியும், கவின்கலை வளர்த்தும் துன்பந்துடைத்து இன்பம் பெறுக்கினர்”[19] என்கிறார் முல்லை முத்தையா.

நல்ல குடும்பத்துப் பெண்கள் தமது கையாலேயே கணவனுக்கு உணவு பரிமாற விரும்புவார்கள். தான் சமைத்த உணவைத் தனது கணவன் சுவைத்து உண்பதைக் கண்டால் அவர்கள் அடையும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. இது பண்டைத் தமிழ் பெண்களின் பண்பு இதனை, குறுந்தொகைப் பாடல்

“முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம், கழா அது உரீஇக்;
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்,
‘இனிது’ எனக் கணவன் உண்டலின்,
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒள் நுதல் முகனே”[20]

என்று உணர்த்துகிறது. திருமணமான பெண் குடும்பத்திற்குத் தன்னை அர்பணிக்க வேண்டும் என்பது அன்றிலிருந்து கற்பிக்கப்பட்டு வந்துள்ளது.

பெண்களுக்கே உரிய குடும்பம், கணவன், அவனைச் சுற்றியுள்ள உறவுகள் பிள்ளைப்பேறு, தாய்மையின் மகத்துவம் போன்ற கதைக் கருக்களைத் தாண்டி பிரபஞ்சன் பெண்களின் உள்மன உணர்வுகள்,

அவர்களின் சுயத்தேடல்கள், ஒடுக்குமுறைகள், உடற்கூறுகளைப் பெண்கள் ஏற்றுக் கொள்ளும் திறம் போன்றவற்றை மையமாகக்கொண்டு சிறுகதைகளை அமைத்துள்ளார்.

சுயமாகச் சம்பாதித்து தன் நிலையை உயர்த்திக் கொள்வதில் திருமணமான பெண்களுக்குச் சிக்கல் உண்டு என்பதையும் அவர்களின் பொருளாதாரப் பிரச்சனையையும் திருமணமான பெண்ணிற்கு ஏற்படும் சிக்கலையும் தெளிவாகக் 'காலம் இனிவரும்' என்னும் சிறுகதையின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

நல்ல மதிப்பெண் பெற்றுக் கல்லூரிப் படிப்பை முடித்தவள் சத்யா. அவளைத் திருமணம் முடித்தான் பிரபு. திருமணத்திற்கு முன் வேலைக்குச் சென்று கொண்டிருந்த சத்யாவைத் திருமணத்திற்குப்பின் வேலைக்குச் செல்லக்கூடாது என நிர்பந்திக்கிறான். அதை மறுத்துப் பேசிய சத்யாவை அடித்து உதைக்கிறான். அவன் வார்த்தைகள் அவளை அம்பு போல் குத்துகின்றது. அவன் "பொட்டாச்சி வேலை செய்து சம்பாதிக்க வேண்டிய கட்டாயம் எனக்கு இல்லை... நான் ஆம்பிள்ளை, நான் சம்பாதிக்கிறதே போதும். பொம்பளையா, லட்சணமா வீட்டுல கிட... என்கிறான்.

பிரபு பிளீஸ் என்னைப் புரிஞ்சுக்குங்க... எனக்குக் கட்டாயம் வேலைக்குப் போகனும்... என்கிறாள் சுமதி.

எனக்குப் பிடிக்காததை நீ செய்யக்கூடாது. நான் சொல்றபடி தான் நீ கேட்கனும். பொட்டச்சியா லட்சணமா வீட்டோட இரு. நீ எதுக்கு ஆபீஸ் போறே, எனக்குத் தெரியாதா? அங்கக் கண்டவனோட ஆட்டம் போடலாம்னுதானே? உங்களையெல்லாம் எனக்குத் தெரியுண்டி..."[21] என்னும் ஈரமற்ற பேச்சுக்களை அவன் பேசுகின்றான். திருமணமான பெண்களை ஆண்கள் அடக்குமுறை செய்வதை இச்சிறுகதையில் பார்க்க

முடிகின்றது. இதுபோன்ற ஆணாதிக்கப் போக்குடைய கணவனிடம் சிக்கித் தவிக்கும் சுமதி போன்ற பெண்களின் சிக்கல்களைப் படைத்துள்ளார் ஆசிரியர். காலம் காலமாகக் கணவன் சொல்லே மந்திரம் என்பதையும் அவரின் சொல்படி கேட்டு நடத்தல் பெண்களின் கடமை என்பதையும் கற்பித்து வந்துள்ளது இச்சமூகம். அவளுக்கென்று தனி மனமோ, ஆசைகளோ இருத்தல் கூடாது என்பதை வலியுறுத்துவதாகவே அமைகின்றது. இக்குடும்பப் பெண்களின் சிக்கலைத் தம் சிறுகதையில் வெளிப்படுத்துவதன் மூலம் ஆசிரியர் குடும்பப் பெண்களுக்கு ஏற்படுகின்ற இன்னல்களை வெளிப்படுத்திச் சமூகத்தில் அவர்கள் நிலை மாற்றமடைய வேண்டும் என்கிற தமது எண்ணத்தைப் பதிவு செய்கிறார். குடும்பப் பெண்கள் எல்லாச் சூழலிலும் அனுசரித்துச் செல்ல வேண்டும் என்ற நிலைப்பாட்டை மாற்றும் வகையில் அமைந்துள்ளது.

'காணாமல் போனவர்கள்' என்னும் சிறுகதையில் குடிப்பழக்கத்திற்கு அடிமையாகிக் குடும்பத்தைக் காப்பாற்றாமல் விட்டுவிட்ட கணவன் சாவின் விழிம்பில் இருக்கின்றான். அவனைக் காப்பாற்ற மனைவி 'மணி' போராடுகின்றாள். குடும்பப் பொறுப்பே இல்லாத கணவரையும் காப்பாற்றும் பொறுப்புடைய மனைவியாக அவள் அமைகின்றாள். அவளின் இளவயதுத் தோழன் எதேச்சையாக மணியைப் பார்க்கிறான். அவனிடம் தன்னிலையினைக் கூறுகின்றாள் மணி.

> "குடி வயிறு வெந்துவிட்டது. வேறென்ன?
>
> அவர் குடிப்பழக்கத்தை நீ மாத்தியிருக்கணும் மணி.
>
> அவள் சிரித்தாள்.
>
> யார் யாரை மாத்தறது? யாரையும் மாத்த முடியும்னு நீ நினைக்கிறியா? குழந்தை மாதிரி பேசறியே... மனைவியால்

முடியும் அவளால முடியல்லைன்னா வேற யாராலே முடியும்? நாங்க சமமா இருந்திருந்தோம்னா ஒருகால் அது முடிஞ்சிருக்கும் மூர்த்தி. சோத்துக்கு வழியில்லாமே, பாட்டியும் போன பின்னால் சோறு போடறாரேன்னு கழுத்தை நீட்டினவதானே நான். என்னால அவரைக் கண்டிக்க முடியுமா? எதிர்ல நின்று பேசத்தான் முடியுமா? அவர்தான் கேட்டுக்குவாரா என்ன?"[22]

என்றாள். இங்கு மணியின் பேச்சு குடும்பப் பெண்களின் சிரமங்களை முன்னிறுத்துகின்றது. சோறு போடுகிற காரணத்தால் மனைவிக்குக் கருத்து சுதந்திரம் இல்லை என்பதை இவளின் பேச்சு உணர்த்துகின்றது. மனைவியின் சொல் அங்கு பயன்படவில்லை என்பதை வெளிப்படுத்துகின்றது. குடும்பத்தில் பெண்ணிற்குக் கருத்தை வெளிப்படுத்தத் தடையுள்ளதையும் அத்தடை நீங்கும்போது குடும்பம் சிறப்படையும் என்பதையும் குடும்ப நிலையில் பெண் சமத்துவம் அடையும் பொழுது அக்குடும்பம் உயர்வடையும் நிலையை எய்தும் என்னும் குறிப்பை அடியொற்றி இச்சிறுகதையில் மணியின் வாயிலாகத் தனது கருத்தைப் பதிவு செய்துள்ளதைக் காணமுடிகிறது.

**காதலில் ஏற்படும் சிக்கல்கள்**

"தன்னை மறக்கும் நிலையில் ஏற்படும் முதலாவது அனுபவம் அல்லது உணர்ச்சி காதலாகும். தன்னார்வம் அழிந்து பிறர் பொருட்டு எண்ணும் எண்ணமே காதல். அத்தகு காதல் தூயது"[23] என்கிறார் ஈ.கோ.பாஸ்கரதாஸ்.

"காதல் இயற்கையானது கவிக்கோ அப்துல் ரகுமான் காதல் செய்யப்படுவதில்லை ஏற்படுவது, ஒரு பூவைப் போல தானே மலர்வது, காதலுக்கு நாம் கட்டளையிட முடியாது, அது வா என்றால் வராது,

போ என்றால் போகாது. காதல் தான் நமக்கு கட்டளையிடுகிறது. நாம் எல்லோரும் அதற்குக் கீழ்ப்படிகிறோம். ஏனெனில் காதல் கடவுளின் அரசாட்சி என்று கூறுகிறார்"[24]

பெண் தான் விரும்பிய ஆணை மணம் செய்து கொள்ளத் தடை விதித்து வைத்திருந்தது சமுதாயம். காதல் மணம் புரிந்த பெண்ணிற்குக் கடுமையான அவப்பெயரும் தண்டனையும் வழங்கப்பட்டது. காதல் மணம் புரிவதில் பெண்களுக்கு இந்த ஆணாதிக்கச் சமுதாயத்தில் சிக்கல் நிலவியது. பெண்ணிற்குப் பல ஒழுக்க முறைகளை வரையறுத்து வீட்டிற்குள் அடைத்து வைத்தது.

"சமூகத்தில் ஆண், பெண் இருபாலரும் சில நடவடிக்கைகளில் ஒன்றுபடுகின்றனர். ஆணுக்கென்று சில நடத்தைகளும், பெண்ணுக்கென்று சில நடத்தைகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. மரபு என்ற பெயரால் அந்நடவடிக்கைகள் காலம் காலமாக தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்பட்டு போற்றப்பட்டு வருகின்றன"[25] இம்மரபு மீறப்படும் போது பெண்களுக்குச் சிக்கல்கள் தோன்றுகின்றன. இச்சிக்கல்கள் சிறுகதையில் கருப்பொருளாகப் படைத்துக் காட்டுகின்றனர் சிறுகதை ஆசிரியர்கள்.

பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் காதலினால் பெண்களுக்கு ஏற்படும் சமுதாயச் சிக்கல்களையும் கோடிட்டுக் காட்டுகின்றார். ஆண்களால் பெண் ஏமாற்றப்படுவது காலம் காலமாக நிகழ்ந்து வருகின்றது. அப்படி ஏமாற்றப்பட்ட பெண்களைப் பாவப் பொருளாக நோக்காமல் அவர்களைப் சமுதாயத்தில் மதிக்கத்தக்க இடத்தில் வைத்துப் படைத்துள்ளார் ஆசிரியர்.

“வலிமையால் பிடித்து மணத்தல், மாற்று மணம், கொடை மணம், சேவை மணம், கடமை மணம், பொருள் மணம், காதல் மணம் என மணத்தை ஏழு பிரிவுகளாகப் பிரிக்கலாம்”[26] என்கிறார் ந.சி.கந்தையா. இம்மணங்களில் எதையும் எதிர்நோக்காது காதல் காரணமாக மணத்தல் காதல் மணம் எனப்படுகிறது.

இப்படிப்பட்ட காதல் மணம் சமுதாயத்தில் மறுக்கப்பட்டது. மீறும் பெண்களுக்குப் பல்வேறு சிக்கல்கள் ஏற்பட்டது. இதனைத் தம் சிறுகதைகளில் பதிவு செய்துள்ளார் பிரபஞ்சன்.

‘வடு’ என்னும் சிறுகதையில் காதலித்துத் தாய்மையுற்ற பெண்ணைக் கல்லூரி நிர்வாகம் வெளியேற்றுகிறது. இதில் காதலித்துத் திருமணத்திற்கு முன் தாய்மை அடைந்த பெண்ணை இச்சமூகம் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றது என்பதையும் அச்செயல் சமூகக் குற்றமாகக் கருதப்படுவதையும் காணலாம்.

“செண்பகா பளீரென்று மிக அழகாகத் தென்பட்டாள். உடம்பு கொஞ்சம் பூசினாற் போலாகிவிட்டது. கன்னத்தில் செம்மை கூடியது. ஒரு களைப்பும் சோர்வும் நிழலாக அவள் முகத்தில் படிந்தன. கிளர்ச்சி ஊட்டிய அந்த அழகுக்கு வேறு காரணம் இருந்ததை அவன் கண்டு பிடிக்கவில்லை. வார்டன் கண்டு பிடித்தான். கல்லூரி நிர்வாகம் அவளை வெளியேற்றிவிட்டது”[27] இச்சிறுகதையில் காதலிக்கும் பெண்களுக்கு ஏற்படும் சமுதாயச் சிக்கல்கள் வெளிப்படுகின்றன.

காதலித்த பெண் சமூகத்தில் ஏமாற்றப்படுகிறார்கள் என்பதை ‘ஓடிப்போனவள் திரும்பியபோது’ என்னும் சிறுகதையில் ‘வத்சலா’ என்னும் பெண்ணின் சிக்கலைப் படைத்துள்ளார். காதலில் பெண் மட்டுமே பாதிக்கப்படுகிறாள் என்பதற்கு ‘வத்சலா’ ஒரு உதாரணமாகத் திகழ்கின்றாள்.

கேசவனை நம்பி வீட்டை விட்டு ஓடிப்போனவள் வத்சலா. அவள் வீட்டிற்கு திரும்பிவர முடியாமல் பாலியல் தொழிலுக்குத் தள்ளப்படுகிறாள். தன் வீட்டுச் சூழ்நிலை கசந்த போது கேசவன் தனக்கு ஆறுதல் அளிப்பான் என நினைத்து அவன் பின்னே போய்விடுகிறாள். அவன் கைவிடவே அப்பாவும் அவள் கெட்டுப் போனவளாகக் கருதி ஏற்க மறுக்கிறாள். இச்சூழலில் தான் அவள் பாலியல் தொழிலுக்குச் செல்கிறாள் என்பதை,

"என் வீடு அது இல்லை. எனக்கு அங்க பந்தம் இல்லேன்னு தோணிப்போச்சு, ஓட வழி பார்த்தேன். அப்போது தான் கேசவன் பழக்கம் ஏற்பட்டுச்சி. நான் அதைக் காதல்னு தப்பா புரிஞ்சுக்கிட்டேன். மூழ்கிறவன் கையில் அகப்படறது கயிறா, பாம்மான்னு கண்டானா? ஏதோ ஒரு ஆதாரம் கிடைச்சா சரின்னு நானும் கிளம்பிட்டேன். எங்க காதல் ரெண்டு வருசத்துக்குக்கூட தாக்குப்பிடிக்கலே. அந்தப் பொறுக்கிப்பய ஓடிட்டான். அப்போ நான் பாம்பேயில இருந்தேன். தினம் அழுது கதறி கடிதம் எழுதிக்கிட்டே இருந்தேன். ஊகும் அப்பாவுக்கு என்மேல் இருந்த கோபம் தீரவில்லை. வேற வழி இல்லை... இதுக்குவந்திட்டேன்"[28] என்கிறாள்.

இச்சிறுகதையில் பிரபஞ்சன் காதலில் பெண்கள் ஏமாற்றப் படுவதையும், அவர்கள் வாழ்க்கைச் சீரழிந்து போவதையும் சித்திரித்துள்ளார். இதன்மூலம் பெண்கள் காதலில் ஏமாறும்போது அவர்களை ஆதரிக்கவும், பாதுகாப்பு அளிக்கவும் இச்சமூகம் முன்வரவில்லை என்பதையும், பெற்றோர்களே அவர்களை ஏற்க மறுக்கும் அவலநிலையும் இங்குச் சுட்டிக் காட்டுகின்றார். பணக்காரக் கல்லூரி மாணவன் ஒரு ஏழை மாணவியைக் காதலித்து ஏமாற்றுவதாக படம் தயாரிக்கிறார் தயாரிப்பாளர். இது 'கதாநாயகி குளித்த கதை' என்னும் சிறுகதையில் அமையும் காட்சியில் ஏழைப்பெண் பணக்கார வாலிபனால் ஏமாற்றப்படுகிறாள். அக்காட்சி

படம் பிடிக்கப்பட்டது. ஏமாறிய பெண் தன் நிலையை எண்ணி வருந்துகிறாள்.

> "இழக்கக் கூடாததை இழந்த பின்னே நீ
> இருக்கக் கூடாது இந்த உலகில் பெண்ணே
> ராஜவசந்தம் வீணாய்ப் போனதே...
> ராகப்புரட்சி காற்றில் கலந்ததே...
> ரோஜா அத்தர் கண்ணீர் வடிக்குதே...
> பொன்மணி குப்பையில் கொட்டிப் ரோனதே..."[29]

எனப்பாடுகிறாள். இப்பாடல் வழி காதலில் ஏமார்ந்த பெண் வாழத் தகுதி இல்லா நிலைக்குச் சமூகத்தினரால் ஒதுக்கப்படுகிறாள் என்பதைக் காட்டுகின்றது. பெண்ணை ஏமாற்றிய ஆணைச் சமூகம் தண்டனைக்கு உட்படுத்துவதில்லை என்பதையும் குறிப்பாக வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

தான் விரும்பிய ஒருவளை விட்டுவிட்டுப் பணத்திற்காக வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்யத் துணியும் கணேசனையும், அவனால் ஏமார்ந்த பெண் மல்லிகாவையும் "கொடூரம்"[30] என்னும் சிறுகதையில் படைத்துள்ளார்.

காதலிக்கும் இருவரைக் கட்டாயப்படுத்தி பிரித்து வைத்துக் கொடுமைப்படுத்தும் சமூகத்தை '2000 வருஷத்து' என்னும் சிறுகதையில் காணமுடிகிறது. இச்சிறுகதையில் சக்குபாயும், சுப்பிரமணியும் காதலர்கள். அவர்களின் காதல் விவகாரத்தை 'ரெட்டை மண்டையன்' என்பவன் அவன் பெற்றோரிடத்தில் சொல்லிவிடவே அவர்கள் சக்குபாயையும் சுப்பிரமணியையும் தண்டிக்கிறார்கள். காதலுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் சமுதாயத்தையும் குடும்பத்தையும் பற்றி ஆசிரியரின் மனக்குமுறலை

இச்சிறுகதையில் காணமுடிகிறது. இவ்விசயத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட சக்குபாயின் அப்பா அன்று வழக்கத்துக்கு மாறாக மிக அதிகமாகக் குடித்திருந்தார். கடைசியாகத் தன் கையிலிருந்த தம்ளரைப் போட்டு உடைத்தார். அவருடைய ரெண்டாயிரம் வருஷத்து இரத்தம் கொதித்தது. தன் மூத்த மகள் தனக்கு ஏற்படுத்தி வைத்துவிட்டுப் போன அவமானம், அவரை மேலும் கொதிக்க வைத்தது. ஒரு பெண், ஓர் ஆணுடன் தன்னை இணைத்துக் கொள்வதில் என்ன அவமானம்? என்று யாரும் அவரைக் கேட்டுவிட முடியாது.

"இந்த மண்ணில் பிறக்க நேர்கிற ஒவ்வொரு பெண்ணும் கண்ணுக்குத் தெரியாத பூட்டுச் சாவியுடன் தான் பிறக்க வேண்டும். அந்தப் பூட்டுச்சாவியை கல்யாணம் ஆகும் வரைப் பெற்றோர்களிடம் அவள் கொடுத்து வைக்க வேண்டும். அப்பாவும் அம்மாவும் பூட்டைப் போட்டு சாவியைக் கையில் வைத்துக் கொண்டு பெண்ணின் கற்புக்குக் காவல் இருப்பார்கள். கல்யாணத்திற்குப் பிறகு, பெற்றோர் அந்தச் சாவியைக் கணவனிடம் ஒப்படைத்துவிட்டு 'அப்பாடா' என்று ஓய்வெடுத்துக் கொள்வார்கள். அப்புறம் அவள் கற்புக்குக் கணவனே பொறுப்பு சாவி, அவன் கையில்"[31] என்று தன் மன வெதும்பலை ஆசிரியர் தனது கருத்தை வெளியிட்டுள்ளார்.

இக்கருத்து சமூகத்தில் பெண்களின் நிலையை தெள்ளத் தெளிவாக உணர்த்துகின்றது. திருமணத்திற்குமுன் பெண்ணின் கற்புக்குக் காவல் இருக்கும் சமுதாயத்தின் போக்கைக் காணமுடிகிறது. இது பெண்கள் திருமணத்தின் முன் பிற ஆடவர்களை விரும்பும் நிலையை எதிர்ப்பதாக அமைகின்றது. இந்நிலை இம்மண்ணில் பிறக்க நேர்கிற ஒவ்வொரு பெண்ணிற்கும் விதிக்கப்படுகிற எழுதப்படாத சட்டமாக அமைகிறது என்பதைப் பிரபஞ்சன் தெளிவுறுத்துகிறார். இவற்றின்வழி இச்சமூகத்தார்

பெண்களுக்கு மனத்தளவில் சுதந்திரம் அழிப்பதில்லை. பெண் தான் விரும்பும் ஆடவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை மறுக்கிறது. மீறித் தேர்ந்தெடுக்கும் பெண்களுக்குச் சமூகம், குடும்பம் என்ற நிலைகளில் பல்வேறு சிக்கல்கள் தோன்றுகிறது என்பது புலப்படுகின்றது.

தாய்மாமன் ஏழை என்பதால் திருமணம் முடிக்கும் காலம் தாமதமானதால் தன் மாமாவிற்காகக் காத்திருக்கும் இராஜேஸ்வரியை "மாமன் வரவு"[32] என்னும் சிறுகதையிலும், ஆண்மையற்றவனைக் காதலித்து ஏமார்ந்து போன பெண்ணை "முறிவு"[33] என்னும் சிறுகதையிலும், நல்ல மனிதனான கிருஷ்ணமூர்த்தியை விட்டுவிட்டு தன் மகள் சுமதிக்கு பணக்கார மாப்பிள்ளையைப் பார்க்கும் அப்பாவை "உறை"[34] என்னும் சிறுகதையிலும் காணமுடிகின்றது.

பெண்களுக்கு இழைக்கப்படுகின்ற இந்த வன்முறைகளைக் களையும் நோக்கில் ஆசிரியர் தனது சிறுகதைகளைப் படைத்துள்ளார். இக்கருத்துக்கள் பெண்களுக்கு உரிமையும், சுதந்திரமும் வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன. இவற்றிலிருந்து ஆண். பெண் இருவரும் சேர்ந்து செய்யும் தவற்றில் பெண்ணின் மீது மட்டுமே பலி சுமத்துகின்றது சமுதாயம். பிரபஞ்சன் தனது சிறுகதையில் அப்பெண்களைக் காதலால் ஏமாற்றப்பட்ட பெண்களாகப் படைத்துக் காட்டியுள்ளார். அவர் பெண்ணிற்கும் பெண்களின் உணர்வுக்கும் மதிப்பளித்துள்ளதை உணர்த்துகின்றது.

**வாழ்க்கையின் அவல நிலைகள்**

பெண்ணினது வாழ்வு குடும்பம், இல்லம் என்ற சிறு வட்டத்திற்குள் முடங்கிவிடக் காரணம் அக்காலத்தில் எழுந்த புராணங்கள் மற்றும் பெண்ணிற்கே கற்பிக்கப்பட்ட சார்பொழுக்கம் ஆகும்.

"ஆணாதிக்கச் சமூகத்தில், பெண்களுக்கு இடப்பட்ட கட்டுப்பாடுகள் நாளடைவில் இறுக்கமடைந்து பெண் தனது சகல உரிமைகளையும் இழந்து ஆணின் உடமைப் பொருளானாள். மேலும் தந்தை, கணவர், சகோதரர், மகன் எனப் பிறப்பு முதல் இறப்பு வரை ஆண் மகனின் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டவளானாள்."[35]

இக்கருத்துக்கள் பெண்களின் அடிமை வாழ்க்கையின் தொடக்கம் புராண காலத்திலிருந்து வந்திருக்கின்றது. அங்ஙனம் வளர்ந்த இந்த அடிமைத்தனத்தில் இப்பொழுது பல மாற்றம் விழைந்துள்ளது. அந்த வரிசையில் பிரபஞ்சன் சிறுகதையில் வாழ்க்கையில் பெரும் துன்பத்திற்குள்ளான பெண்கள், தனது வாழ்க்கை அவல நிலையைத் துடைத்துவிட்டு மன உறுதியுடன் வலம் வருவதைக் காணமுடிகின்றது.

'அம்மா' என்னும் சிறுகதையில் ஒரு மகன் தன் விதவையான அம்மாவின் உணர்வுகள் பற்றி எண்ணிப் பார்ப்பதாகக் கதை அமைத்துள்ளார். சமுதாயத்தில் விதவைப் பெண்களின் மன உணர்வுகளுக்கு மதிப்பளிக்கும் வகையில் யாரும் கையாளத் தயங்கும் சிக்கல்களை மிக நுணுக்கமாகவும் தெளிவாகவும் கையாண்டுள்ளார்.

"அம்மா தன்னைத் தானே ஏமாற்றித் தன்னைத்தானே கொன்று கொண்டாள்"[36] என மகன் எண்ணிப் பார்க்கிறான். இதில் மகன் தன் விதவையான அம்மா துணையில்லாமல் இருபது வருடங்கள் தனது வாழ்க்கையில் அவல நிலையைத்துடைத்து வாழ்ந்துள்ளதை எண்ணி அவளுக்காக வருத்தப்படுவதாகக் காட்டுகின்றார். இதன்மூலம் ஆசிரியர் விதவைப் பெண்களின் மன உணர்ச்சிகளுக்குப் பெருமதிப்பளித்துள்ளதை உணர முடிகின்றது. "ருசி"[37] என்னும் சிறுகதையிலும் இளவயதிலேயே

கணவனை இழந்து விட்டு நீண்ட நாள் துணையின்றி வாழும் 'பச்சை மாமி' என்ற பெண்ணின் வாழ்க்கை அவலத்தைக் காணமுடிகின்றது.

பெண்ணிற்கு இயற்கையில் ஏற்படும் மாதவிடாய்ப் பிரச்சனையைத் தீட்டு எனறு கூறி அவளை வீட்டில் இருந்து விளக்கி வைக்கும் கொடூரப் பண்பையும் தமது சிறுகதைகளில் சுட்டிக்காட்டியுள்ளார்.

"பெண்களுக்குப் பூப்பு தாய்மை அடைவதற்குக் கடவுள் கொடுத்த வரம். இதனைக் காரணமாக வைத்து மருமகளையும், அவளுடைய பெற்றோரையும் வருத்தமடையச் செய்கிறாள் மாமியார். 'மாமியாரும் ஒரு வீட்டு மருமகளே' என்பதை உணர்ந்து கொள்ளும் பக்குவம் மாமியார்களிடம் இல்லை. ஒரு பெண் வந்தவுடன் தன்னிடம் காட்டிய அன்பெல்லாம் இடையில் வந்தவள் பறித்துக்கொண்டு விட்டாளே என்னும் எண்ணம் பல தாய்மார்களிடம் தவறாகக் குடிகொள்ளும்போது அது மாமியார் மருமகள் சண்டைகளுக்கு அடிப்படையாகிறது. ஆனால் அதை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாமல் வேறுவேறு உருவங்களில் வெடிக்கிறது. அதனால் அவர்களுக்குச் சண்டை நீடிக்கிறது"[38] என்கிறார் செந்தமிழ்ச்செழியன். இக்கருத்தை ஒத்தநிலையில் '3 நாள்' என்னும் சிறுகதையில் படைத்துள்ளார் ஆசிரியர். சுமதியின் கொடுமைக்கார மாமியார் அவளை மாதவிலக்குச் சமயங்களில் மாதந்தோறும் அவள் அம்மா வீட்டிற்கு அனுப்பி வைத்த அவலத்தை இச்சிறுகதை வெளிப்படுத்துகின்றது.

"அம்மா... அந்த மாமி ரொம்ப மடியாம் தீட்டுத் தொடுப்பெல்லாம் அவங்களுக்கு ஆகாதாம் சின்ன வீடு ஒண்டுக் குடித்தனம். அதுல இதையெல்லாம் சீராட்டிக்கிட்டு இருக்க முடியுமோ? உங்க அம்மா வீடுதான் பெருசா வசதியா இருக்கே. இந்த மூணு நாளும் அங்க போயிருந்து, தலைக்குக் குளிச்சுட்டு அப்புறமா வந்து சேரு... அப்படிங்கிறாங்க... என்கிறாள் சமதி."[39]

இச்சிறுகதையில் இயற்கையில் நிகழும் உடல் உபாதைகளுக்குக் கூடப் பெண் தண்டனை அனுபவிக்கும் அவலம் வெளிப்படுகின்றது. இச்சிறுகதை அப்பெண்ணிற்குச் சமுதாயம் இழைத்துள்ள கொடுமையை வெளிப்படுத்துகின்றது. சமுதாயத்தில் பெண்ணிற்கு மட்டும் இவ் அவல நிலைகள் ஏற்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி அதை எதிர்த்துப் போராடும் பெண்களையும் காணமுடிகிறது.

சமுதாயத்தில் வழி தவறிப்போகும் பெண்களைக் கொண்டு சேர்க்குமிடம் பாலியல் தொழிலாகவே அமைகிறது. அந்த அவலநிலையை ஆசிரியர் 'ஓடிப்போனவள் திரும்பியபோது' என்னும் சிறுகதையில் வெளிப்படுத்துகிறார்.

"நான் இதை நியாயப்படுத்தல சார்... வீடு கசந்து போறப்ப வீட்டடைவிட்டு ஓடலாம்னு தோணுது... புருஷனும் கைவிட்டுட்டான்னா அப்புறம் எங்க ஓடுறது... எதுதான் எங்களுக்கு உகந்த இடம்? எது தான் எங்க ஸ்தானம்?"[40] என்னும் கேள்விகளை வத்சலா என்னும் பெண் பாத்திரம் கேட்பதாக அமைத்துள்ளார். பெண் வீட்டைவிட்டு வெளியேறினால் அவளுக்குத் தகுந்த பாதுகாப்பில்லை என்பதை வெளிப்படுத்துகின்றது.

இதைப்போலவே "4வது வழி"[41] என்னும் சிறுகதையில் வழி தவறிப்போகும் பெண்களின் அவலத்தை வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர். "எனக்கும் தெரியும்"[42] என்ற சிறுகதையில் வறுமை நிலையின் காரணமாகத் திருமணம் ஆகாமல் இருக்கும் சுகுணாவைத் தன் தூரத்து உறவுடைய அத்தையே வேண்டாம் என்று மறுக்கும் அவலத்தை விளக்குகின்றார்.

( திருமணமான காரணத்தினால் முன்னனி நடிகையாக இருந்த சந்தாதேவி அக்காவாக அம்மாவாக நடிக்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறாள்.

கலைத்துறையில் ஆண்கள் அறுபது வயதைக் கடந்தால் கூட கதாநாயகனாக நடிக்கிறார்கள். ஆனால் பெண்ணிற்கு இருபது வயதாக இருப்பினும் திருமணமானால் அம்மாவாகவோ அக்காவாகவோ நடிக்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள் என்பதை 'நிழல்' என்னும் சிறுகதை வாயிலாக எடுத்துக் காட்டுகின்றார்.

“பத்திரிக்கை ஒன்று சந்தாதேவிக்கும் அவள் கணவருக்கும் ஏதோ 'லடாய்' என்றும் அவர்கள் 'உறவு முறிந்து' என்றும் செய்தி வெளியிட்டிருந்தது. 'அக்காவா அம்மாவா' படத்தில் கதாநாயகியாக மணிஸ்ரீயும் மணிஸ்ரீக்கு அக்காவாகச் சந்தாதேவியும் நடித்தார்கள்”[43] இதில் பெண்களின் நிலை திருமணத்திற்குப்பின் மாறுகின்றது என்பதையும், இந்த நிலை ஆணிற்கு இல்லை என்பதையும் காட்டுகின்றது.

இதைப்போலத் “தொலைந்து போனவள்”[44] என்னும் சிறுகதையில் தன் தங்கையின் நலத்திற்காகத் தான் விரும்பாத மாப்பிள்ளையை மணம் கொள்ளச் சம்மதிக்கும் பெண்ணையும் வரதட்சனைக் கொடுக்க முடியாததால் திருமணத்தில் சுகுணாவிற்கு சிக்கல் ஏற்படுவதனை “எனக்கும் தெரியும்”[45] என்னும் சிறுகதையிலும் தன்னைவிட உயர் பதவியில் இருக்கும் சகோதரியை அவள் பதவியை விரும்பாத குரூர புத்தி கொண்ட ஜலகண்டேசுவரனை 'குரூரம்' என்னும் சிறுகதையிலும் காணலாம். அவன் தன் தங்கை பெண் என்ற காரணத்தினால் தன்னைவிட உயர் பதவியில் இருப்பதை அண்ணன் விரும்பவில்லை. அவன் மேகாவிடம்,

“ஓகோ... நீ பெரிய ஆபீசர்னு எனக்கு சொல்றயாக்கும்! டைரக்டர்ஸ், எம்.டி.யோட எல்லாம் மூவ் பண்றவ நான். நீ வெறும் கிளார்க்குன்னு சொல்றே இல்லையா? நீயே குளிச்சுட்டுக் கிளம்பும்மா...”[46] என்று குத்தலாய் பேசிவிட்டு, விடு விடு என்று தன் அறைக்குள் போய் புகுந்து கொண்டான்.

இந்நிலை பெண்கள் பணியாற்றும் நிலையில் கூட பெண்தானே என்ற புறக்கணிப்பு நிலை உள்ளதைச் சுட்டிக் காட்டுவதாக அமைகின்றது. குழந்தையைத் தூக்கிக் கொண்டு சினிமாவிற்குச் சென்ற லெட்சுமி, கூட்ட நெரிசலில் குழந்தையை இழந்துவிடுகின்ற அவலத்தை "வரிசை"[47] என்னும் சிறுகதையிலும் பாலியல் சிக்கலுக்கு உள்ளாகும் 'கலாஸ்ரீ' என்னும் நடிகையின் அவலத்தைக் "காயம்பட்ட மாலை வானம்"[48] என்னும் சிறுகதையிலும் தன் கணவன் தன்னைவிட்டு வேறொரு பெண்ணுடன் வாழ்வதாகவும், அவரோடு தன்னைச் சேர்த்து வைக்க வேண்டுமென்றும் கண்ணீர் மல்க ரெட்டி என்பவரிடம் வேண்டுகிற ராஜனின் மனைவி ரூபா என்னும் பெண்ணின் அவல நிலையினைக் "காக்கைச் சிறகு"[49] என்னும் சிறுகதையிலும் காணமுடிகிறது.

இவற்றிலிருந்து பெண்களின் திருமண விசயத்திலும், கைமைப் பெண்களைக் கொடுமைப்படுத்தும் விசயத்திலும் ஆணாதிக்கம் நிறைந்த சமூகம் பெண்களுக்குப் பல துன்பங்களை இழைத்துள்ளது என்பதைத் தன் சிறுகதை மூலமும், கதாபாத்திரங்கள் மூலமும் வெளிப்படுகின்றது. வழி தவறிப்போகும் பெண்கள் அவர்கள் தம் போக்கிற்குக் காரணமாகச் சமுதாயத்தையே குற்றம் சாட்டியுள்ளார் ஆசிரியர். முடிவில் பெண்களின் வாழ்க்கை அவலங்களுக்குக் காரணமாக இச்சமுதாயம் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

**தன்னம்பிக்கையில் ஏற்படும் சிக்கல்கள்**

பிரபஞ்சன் படைப்பில் தன்னம்பிக்கை நிறைந்த பெண்கள் அதிகம். இச்சமுதாயத்தில் தன்னம்பிக்கையுடன் சிக்கல்களை எதிர்நோக்கும் பெண்களைப் படைத்துள்ளார்.

"தன்னம்பிக்கை என்பது எந்தவிதக் குழப்பமும் இன்றி தெளிவாக இருப்பது என்னும் நம்பிக்கையென்னும் ஓர் ஒளி வெள்ளமே தாம் எனப்படுவதாகும். தாம் என்பது பணத்தினால் பெறக்கூடிய ஒன்றன்று. தாம் என்பது எப்போதும் பயந்து ஓடுவதில்லை. அது தன்–னொழுக்கமும் தம் அறிவாக இருப்பதுவும் ஆகும். இந்த தெளிவான நம்பிக்கையான் நடக்கும் தன்மை என்பது வாழ்க்கையினைச் சந்திக்க உன்னால் இயலும் என்பதை மெய்ப்பித்தலில் இருந்து வருவதாக உள்ளது"[50]

இத்தகைய தன்னம்பிக்கை ஒளி ஏற்படப் பெண்கள் காலம் காலமாகப் போராடி வந்துள்ளனர். பல படைப்பாளர்களும் தம் படைப்புகளில் தன்னம்பிக்கையுடைய பெண்களைப் படைத்துள்ளனர். அவ்வகையில் பிரபஞ்சன் தனது 'வடு' என்னும் சிறுகதையில் செண்பகா என்ற பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

செண்பகா, ராஜ் இருவரும் காதலர்கள் காதலில் செண்பகா தாய்மையடைகின்றாள். இச்செய்தி அறிந்த ராஜ் தன் நண்பன் கிருஷ்ணமூர்த்தியிடம் இதில் பயப்படறதுக்கு ஒன்றுமில்லை என்று சாதரணமாகக் கூறுகின்றான். இதைக்கேட்ட செண்பகாவும் அதிரவில்லை தன் மனதில் தைரியமும் தன்னம்பிக்கையும் கொண்டவளாக அமைதியாக இப்பிரச்சனையை எதிர்கொள்கிறாள். ராஜ், கிருஷ்ணமூர்த்தி, செண்பகா மூவரும் அமர்ந்திருந்த ஒரு சந்தர்ப்பத்தில் ராஜ் சொன்னான்.

"இதில் பயப்படறதுக்கோ, வருத்தப்படறதுக்கோ ஒன்றுமில்லை மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி. கொஞ்சம் அவசரப்பட்டுவிட்டோம் முன்யோசனை இல்லாமே இருந்துட்டோம். இதைத் தவிர்த்திருக்கலாம். நீ வீட்டுக்குப்போ செண்பகா. நான் இன்னும் ரெண்டு மூன்று நாளைக்குள்ளே உங்க அப்பாவை வந்து பார்க்கறேன். செண்பகா

ஒரேயடியாக ஆடிப்போகவில்லை சமாளித்துக் கொண்டு ஏற்றுக் கொண்டுவிட்டாள்"[51]

இச்சிறுகதையில் செண்பகா மற்ற பெண்களைப் போல தான் பெண்மை இழந்துவிட்டோம் என்பதற்காக அழவில்லை, கூச்சல் போடவில்லை. அவமானப்பட்டு தலைகுனியவும்இல்லை. மாறாக தன்மீதும், தன் காதல் மீதும், தன் காதலன் மீதும் கொண்டிருந்த நம்பிக்கையில் மனம் தளராது இருக்கிறாள். அத்தன்னம்பிக்கையே அவளை வாழவும் வைத்தது. செண்பகாவின் தன்னம்பிக்கையை இதன் மூலம் ஆசிரியர் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

"பெண்மை நெருப்பைப் போன்றது. வீட்டில் விளக்காய் நின்று ஒளி கொடுக்கும். அந்நெருப்பு சில சமயம் வந்தால் காட்டுத் தீயாய்ப் பொசுக்கும். இந்த விழிப்புணர்வு தான் அசல் பெண் சுதந்திரம். இதை அறிந்து கொண்டால் பெண்கள் தனக்கு என்ற உணர்ச்சிக் கொந்தளிப்பான வாழ்க்கையை விட்டுத் தனக்குள் ஏற்படும் பலவீனங்களை வென்று தாய்மையின் பெருமையையும், பெண்மையின் உயர்வையும் போற்றி வாழ்வர்."[52] என்கிறார் மங்கையற்கரசி.

'விட்டு விடுதலையாகி' என்னும் சிறுகதையில் சங்கர், சுமதிக்கு தன்னம்பிக்கையை ஊட்டுகின்றான். அவனால் தன்னம்பிக்கை பெற்ற சுமதி தன்னிடம் குறும்பு செய்யும் பேராசிரியரைத் துணிச்சலுடன் எதிர்க்கிறாள்.

"பெண்கள் ஆண்களுக்கு நிகரான பலம் உள்ளவங்கதான் உங்க பலத்தை நீங்களே உணர்றதில்லை அதுதான் உங்களோட பிரச்சனை... யானை தன் பலத்தை உணர்ந்தா பிச்சை எடுக்குமா...?"[53] என சங்கர் சுமதிக்கு தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படுத்துகின்றான். அவனிடத்திலிருந்து

தன்னம்பிக்கையைக் கற்றுக் கொண்ட சுமதி தன் மீது கைவைத்த பேராசிரியரை பார்த்து,

"ப்ளீஸ்... என் தோள்மேல் இருக்கிற கையை எடுங்க சார். எனக்கு இது பிடிக்காது"[54] என்கிறாள்.

இது பெண்களுக்குள் இருக்கும் தைரியத்தை வெளிக்கொணர்ந்து அவர்களுக்குத் தன்னம்பிக்கையை ஏற்படுத்தும் விதமாக ஆசிரியர் அமைத்துள்ளார். பெண்கள் தன்னம்பிக்கை பெற்றவளாக மாறினால் சமுதாயத்தில் எந்த இன்னல்களையும் எதிர்கொள்ளும் ஆற்றல் பெற்றவளாக முடியும்.

"மிருகம்" என்னும் சிறுகதையில் தந்தை தன் மகளுக்குத் தன்னம்பிக்கையை ஊட்டி வளர்க்கின்றார். "அழுகை உனக்கு எந்த விதத்திலும் உதவாது"[55] என்று தந்தை அறிவுறுத்துகின்றார். இது பெண்ணின் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களை எதிர்த்துப் போரிடும் மனநிலையைத் தருவதாக அமைகின்றது. ஆசிரியர் இக்கருத்தைப் பெண்களுக்குப் பல பாத்திரங்களின் வழி அறிவுறுத்துகின்றார்.

இதேபோன்று "அப்பாவுக்குத் தெரியும்"[56] என்னும் சிறுகதையில் வரும் சுமதி என்கிற பாத்திரமும், "நெருப்பைப் பொட்டலம் கட்ட முடியாது"[67] என்னும் சிறுகதையில் சினிமாவில் டூப் போடும் 'கல்பனா' என்கிற பாத்திரமும், தன்னம்பிக்கை கொண்ட பாத்திரப் படைப்புகளாக அமைகின்றன.

'ஒரு வித்யாவின் கதை' என்னும் சிறுகதையில் வரும் 'வித்யா' தன் கணவன் தனக்கு விவாகரத்துக் கொடுத்துவிட்டான் என்பதற்காக அழவில்லை. மாறாக "எனக்கு விவாகரத்துக் கிடைத்ததில் வருத்தம் இல்லை

மூர்த்தி. அது நான் எதிர்பார்த்தது தானே"[58] என்கிறாள். பெண் தனியாக இச்சமுதாயத்தில் வாழமுடியும் என்ற நம்பிக்கை கொண்டவளாக அமைகின்றாள்.

சமுதாயத்தில் ஆண் துணையின்றி வாழ்ந்து காட்டியவள் 'வாசனை' என்னும் சிறுகதையில் வரும் 'செண்பகராஜலட்சுமி' என்பவள் பெண் சமூகத்தில் தனித்து வாழமுடியும் என்பதை நிரூபித்துக் காட்டியவள். 'செண்பக ராஜலட்சுமி' திருமணம் ஆகாத காரணத்திற்காகவே அவளுக்கு 'வீடு' வாடகைக்குக் கொடுக்காத சமூகத்தையும் இங்கு காணமுடிகின்றது. மதனகல்யாணி என்பவள் சென்ப ராஜலெட்சுமிக்குத் தன்னம்பிக்கை ஊட்டும் பாத்திரமாக அமைகின்றாள்.

"நீ தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிற வாழ்க்கைமுறை உனக்கு சம்மதம் என்றால், மற்றவர் உன் மீது வைக்கிற விமர்சனத்தை நீ ஒதுக்கித் தள்ள வேண்டும் அல்லவா? மற்றவர் அபிப்ராயம் உன்னைத் தொந்தரவுபடுத்துகிறது என்றால், உன் மீதே உனக்கு நம்பிக்கை இல்லை என்பது பொருள்"[59] என்கிறாள். இக்கூற்று அவளுக்குத் தன்னம்பிக்கையை ஏற்படுத்துகின்றது. குடும்பம் உறவு என்னும் மரபுகளை மீறிப் பெண் தனித்து வாழ முற்படும் போது அவளின் தன்னம்பிக்கைக்கே சிக்கல் ஏற்படுவதை இங்குக் காட்டுகின்றார். இங்குப் பெண்கள் சமூகத்தில் தன்னம்பிக்கை கொண்டு வாழ்வது அவர்களின் சுதந்திர வாழ்விற்கு அவசியமாகிறது என்பதை வெளிப்படுத்துகின்றார்.

'அப்பாவுக்குத் தெரியும்' என்னும் சிறுகதையில் தன்னம்பிக்கை கொண்ட பாத்திரமாகச் சுமதியைப் படைத்துள்ளார். தாய், தந்தையை இழந்த நிலையிலும் தன்னை உள்ளன்போடு விரும்பாத சங்கரனை ஏற்க மறுக்கிறாள். அவளிடம் மாமா, ஏன் மறுத்தாய்? எனக் கேட்கிறார். "மாமா,

அவர் இந்த வீட்டையும் தோட்டத்தையும் ஒழுங்கு படுத்தினவளைத்தான் பார்த்தார். அவளைத் தான் கட்டிப்பேன்னு நினைச்சாரு மாமா. என்னை அவரு பார்க்கவில்லையே...''[60]

சுமதி, தான் அனாதை என்ற நிலையிலும் சங்கரனை ஏற்க மறுக்கிறாள். இது ஆதரவு அற்ற நிலையிலும் பெண் தன்னம்பிக்கை கொண்டு வாழவேண்டும் என்பதை வலியுறுத்துவதாக அமைகின்றது. பிரபஞ்சன் பெண்கள் எச்சூழலிலும் தன்னம்பிக்கை கொண்டவர்களாகத் திகழ வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார்.

பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் தன்னம்பிக்கை கொண்ட பெண்களைப் படைத்து பல பெண் பாத்திரங்களுக்குத் தன்னம்பிக்கையை ஊட்டுபவர்கள், ஏற்படுத்துபவர்கள், பெண்கள் சுயமாக வாழக் கற்றுக் கொள்ள வேண்டும் என உணர்த்துபவர்கள் ஆண்களாகவே அமைகின்றனர் என்பதைச் சுட்டிக்காட்டி ஆண் பாத்திரங்கள் வழியே பெண்கள் தைரியத்தையும், தன்னம்பிக்கையையும் அடைகின்றார்கள் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

**மனிதநேயச் சிக்கல்கள்**

''மனிதநேயம் என்பது துன்பப்படும் மனிதனைப் பார்த்த உடன் அவனுக்கு உதவி செய்வதோடு மட்டும் அல்லாமல் அம்மனிதனின் துன்பத்திற்கான காரணகாரிய உறைத் தேடுவதும் அத்தேடல் மூலம் அத்துன்ப வழியைப் போக்கி இன்பம் நுகரச் செய்வதும் மனிதநேயமாகும்.''[61] என்பர்.

''உலக ஆக்கத்துக்குரிய தாய்மை பெண்ணின் பால் உண்டெனில், அவளது தொண்டின் சிறப்பை என்னென்று கூறுவேன்? உலக நலத்துக்குரிய

தொண்டைப் (Service) பெண் தெய்வம் ஏந்தி நிற்கிறது. தொண்டு எது? பயன்கருதிச் செய்யப்படும் வேலை தொண்டாகாது. பயன் கருதாது செய்யப்படும் பணியே தொண்டாகும்”[62] என்கிறார் திரு.வி.க. இக்கருத்து மனிதநேயம் கொண்ட பெண்ணின் தன்மை பற்றி விளக்குகின்றது.

தொண்டுள்ளம் கொண்டு பெண்கள் உலகினுற்கு உழைத்திட வேண்டுமென்று கூறுகிறார் பாரதியார். இதனைத் தம் கவிதை வரிகளில்,

“உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்,
இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவும் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலக வாணுத லார்நங்கள் பாரத
தேசமோங்க உழைத்திட வேண்டுமாம்”[63]

என்கிறார். இப்புதுமைப் பெண்கள் நாடு நலம்பெற உழைத்திடல் வேண்டும் என்கிறார். இவ்வழியில் பிரபஞ்சனும் மனிதநேயம் கொண்ட தொண்டுள்ளம் கொண்ட பெண்களைப் படைத்துள்ளார்.

பிரபஞ்சன் சிறுகதைகளில் பல இடங்களில் மனிதநேயப் படைப்புகளைக் காணலாம். சில நேரங்களில் வியப்பில் ஆழ்த்துகின்றன. இந்தக் காலகட்டத்தில் இப்படியும் மனிதநேயம் கொண்ட பாத்திரங்கள் இருக்கமுடியுமா? என ஆச்சரியத்தில் ஆழ்த்துகின்றது. மனிதநேயமிக்கப் பெண் பாத்திரங்களை ஆசிரியர் படைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

முதன்முதலில் தன்னைப் படமெடுத்துத் திரைப்படப் பத்திரிக்கைகளுக்குக் கொடுத்தவனை மறக்காமல் அவன்மீது இறக்கப்படும் ‘விஜயாவை’ ‘ஒரு மனுஷி’ என்னும் சிறுகதையில் படைத்துள்ளார் ஆசிரியர்.

சினிமாப் பத்திரிக்கைக்கு ஸ்டில்ஸ் எடுத்துக் கொடுப்பவன் சேகர், அந்த மாதம் சம்பளம் வரத்தாமதம் ஆனதால், தான் முதன்முதலில் படம் எடுத்த விஜயாவைத் தேடிவருகின்றான். தனக்கு உதவியவன் என்பதால் அவன் கேமராவில் பிலிம் இல்லை என்று தெரிந்தும் போஸ் கொடுக்கிறாள் விஜயா. மேலும் படத்தைப் பிரிண்ட் போட வேண்டும் எனப் பொய் கூறி அவளிடமே பணம் கேட்கிறான் சேகர். அவளுக்கும் பிலிம் இல்லை என்று தெரியும். இருப்பினும் தான், பட்டினியால் கிடக்கும் நிலையிலும் பக்கத்து வீட்டிலிருந்து கடன் வாங்கிக் கொடுக்கிறாள் 'விஜயா'.

இந்த 'விஜயா' ஓர் பாலியல் தொழிலாளி என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இப்படிச் செய்ததற்கு அவள் கூறும் காரணம். "பாவம்கா கண்ணைப் பார்த்தா தெரியுதே சாப்பிடவில்லை... சோத்துக்காக நல்ல மனுஷன் பொய் சொல்றாரு, பாரு... அதான்"[64] என்கிறாள். இச்சிகதையில் விஜயாவின் மனிதநேயம் பளிச்சிடுவதைக் காணமுடிகிறது. தான் சாப்பிட வழிஇல்லாத போதும் தனக்கு உவியவனுக்காக கடன் வாங்கிக் கொடுக்கும் விஜயாவின் மனிதநேயம் பாராட்டும் வகையில் அமைகின்றது.

'கரியமுகம்' என்னும் சிறுகதையில் வரும் வீட்டுக்கார அம்மாவும் மனிதநேயம் கொண்டு அமைந்த படைப்பாகத் திகழ்கின்றாள். இச்சிறுகதையில் வீட்டிற்குள் திருடவரும் திருடர்களுள் ஒருவன் மட்டும் மாட்டிக் கொள்கிறான். அங்கிருந்தவர்கள் அவனை நன்கு அடித்து விடுகின்றனர். அந்த 'வீட்டுக்கார அம்மாவோ' அவனுக்குத் தண்ணீர் கொண்டு வந்து தருகின்றாள். பின்னர் டீ கொண்டு வந்து தருகின்றாள். இது அப்பெண்ணின் தாய்மை உணர்ச்சியுடன் அடங்கிய மனிதநேயத்தை வெளிப்படுத்துகின்றது.

“வீட்டுக்கார அம்மா ஒரு லோட்டாவில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள் மடக்மடக்கென்று சப்தம் வர அவன் அதைக் குடித்தான். ஆனாலும் அந்தக் குழந்தையை அப்படிப்போட்டு அடிச்சிருக்கப்படாது”[65] என்றாள் அந்த அம்மா. திருடன் என்றாலும் அவனும் மனிதன் தானே என்று கூறும் மனிதநேயம் படைத்தவளாக அந்த வீட்டுக்கார அம்மாள் அமைகின்றாள். மனிதநேயமே மறைந்து கொண்டிருக்கும் காலத்தில் இதுபோன்று அமைக்கப்படும் காட்சிகள் மனிதநேயத்தை நினைவூட்டுகின்றன.

அஞ்சலை என்பவள் வயதானவரைத் திருமணம் செய்து வாழ்வில் எந்த ஒரு மகிழ்ச்சியும் இல்லாதவள். தன்னுடன் நெருங்கிப் பழகிய ‘ரேணு’ என்பவளின் கணவனோடு தகாத உறவு கொண்டதை அறிந்தும் அஞ்சலையின் நிலைக்காக வருந்தி அவள் தவற்றை மன்னித்த ‘ரேணுவை’ ‘மனசு’ என்னும் சிறுகதையைப் படைத்துள்ளார்.

இச்சிறுகதையில் தன் கணவனோடு தகாத உறவு கொண்டதைக் குறிப்பால் அறிந்து கொண்டவள் அவளை விட்டு விலகு எண்ணுகிறாள். ஆனால் அந்த அஞ்சலை அக்காவின் நிலையை எண்ணி ரேணுவிற்குப் பாவமாகவும் இருந்தது.

“சரி... நான் வரேன்... என்று சொல்லிய அக்கா, தலையைக் கவிழ்ந்து கொண்டே போனாள். ரேணு அக்காவைப் பார்த்தாள். ஆத்திரமாக இருந்தது. ஒரு நிமிஷம் தான். அப்புரம் பாவமாகவும் இருந்தது”[66] என்பதின் மூலம் மனிதநேயம் கொண்ட ரேணுவின் உள்ளம் வெளிப்படுகின்றது. இதில் அஞ்சலை தவறு செய்திருந்தாலும் அவளை மன்னித்த மனிதநேய உள்ளம் ரேணுவிற்கு இருந்தது.

இச்சமுதாயத்தில் பிரபஞ்சனின் மனிதநேயப் பாத்திரங்கள் படிப்போரை நெஞ்சுருக வைத்து விடுகின்றன. இவை இப்பூமியில் மனிதம் இன்னும் சில இடங்களில், சில நேரங்களில் வெளிப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன என்பதன் சான்றாக அமைகின்றன.

குறிப்பாகப் பெண் பாத்திரங்களிடத்து மனிதநேயத்தைப் பதித்து தன் சிறுகதை வழி உலவவிட்டிருப்பது பெண்களுக்கு ஆசிரியர் அளித்த மணிமகுடமாகத் திகழ்கின்றது. மேலும் சமுதாயத்தில் பெண்களுக்கு ஏற்படும் பல்வேறு சிக்கல்களுக்குச் சமுதாயமும் மரபும் காரணமாக அமைந்துள்ளதை வெளிப்படுத்தியுள்ளார். அச்சிக்கல்கள் தீர பெண்களுக்குத் தைரியம் மற்றும் தன்னம்பிக்கை மிக அவசியம் என்பதைப் பிரபஞ்சனின் சிறுகதைப் பாத்திரங்கள் நிரூபிக்கின்றன.

**பிரபஞ்சன் காட்டும் பெண்கள்**

பிரபஞ்சன் பெண்களின் நலனில் அக்கறை கொண்டவர். அவர்களின் உணர்வை ஒரு சமநிலைப் போக்குடன் ஆராய்ந்து படைத்தவர். இந்த சமூகம் பெண்ணை அடிப்படையாகக் கொண்டது என்ற கருத்தைக் கொண்டவர். சமுதாயத்தில் பெண், ஆண் இருவரும் சரிசமமே என்னும் சிந்தனையை விதைத்தவர்.

"சமூகம் என்பதே பெண்ணை அடிப்படையாகக் கொண்டது தான். சமூகத்தின் கர்ப்பப்பை பெண். இயற்கை என்கிற அற்புதம் – பெண் என்கிற அற்புதத்தை சிருஷ்டித்தது. ஒரு விளக்கு இன்னொரு விளக்கை ஏற்றுவது போல சூரியன், தன் ஒளிக்கதிர்களைப் பெண்ணுக்கும் ஆணுக்கும் சரிசமமாகவே வீசுகிறான் – இதை மறுப்பார் உண்டா?"[67] என்று கேட்கிறார் பிரபஞ்சன்.

இதன்மூலம் சமூகத்தில் பெண் சரிபாதி பங்கு வகிப்பவள் என்பதை இயற்கையின் வழி விளக்கியுள்ளார். பிரபஞ்சன் படைப்புகளில் பெண்கள் எப்பொழுதுமே தன்னம்பிக்கை கொண்டவர்களாக அமைந்துள்ளனர். வாழ்க்கையில் துணிவு கொண்டவர்களாகவும் காதலைச் சரியான கோணத்தில் பார்ப்பவர்களாகவும், போராடும் குணம் கொண்டவர்களாகவும், மொத்தத்தில் தன் சுயத்தை இழக்காதவர்களாகவும், புரட்சிகரமான சிந்தனைகள் உடையவர்களாகவும் படைத்துக் காட்டியுள்ளார்.

'3 நாள்' என்னும் சிறுகதையில் "என் ரகசியத்துல உங்களுக்குப் பங்கில்லையா... எனக்கு அவமானம்னா அது உங்களுக்கும் இல்லையா..."[68] என்று 'சுமதி' என்னும் பெண் கேட்கின்றாள்.

இதில் மனைவிக்கு ஏற்படும் உயர்வு தாழ்வில் கணவனுக்கும் பாதிப் பங்குள்ளதை 'சுமதி' கதாபாத்திரம் உணர்த்துகின்றது. தனது மனக்கருத்தைக் கணவனிடம் எடுத்துச் செல்லும் துணிவைப் பெண்ணிற்கு ஆசிரியர் அளித்துள்ளதை அறியமுடிகின்றது. சமுதாயத்தில் பெண்கள் நிலையும் உரிமையும் பற்றிய புரட்சிகரமான சிந்தனையை 'நீரஜா' என்ற பெண் பாத்திரத்தின் வழி எடுத்துக் காட்டியுள்ளார்.

இதனை '4 ஆவது வழி' என்னும் சிறுகதையில் "நம்ம சமுதாயம் அப்படியா சார் இருக்கு... ஒரு பெண், உன்னை எனக்குப் பிடிக்கல்லை நான் போறேன்னு சொல்லிட்டுப் போற மாதிரி சுதந்திரம் அவளுக்கு இருக்கா...? சொன்னாதான் நீங்க விடுவீங்களா! காலை உடைச்சு வீட்டுல போட்டுப் பூட்டி வச்சு விடுவீங்களே..."[69] என்கிறாள் 'நீரஜா'.

திருமணமான ஒரு பெண் தனக்குப் பிடித்த மற்றொருவனுடன் வாழச் செல்வதை ஞாயப்படுத்தியும், அவளுக்கு இருக்கும் உரிமை பற்றியும்,

பெண்ணின் மனநிலை பற்றியும் மாறுபட்ட சிந்தனையைப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். திருமணத்திற்கு பின் ஒரு ஆண் மற்றொரு பெண்ணுடன் வாழ விரும்புவதை ஏற்றுக் கொள்ளும் சமுதாயம், அவ்வுரிமையைப் பெண் எடுத்துக்கொள்ளும் பொழுது அதை சமுதாயச் சீர்கேடாகச் சித்திரித்துப் பார்க்கிறது. ஆனால், ஆசிரியர் இந்த உலகில் ஆணிற்கு உண்டான அத்துனை உரிமையும் பெண்ணிற்கும் உண்டு என்பதைத் தன் சிறுகதை மூலம் வெளிப்படுத்தியுள்ளது அவரின் மனத் திண்மையையும் பெண் உணர்வு மீது ஆசிரியர் கொண்டுள்ள தனி மதிப்பையும் வெளிப்படுத்தியுள்ளது.

இவற்றைப்போல 'மனசு' என்னும் சிறுகதையில் தாலி கட்டினவன் விட்டுவிட்டுப் போய்விட 'பட்டு' என்கிற பெண் தவறான பழக்கத்திற்கு உட்பட அதற்குக் காரணம் விட்டுவிட்டு ஓடிப்போன கணவன் தான் என்று வாதாடும் மனநிலையைக் கொண்ட 'அஞ்சலை' என்னும் பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

"தப்புக்கு நான் மட்டுமா துணைபோனேன். அவளை விட்டுவிட்டு ஓடிப்போனானே அவகழுத்தில் தாலியக் கட்டினவன் – தப்பு அங்கேந்து ஆரம்பிக்குது"[70] என்கிறாள்.

இதில் பெண்கள் உணர்வு நிலையிலும் ஆண்களுக்கு இணையாக மதிக்கப்பட வேண்டும் என்பதைக் காட்டியுள்ளார் ஆசிரியர். இதைப்போன்றே கொடுமை செய்த கணவனைக் கொல்லிக்கட்டையால் அடித்த 'சத்யா' என்ற பாத்திரத்தின் வழி ஒரு புரட்சிப் பெண்ணைக் "காலம் இனிவரும்"[71] என்னும் சிறுகதையில் படைக்கின்றார் ஆசிரியர்.

'கொடூரம்' என்னும் சிறுகதையில் மனத்தில் வீரமும் துணிச்சலும் கொண்ட மல்லிகா என்ற பாத்திரம் "திராவகத்தை என்னால் முகத்தில் ஊற்ற முடியாதா? ஏன் முடியாது? நான் பெண் அதனாலயா?"[72] எனத் துணிவுடன்

அஞ்சாமல் கேட்கின்றாள். மனத்தைரியம் கொண்ட பெண்ணைப் படைத்துக் காட்டியுள்ளதை அறியமுடிகின்றது. ஒரே அலுவலகத்தில் அண்ணனைவிட உயர்பதவி வகிக்கும் தங்கை மேகாவை "குரூரம்"[73] என்னும் சிறுகதையில் படைத்துள்ளார்.

**பிரபஞ்சன் காட்டும் வாழ்வியல் நெறிகள்**

பிரபஞ்சன் தனது சிறுகதைகளின் வழி வாழ்க்கைக்குத் தேவையான பல வழிமுறைகளை எடுத்துரைக்கின்றார். தனது சிறுகதைகளில் மனிதனுக்கு உண்டாகும் சிக்கல்கள், குடும்பச் சிக்கல்கள், சமூக சிக்கல் என்ற பல்வேறு துயரங்களையும் காணலாம். சிக்கல்கள் நீங்கி நல்வாழ்வு மலரும் வழிகளையும் அவர் கூறுகின்றார். பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் படைத்த மனிதர்கள் தங்கள் வாழ்க்கையைத் தீர்மானித்துக் கொள்கின்றவர்கள்.

பாலியல் தொழிலில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவள் வத்சலா. தனக்கு ஏற்பட்ட கசப்பான வாழ்க்கையை விட்டு ஓட நினைத்தவள் தேர்ந்தெடுத்தது பாலியல் தொழில். இதனை,

"நான் இதை நியாயப்படுத்தல் சார்... விடு கசந்து போறப்ப வீட்டைவிட்டு ஓடலாம்னு தோணுது... புருஷனும் கைவிட்டுட்டான்னா அப்புறம் எங்கே ஓடுறது... எதுதான் எங்களுக்கு உகந்த இடம்? எதுதான் எங்க ஸாதானம்?"[74] எனக் கேட்கிறாள். இதில் வத்சலா தானே தன்னுடைய வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டதை அறியமுடிகினறது. இதே மாதிரியான ஒரு வாழ்வை "4வது வழி"[75] என்னும் சிறுகதையிலும் 'உஷா' என்பவள் தேர்ந்தெடுத்துக் கொள்வதைக் காணலாம்.

தான் வாழ நினைக்கின்ற வாழ்வைத் தானே அமைத்துக் கொள்ளும் பாத்திரங்களைப் பிரபஞ்சனின் சிறுகதைகளில் காணமுடிகின்றது. இதன் மூலம் எவ்வளவு சிக்கல்கள் இருந்த போதிலும் வாழ்க்கை வாழ்வதற்காகவே என்று நம்பிக்கைக் குரல் கொடுப்பதாகவே பிரபஞ்சன் சிறுகதைகளைப் படைத்திருப்பதை அறியமுடிகின்றது.

பிரபஞ்சன், வாழ்க்கை குப்பையாக மாறிப் போனாலும் சாவை மட்டும் மனிதன் தேர்ந்தெடுக்கக் கூடாது. வாழ்ந்துகாட்ட வேண்டும் என்கிறார். இதனை, “சாகறதுலே என்ன சார் இருக்கு வாழறதுலே சந்தோஷம் இருக்கே”[76] என்று பாத்திரத்தின் வழி கூறுவதிலிருந்து உணரமுடிகின்றது. அற்புதமான வாழ்க்கைச் சிறப்பானதாக அமையப் பல நெறிகளையும் தம் படைப்புகளின் மூலம் வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர். இதேபோல் திருமணத்தில் மணப் பெண்ணைக் கேலி செய்வதைக் கேட்டு சீறும் ‘கோதை’யை ‘மிருகம்’ என்னும் சிறுகதையில் காட்டுகின்றார்.

“சார்... சாப்பாடு கொஞ்சம் கூடுதல் குறைவா இருக்கலாம். நாளை சாப்பாடு நல்லா பண்ணிடலாம், ஆனா நாளைக்குக் கல்யாணம் ஆகப்போற பொண்ணைப்பத்தி இப்படிப் பேசறது அழகா இல்லை”[77] என்கிறாள். எந்த இடத்திலும் ஞாயத்தைக் கேட்கக் கூடிய துணிச்சல் கொண்ட பெண்ணாகக் கோதை அமைகின்றாள்.

“அப்பாவுக்குத் தெரியும்”[78] சிறுகதையில் பெற்றோரை இழந்த நிலையிலும் ஆதரவளித்த மாமன் மகனையே வேண்டாம் என்கிறாள் சுமதி. இந்த சுமதி தன்னம்பிக்கை கொண்டவள். ‘ஒரு வித்யாவின் கதை’ என்னும் சிறுகதையில் தன் கணவன் தன்னைவிட்டுப் பிரிந்தபோதும் தான் இனிமேல் எப்படி வாழப்போகிறோம் என நினைத்துக் கவலை

கொள்ளாமல் அச்சூழலைத் தையிரியத்துடன் எதிர்நோக்கும் வித்யாவைப் படைத்துள்ளார். இதில் மனம் ஒப்பாத கணவனிடமிருந்து விவாகரத்துப் பெற்றதில் துளிகூட அவளுக்கு வருத்தமில்லை.

“மனம் ஒப்பாத ஒருவனிடமிருந்து விலகுவதில் எனக்கு சந்தோஷமாகவே இருந்தது. மனசுக்குள் ரகசியமாக அதைக் கொண்டாடிக் கொண்டும் இருந்தேன். வாழ்க்கை எனக்குத் தீர்ந்து போய்விட்டது என்று அப்பா நினைத்தார். என் வாழ்க்கை இனிமேல் தான் தொடங்கப் போகிறது எனறு நான் நினைத்தேன் மூர்த்தி. இப்போது தான் சந்தோஷமாக இருக்கிறேன். எனக்கு இப்போது தான் பறக்க வேண்டும் போல் இருக்கிறது. வானம் முழுக்க வானத்தை அடைத்துக் கொண்டு, இடத்தை மிச்சம் வைக்காமல் பறக்க வேண்டும் போல் இருக்கிறது”[79] என்கிறாள்.

வித்தியாவின் மன உறுதியை இக்கூற்று வெளிப்படுத்துகின்றது. வாழ்க்கைத் தொலைந்து விடுகின்றபொழுது பயங்கொண்டு அழுது வடியும் பெண்களுக்கு மத்தியில் துணிவு கொண்டு புத்தெழுச்சியுடன் வானில் பறக்க நினைக்கும் பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக வித்யா திகழ்கின்றாள். மனம் ஒப்பாமல் கொடுமைக்கார கணவருடன் அனுசரித்து வாழும் கோழை மனம் கொண்ட பெண்களுக்கு மத்தியில் வித்தியா புரட்சிப் பெண்ணாக அமைகின்றாள். இது வாழ்வு சிறைபடுகின்றபொழுது அதுகண்டு பெண்கள் கவலையுறாது அச்சிறை நீங்க வழி காண வேண்டும் என்பதை வலியுறுத்துவதாக அமைகின்றது.

சமுதாயத்தில் தனியாக பெண் வாழ முடியும் என வாழ்ந்து காட்டிய ‘செண்பகா’ தன்னைச் சிறுமைபடுத்தும் கணவனைச் சொல்லால் அடிக்கும் ‘வனதிராட்சை’ திருட வந்தவனுக்கு டீ கொண்டு வந்து கொடுத்த மனிதநேயம்

கொண்ட 'வீட்டுக்கார அம்மாள்' போன்ற பெண் பாத்திரங்களைப் படைத்துக்கட்டி பெண்களை உயர்வான இடத்தில் வைத்து பெண்ணினத்திற்குப் பெருமை சேர்த்துள்ளார் பிரபஞ்சன்.

பிரபஞ்சன் பல்வேறு நிலைகளில் பெண்கள் அடையும் துயரங்களை நுணுகி வெளிப்படுத்தியுள்ளார். பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களையும், அதற்கான தீர்வுகளையும் சிறந்த முறையில் வெளிக்காட்டியுள்ளார். பெண்களிடம் புதைந்துள்ள ஆற்றல்களை வெளிக்கொண்டுவர முயலவேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார். பெண்கள் பெண்களைப் புரிந்து நடத்தல் வேண்டும். பெண்கள் சமுதாயத்தில் பாகுபாடின்றி வாழவேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார்.

# தொகுப்புரை

மனிதனின் நல்ல வாழ்க்கை என்பது தன்னை ஈன்றவர்களுக்கும், சுற்றத்தினருக்கும், சமுதாய மறுமலர்ச்சிக்கும் பயன்படுவதே ஆகும். தமது கடமையைச் செய்யும் மனிதனுக்குப் புகழ் தேடிவருகின்றது. இது மனித வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்றது.

மரபு வழிச் சமூக மதிப்புகளில் ஆண்களுக்குக் கிடைத்த சுதந்திரமும் உரிமைகளும் பெண்களுக்கு மறுக்கப்பட்டது. தந்தையை, சகோதரனைப் பேணுபவளாகவே அமைகின்றாள். ஆரம்பகாலச் சிறுகதைகளில் புதுமைப்பித்தன் தி.ஜ.ர., தி.ஜானகிராமன் போன்றோர் தமது சிறுகதைகளில் பெண்கள் அடையும் வாழக்கைச் சிக்கல்களையும் துயரங்களையும் நுணுகி ஆராய்ந்துள்ளனர்.

வேட்டைச் சமூகத்தில் தலைமை கொண்ட பெண் விவசாய சமுதாயத்தில் அடிமையானார். சமூக, பொருளாதார, பண்பாட்டு அடிப்படையில் பெண்ணிற்குக் கட்டுப்பாடுகள் எழுந்தன. எத்துனை கட்டுப்பாடுகள் இருந்த போதிலும் பெண்களின் புரட்சிகர நடவடிக்கைகளுக்கு அவை ஒருபோதும் தடையாக இருந்ததில்லை.

இக்கால படைப்பிலக்கியங்களில் மாயூரம் வேதநாயகப்பிள்ளை, பாரதியார், புதுமைப்பித்தன், தி.ஜ.ர., தி.ஜானகிராமன், அகிலன், ஜெயகாந்தன், அனுத்தமா, ராஜம் கிருஷ்ணன், அனுராதா ரமணன் போன்றோரும், சு.சமுத்திரம், பாவண்ணன், சூரியதீபன், மாலன் போன்றோரும் பெண் சிக்கல்களை மையப்படுத்திச் சிறுகதைகள் எழுதியுள்ளனர்.

பிரபஞ்சனும் தமது படைப்புகளில் பெண்களின் வாழ்க்கை அவலங்களைச் சுட்டியுள்ளார். பிரபஞ்சன் சிறுகதைகளில் இடம்பெறும் பெண்கள் தன்னம்பிக்கை, துணிச்சல், போராடும் குணம், சுயத்தை

இழக்காதவர்கள், தெளிந்த அறிவு போன்ற திறம் கொண்டவர்களாக அமைந்துள்ளனர். அன்றையக் காலச் சமுதாயத்தில் பெண்களுக்கு ஏற்பட்ட பல்வேறு வாழ்க்கைச் சிக்கல்களைத் தம் படைப்புகள் மூலம் படைத்துக் காட்டியுள்ளார்.

இளவயதுத் திருமணங்கள் குறித்து ஆசிரியர் தமது சிறுகதையில் பேசியுள்ளார். இவ்வழக்கம் சமூகத்திற்குத் தீமை பயக்கிறது என்பதையும் பெண்ணிற்கு எதிரான இவ்வழக்கம் மாறவேண்டும் என்பதும் ஆசிரியரின் நோக்கமாக அமைந்து வெளிப்படுகின்றது.

திருமணத்தின் பின் பெண் தன் குடும்பத்திற்குத் தன்னை அற்பணித்து வாழவேண்டும் என்று கற்பித்துள்ளது சமூகம். ஆனால் ஆசிரியர் குடும்பத்திற்குத் தன்னை அற்பணித்த பெண்களைத் தியாகிகளாகச் சுட்டுகின்றார்.

காதலில் பெண்களுக்குச் சிக்கல்கள் பல தோன்றுகின்றன. இருவர் சேர்ந்து செய்யும் தவற்றில் பெண் மீதே பலி சுமத்துகின்றது சமுதாயம். பிரபஞ்சன் பெண்கள் ஏமாற்றப்படுபவர்களாகப் பார்க்கின்றார். பெண்ணிற்கும் பெண் உணர்வுகளுக்கும் மதிப்பளித்துப் படைக்கின்றார்.

பெண்ணின் வாழ்க்கை அவலங்களைச் சுட்டுகின்றார். வழி தவறும் பெண்கள் அவர்கள் செய்யும் தவறுகளுக்குக் காரணம் சமுதாயமே எனச் சாடுகின்றார். இளமைத் திருமணம், கைமை போன்ற அவலங்களுக்குக் காரணம் சமுதாயமே என்ற போக்கில் சிறுகதைகளையும், பாத்திரங்களையும் படைத்துள்ளார்.

பல மனிதநேயப் படைப்புகளைப் படைத்துள்ளார். இருப்பினும் அப்பெண் பாத்திரங்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுபவர்களாகப் பல இடங்களில் ஆண்களே வருகின்றனர்.

பெண் பாத்திரங்கள் வழி மனித நேயத்தை ஊட்டியிருப்பது பெண்களுக்குப் பிரபஞ்சன் அளித்துள்ள மணிமகுடமாக அமைகின்றது. பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களுக்குக் காரணம் சமுதாயம் என்பதும், அவற்றை நீக்கப் பெண்களுக்குத் தன்னம்பிக்கை, தைரியம்அவசியம் என்பதும் இங்குப் பிரபஞ்சனின் கதாபாத்திரங்கள் கற்பிக்கின்றன.

பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களையும் அவற்றிற்கானத் தீர்வுகளையும் வெளிப்படுத்தியுள்ளார். பெண்களிடம் புதைந்துள்ள ஆற்றல்களை வெளிக்கொணர வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார். பெண்கள் சமூகத்தில் பாகுபாடின்றி வாழவேண்டும் என்பதை வழியுறுத்துகின்றார்.

# சான்றெண் விளக்கம்

1. டாக்டர். சாலினி இளந்திரையன், வாழ்க்கை வரலாற்று இலக்கியம், ப.21
2. அண்ணல் சுப்பிரமணியனார் & டாக்டர் வி.கே.இராமச்சந்திரன், வாழ்வுநெறி, ப.29
3. கிருஷ்ணமூர்த்தி, (எ.மே.), இலக்கியங்களில் மரபும் புதுமையும், ப.436
4. இரா.தண்டாயுதம் (எ.மே.), தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள், ப.40
5. மேலது, ப.192
6. தி.ஜானகிராமன், தி.ஜானகிராமன் படைப்புகள் சிறுகதைகள் தொகுதி-I, ப.345
7. டாக்டர் இரா.பிரேமா, பெண்ணியம் அணுகுமுறைகள், ப.22
8. அரங்க மல்லிகா (ப.ஆ.), தமிழ்ச் சிறுகதைகளில் பெண்ணியம், தேசிய கருத்தரங்குக் கட்டுரை, ப.57
9. இரா.பிரேமா, (தொ.ஆ.), பெண் விடுதலையும் பெண்ணுரிமையும், ப.14
10. ந.சி.கந்தையா, பெண்களும் சமூகமும் அன்றும் இன்றும், ப.35
11. தொல். நூ.8
12. அகிலன், எனது நாவல்களில் சமுதாயச் செய்தி எனும் கட்டுரை, பக்.63–64
13. மா.இராசமாணிக்கனார், தமிழர் திருமணத்தில் தாலி, ப.89
14. திரு.வி.க. பெண்ணின் பெருமை, ப.203
15. மேலது, நூ.ப.199
16. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–1, ‘மிருகம்’, ப.594
17. மேலது, ‘பச்சைக்கிளியும் காந்தியவாதியும்’, ப.618

18. ந.சி.கந்தையா, பெண்களும் சமூகமும் அன்றும் இன்றும், பக்.24–25

19. முல்லை முத்தையா, தமிழர் வாழ்வியல், ப.2

20. குறுந். பா.167

21. பிரபஞ்சன், சிறுகதைத்தொகுதி–1, 'காலம் இனிவரும்', பக்.413–414

22. மேலது, 'காணாமல் போனவர்கள்', பக்.422–423

23. ஈகோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், ப.190

24. அப்துல்ரகுமான், மகரந்த சிறகு, ப. iii

25. இரா.பிரேமா, பெண்ணியம் அணுகுமுறைகள், ப.123

26. ந.சி.கந்தையா, பெண்களும் சமூகமும் அன்றும் இன்றும், ப.141

27. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–1, 'வடு', 262

28. மேலது, 'ஓடிப்போனவள் திரும்பியபோது', ப.290

29. மேலது, 'கதாநாயகி குளித்த கதை', பக்.391–392

30. மேலது, 'கொடூரம்', ப.461

31. மேலது, '2000 வருஷத்து', பக்.587–588

32. மேலது, 'மாமன் வரவு', ப.523

33. மேலது, 'முறிவு', ப.91

34. மேலது, 'உறை', ப.740

35. இரா.பிரேமா, பெண்ணியம் அணுகுமுறைகள், ப.72

36. பிரபஞ்சன் சிறுகதை தொகுதி–1, 'அம்மா', ப.72

37. மேலது, 'ருசி', ப.426

38. செந்தமிழ்ச்செழியன், பெண்கள் பிரச்சனைகளும் தீர்க்கும் முறைகளும், ப.18

39. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–1, '3 நாள்', ப.278

40. மேலது, 'ஓடிப்போனவள் திரும்பியபோது', ப.298

41. மேலது, '4வது வழி', ப.300

42. மேலது, 'எனக்கும் தெரியும்', ப.315

43. மேலது, 'நிழல்', ப.387

44. மேலது, 'தொலைந்து போனவள்', ப.445

45. மேலது, 'எனக்கும் தெரியும்', ப.314

46. மேலது, 'குரூரம்', ப.471

47. மேலது, 'வரிசை', ப.246

48. மேலது, 'காயம்பட்ட மாலை வானம்', ப.264

49. மேலது, 'காக்கைச் சிறகு', ப.779

50. சகி கொற்றவை ஜெயஸ்ரீ, பெண்மையின் உள்ளொலி, ப.141

51. பிரபஞ்சன் சிறுகதை தொகுதி–1, 'வடு', ப.262

52. மங்கையற்கரசி, இலக்கிய வீதியிலே, ப.71

53. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி–1, 'விட்டு விடுதலையாகி', ப.557

54. மேலது, 'விட்டு விடுதலையாகி', ப.560

55. மேலது, 'மிருகம்', ப.592

56. மேலது, 'அப்பாவுக்குத் தெரியும்', ப.க628

57. மேலது, 'நெருப்பைப் பொட்டலம் கட்ட முடியாது', ப.651

58. மேலது, 'ஒரு வித்யாவின் கதை', ப.673

59. மேலது, 'வாசனை', ப.709

60. மேலது, 'அப்பாவுக்குத் தெரியும்', ப.234

61. த.டான்ஸ்டோனி, வண்ணதாசன் சிறுகதைகளில் மனிதநேயச் சித்தரிப்பு, ப.51

62. திரு.வி.க. பெண்ணின் பெருமை, ப.28

63. பாரதியார், பாரதியார் கவிதை, ப.218

64. பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி1, 'ஒரு மனுஷி', ப.460

65. மேலது, 'கரியமுகம்', ப.806

66. மேலது, 'மனசு', ப.382

67. பிரபஞ்சன், பெண்மை வெல்க, ஆசிரியர் முன்னுரை, ப.3

68. பிரபஞ்சன் சிறுகதைத்தொகுதி–1, '3 நாள்', ப.284

69. மேலது, '4வது வழி', ப.309

70. மேலது, 'மனசு' ப.376

71. மேலது, 'காலம் இனிவரும்', ப.406

72, மேலது, 'கொடூரம்', ப.468

73. மேலது, 'குரூரம்', ப.471

74. மேலது, 'ஓடிப்போனவள் திரும்பியபோது', ப.290

74. மேலது, '4 ஆவது வழி', ப.312

76. மேலது, '4 ஆவது வழி', ப.312

77. மேலது, 'மிருகம்', ப.595

78. மேலது, 'அப்பாவுக்குத் தெரியும்', ப.633

79. மேலது, 'ஒரு வித்யாவின் கதை', ப.673

# 4. உத்திகள்

ஓர் இலக்கிய படைப்பின் வெற்றிக்கும் தன்மைக்கும் அடிப்படையாக விளங்குவது அப்படைப்புக்குள் கட்டமைக்கப்படும் இலக்கியக் கூறுகள் ஆகும். பல்வேறு வகையான வாழ்க்கை அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டது படைப்பிலக்கியம். இலக்கியம் படைக்கும் ஆசிரியர் தமது வாழ்க்கை அனுபவங்களைக் கொண்டு கலையுணர்வு ஊட்டுகிறார். தமது கலையுணர்வில் தோன்றிய கலைப்படைப்பைப் படிப்பவர் மனம் கொள்ளும் வகையில் பல்வேறு வகையான கலைத்திறன்களைக் கொண்டு படைக்கின்றார். இவ்வாறு அமைக்கப்படும் கலைத்திறன்கள் அல்லது செயல் திறனே ‘உத்தி’ என்று அழைக்கப்படுகிறது. பிரபஞ்சன் தனது சிறுகதைப் படைப்புகளில் கையாண்ட உத்திமுறைகள் விளக்கப்படுகின்றது.

**உத்தி விளக்கம்**

உத்தி பற்றிய எண்ணம் காலப் பழமையுடையது ‘உத்தி’ என்னும் சொல் தொல்காப்பியம் முதலே ஆளப்பட்டு வந்துள்ளது.

“ஒத்த காட்சி உத்தி வகை விரிப்பின்
நுதலிய தறிதல் முறையே
தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந்நிறுத்தல்
மொழிந்த பொருளோ டொன்ற வைத்தல்
சொல்லிய அல்ல பிற அவண் வரினும்”[1]

எனத் தொல்காப்பியர் உத்தியின் அணுகுமுறையைக் கூறியுள்ளார். ‘நன்னூலாகும்’ முப்பத்திரெண்டு உத்திகளை வகைப்படுத்தியுள்ளார். இதனை,

"நுதலிதப் புகுதல் ஒத்துமுறை வைப்பே,

தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்

……………………………………………

……………………………………………

உய்த்து உணர வைப்பு என உத்தி எண் நான்கே"[2]

என்பதிலிருந்து அறியலாம். மேற்கண்ட நூற்பாக்கள், நூல் செய்யும் போது கவனிக்க வேண்டிய விதிமுறைகளை விளக்குகின்றன. இவ்விதிமுறைகள் படைப்பிலக்கியத்திற்கும் பொருந்தி வரும் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு கலைப் படைப்பை உருவாக்குவதற்குப் படைப்பாளன் தம் படைப்பில் கையாளும் நுண்ணிய அணுகுமுறைகள் கொண்ட கலைத்திறன்கள் உத்தி என்று அழைக்கப்படுகின்றன. இதனை,

"தம்முடைய படைப்புகள் கலைப் பெட்டமாகப் பொலிவுறுவதற்குப் படைப்பு இலக்கிய ஆசிரியன் சில நெறிமுறைகளைக் கையாளுகிறான். இவற்றைக் 'கலைத்திறன்' என்னும் பொதுப் பெயரால் சுட்டுவது மரபு. 'உத்திகள்' (Technique) எனக் குறிப்பிடுவதும் வழக்கம். படைப்புகளின் வெற்றிக்கும் தோல்விக்கும் இக்கலைத் திறன்களே காரணமாக அமைகின்றன"[3] என்பதிலிருந்து அறியலாம். இதன்மூலம் படைப்பாளன் தனது படைப்பைத் தம் கற்பனை மூலம் செழுமைப்படுத்துவதற்கு இந்த உத்திகளையே முழுமையாகப் பயன்படுத்துகிறார் என்பது புலனாகிறது. இவ்வுத்திகள் காலத்திற்கேற்ப மாறுபடக் கூடியவை. சமுதாயத்திற்கேற்ப படைப்பும் மாறக்கூடிய ஒன்று. இதனை,

"காலந்தோறும் சமுதாயத்தில் அரும்பும் அரசியல், பொருளியல், சமூகப் பண்பாட்டு, ஆன்மீக இயக்கங்கள் இலக்கியப் படைப்பின் நோக்கையும் போக்கையும் பாதிக்கின்றன. இதனால் அவற்றில் மாற்றங்களும்

வேறுபாடுகளும் உண்டாகின்றன"[4] இக்கருத்தின் வழி காலந்தோறும் படைப்புகளில் நோக்கும், போக்கும் மாறும் என்பதை அறியமுடிகிறது.

உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டு முறையே உத்தியாகும். "ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்கும், பயன் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படுகிறது"[5] என்கிறார் சி.இ.மறைமலை.

"உத்தி என்பது தான் கூற வந்த செய்தியில் உள்ள பக்கத்தை வெளிப்படுத்தும் முறையே"[6] என்கிறார் ந.பிச்சமுத்து.

"ஒருவர் ஒன்றைச் செய்யும் போது பயன்படுத்தும் தொழிற்கலை நுட்பக் கூறுகளே உத்தி என்கிறோம்"[7] என்கிறார் க.செல்லப்பன்.

மேற்கண்ட கருத்துக்கள் யாவும் படைப்பாளனின் வெளிப்படுத்தும் திறனைப் பற்றியே பேசுகின்றன. ஆகவே ஒரு படைப்பாளன் தனது படைப்பை வெளிப்படுத்தக்கூடிய நுட்பமான கூறுகளே 'உத்திகள்' என்பது இங்கும் தெளிவாகின்றது. இங்ஙனம் அமையும் உத்திமுறைகளைச் சிறப்பாகப் பயன்படுத்தி இலக்கியம் படைக்கும் போது அவ் இலக்கியம் செம்மையானதாகவும், ஆழமானதாகவும், அழுத்தமாகவும் அமைகின்றது.

**சிறுகதையில் உத்திகள்**

சிறுகதை என்பது கதைமாந்தர் ஒருவரின் பண்பு, அவரது ஏதேனும் ஓர் உணர்வுச் சுழிப்பு, ஒரு நிகழ்ச்சி, ஒரு குறிப்பிட்ட பின்னணி என்பவற்றுள் ஒன்றினை மட்டும் அடிப்படையாகக் கொள்ளும் கலை வடிவம் ஆகும்.

சிறுகதைக் கலை வடிவங்கள் அனைத்தும் மிகச் சிறிய சொற்களால் ஆழமான கருத்தைப் புலப்படுத்துதல் வேண்டும்.

அப்பொழுதுதான் சிறந்த கலைப்படைப்பு உருவாகும். படைப்பாளர் கதையின் தலைப்பு, தொடக்கம், முடிவு போன்ற ஒவ்வொரு நிலையிலும் மிகச்சிறிய சொற்களைப் பயன்படுத்தி ஆழமான கருத்தைப் புலப்படுத்த வேண்டும்.

சிறுகதையின் உள்ளடக்கமும் உத்திகளும் ஒரு கட்டிடத்தைத் தாங்கக்கூடிய அடித்தளம் போன்றவை. சிறுகதையில் கதைச் சிறப்பாக இருந்து அதன் உள்ளடக்கமும் கதையின் உத்திகளும் சரியாக அமையவில்லை என்றால் அக்கதை சிறப்படையாமல் போகும். எனவே, சிறுகதையின் சிறப்பிற்குக் காரணம் உள்ளடக்கமும் உத்திகளும் ஆகும்.

சிறுகதைகளில் கையாளப்படும் உத்திகள் பலவற்றுள் அனைத்து உத்திகளும் இடம்பெற வேண்டும் என்பதில்லை. அவற்றில் சில மிகுந்தும் குறைந்தும் அமையலாம். ஆனால், அவ்வுத்திகள் கதையின் கருப்பொருளைத் தழுவியே அமைய வேண்டும். இதனை,

"சிறுகதை ஆய்வில் பேசப்படும் ஒவ்வொரு கலைக்கூறும் கதையில் இடம்பெற வேண்டும் என்பதில்லை. ஒரு சில கூடியும் குறைந்தும் மாறியும் அமையலாம். ஆனால் கலைவடிவில் மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு கலைத்திறனும் கதையில் அடி நாதமாக ஒலிக்கும் கருப்பொருளினை விளக்கி எதிரொலி செய்யும் வண்ணமே எடுத்தாளப்படும்"[8] என்பதிலிருந்து அறியலாம்.

ஒரு படைப்பாளர் சிறுகதை படைக்கும் போது கவனிக்க வேண்டிய உத்திமுறைகளைத் தெளிவுற உணர்த்துகிறது. சிறுகதை ஆசிரியர் கலைத்திறன் எனப்படும் உத்திமுறைகளை அமைப்பதில் ஆழமான கவனம் செலுத்த வேண்டும். அப்பொழுதுதான் சிறுகதை கலை நயத்துடன் சிறப்புற அமையும் என்பதை அறியமுடிகின்றது.

## தொடக்கம் (Beginning)

சிறுகதையின் தொடக்கம் என்பது சிறப்பாக அமைய வேண்டிய ஒன்று. அது படிப்பவரைத் தூண்டும் வகையில் அமைதல் வேண்டும். சிறுகதையின் கருப்பொருளைப் பற்றி குறிப்பாகச் சொல்லி அதைப்பற்றி எண்ணத்தைத் தூண்டுவதாகத் தொடக்கம் அமைதல் வேண்டும். "ஓர் உணர்வு, ஒரு செயல், கதைமாந்தர் ஒருவரின் பண்புநலன்கள், ஒரு கருத்து என்ற எந்த ஒன்றின் வெளிப்பாடாகச் சிறுகதை அமைகின்றதோ அந்த ஒன்றைப் பற்றியதாகவே அதற்கு ஏற்ற முறையிலேயே சிறுகதை அமைகின்றது."[9] இதில் ஒரு சிறுகதையின் தொடக்கம் மேற்கண்ட ஏதேனும் ஒன்றின் வெளிப்பாடாக அமையவேண்டும் என்பதை உணரமுடிகிறது.

இதன்மூலம் ஒரு சிறுகதையின் தொடக்கம் கருப்பொருளை வெளிக்காட்ட வேண்டும் என்பதையும் உணரமுடிகிறது. பிரபஞ்சன் சிறுகதைகளில் தொடக்கங்கள் அமைந்துள்ள தன்மைகள் கொண்டு அவற்றை வர்ணனைத் தொடக்கம், உரையாடல் தொடக்கம், கூற்றுமுறைத் தொடக்கம், மனஓட்டம் பற்றிய குறிப்புடன் கூடிய தொடக்கம், மரபுநிலைத் தொடக்கம், அறிமுகத் தொடக்கம் என்ற வகைகளில் அமைக்கலாம்.

### வருணனைத் தொடக்கம்

"மொழி நடையின் முக்கியக் கூறு வருணனை. சிறுகதைகள் சிறப்புற அமைய வருணனை இன்றியமையாததாக உள்ளது. வருணனைகள் ஆசிரியரின் கவித்துவ ஆற்றலைக் காட்டுவதாகவும், சிறுகதையோடு பொருந்தியதாகவும், கற்பவருக்கு வியப்பூட்டும் முறையிலும் அமைந்திருக்க வேண்டும்"[10] என்பார் மா.இராமலிங்கம்.

இவர் கூற்றிற்கேற்ப பிரபஞ்சன் படைத்துள்ள சிறுகதைகளில் சில வருணனைகள் சிறுகதையின் தொடக்கத்தில் அமைந்துள்ளன. அவ்வருணனைகள் சிறுகதையில் இடம்பெறும் நிகழ்ச்சி அல்லது கருத்திற்குத் தொடர்புடையதாக அமைகின்றன.

"சிறுகதையில் இடம்பெறும் நிகழ்ச்சி அல்லது கருத்திற்குத் தொடர்புடைய ஒன்று பற்றிய வருணனையுடன் தொடங்கும் சிறுகதை, வருணனைமுறைத் தொடக்கச் சிறுகதையாகும்"[11] என்கிறார் க.த.திருநாவுக்கரசு.



பிரபஞ்சனின் சிறுகதைகளில் இடம், ஊர், காலம், செயல் மாந்தர் நிகழ்ச்சி பற்றிய வருணனையுடன் தொடங்கும் சிறுகதைகள் பல உள்ளன.

"நாங்கள் புது வீட்டிற்குக் குடிபோனோம் ஆச்சரியமாக வீட்டிற்கு முன்னால் கொஞ்சம் நிலம் வெறுமே இருந்தது. ஒரு நாலு முழ வேஷ்டியை விரித்தது போன்று கிடந்தது அது"[12] என்று தொடங்கும் 'பிரும்மம்' என்னும் சிறுகதையின் தொடக்கம் இடம் பற்றியதாக அமைகின்றது. வீட்டிற்கு முன்பு இருந்த இடத்தை வருணனை செய்திருப்பது சிறப்பு. இது இட வருணனையாக அமைகின்றது.

"எங்கள் ஊர் ரொம்பச் சின்ன ஊர். தீப்பெட்டி மாதிரி. முக்கியமான தெருக்களே நாலு தான். நாலில் நடுவாக இருப்பது காந்திவீதி"[13] என்று 'சூரியனைப் பார்க்காமல்...' என்னும் சிறுகதைத் தொடக்கம் ஊரைப் பற்றிய வருணனையாக அமைகின்றது. "காலை வெயில் சுள்ளென்று ஊசி குத்தியது"[14] என்று 'வரிசை' என்னும் சிறுகதையில் தொடங்கும் தொடக்கம் காலைநேரத்து வருணனையாக அமைகின்றது.

இதேபோல் 'விட்டு விடுதலை ஆகி...' என்னும் சிறுகதையில் "பனைமட்டையில் மழைபெய்தது மாதிரி கடந்த அறுபத்தைந்து நிமிஷங்களாகப் புரொபசர் பேசிக் கொண்டிருந்தார்"[15] என்று தொடங்குகின்றது. இத்தொடக்கம் பேராசிரியரின் செயல்பற்றிய தொடக்கமாக அமைகின்றது.

'பிரபு' என்னும் பாத்திரத்தைப் பற்றிய வருணனையுடன் 'காலம் இனிவரும்' என்னும் சிறுகதையின் தொடக்கம் அமைகின்றது. இதனை,

"பக்கத்தில், நீளமாய் ஒரு காலை மடக்கியும் ஒன்றை நீட்டியும், சற்றே வாய் பிளந்து, வெற்றிலைக் காவிநிறப் பற்கள் தெரிய, கைகளைப் பரப்பியவாறு படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த பிரபுவைப் பார்த்தாள் சத்யா, 'இரையுண்ட மலைப்பாம்பு படுத்துக் கிடப்பதுபோல' என அவள் மனதில் சட்டென்று உருவகம் ஒன்று தோன்றி மறைந்தது"[16] என்று தொடக்கம் அமைந்துள்ளது. இத்தொடக்கம் 'பிரபு' என்னும் பாத்திரத்தைப் பற்றி நகைச்சுவையாக அமைந்த வருணனையாகின்றது.

'நிகழ் உலகம்' என்னும் சிறுகதையில் கிருஷ்ணமூர்த்தி சிறையிலிருந்து விடுதலை செய்யப்படும் நிகழ்ச்சி வருணனையாகத் தொடக்கத்தில் அமைந்துள்ளது. இதனை

"கோயில் கதவு போன்றிருந்தது அந்தக் கதவு அதனினும் பெரியதாய் இருந்தது வெளிப்புறச் சுவர், சின்னப்பை மாதிரி இருந்தது அந்தச் சின்னவாசல், ஓர் ஆள் உள்ளே போகவும் வரவும் மாத்திரமே அதன் குறுகிய அமைப்பிருந்தது. காக்கி உடை அணிந்த கேசவன் பின்னே இருந்து சின்ன வாசலைத் திறக்க, முதலில் காலைத் தூக்கி வைத்துப் பிறகு உடம்பையும் தலையையும் வெளிக்கொணர்ந்து ஒரு வழியாக வெளியே

வீதிக்கு அனுப்பப்பட்டான் கிருஷ்ணமூர்த்தி"[17] இங்கு விடுதலை செய்யப்படும் காட்சி வர்ணனையாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

இவற்றைப்போலவே கடிதம் பற்றிய வருணனையுடன் தொடங்கும் சிறுகதையை "சுமதிக்கு ஒரு கடிதம்"[18] என்னும் சிறுகதையில் அமைத்துள்ளார் ஆசிரியர்.

மேற்கண்ட சிறுகதைகளின் தொடக்கம் கதை மாந்தரின் அறிமுக வருணனையாகவோ செயல், கதை நிகழும் இடம், காலம் பற்றிய வருணனையாக அமைவதால் நேரடியாகத் தொடங்கி கதையினுள் செல்லமுடிகின்றது. அத்தொடக்கங்கள் சுவைமிக்கவையாகவும் அமைகின்றது. படிப்பவருக்கு ஈர்ப்பை விழைவிக்கும் நோக்கில் இவ்வருணனைகள் அமைந்துள்ளதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

**உரையாடல் தொடக்கம்**

இவை நாடகம் போல் அமையவும் இவ்வகைத் தொடக்கம் உதவுகின்றது. "திடீரென்று இரு கதை மாந்தர்கள் பேசுவதாக அறிமுகஞ் செய்து பின் அது பற்றிய விளக்கம் வருவதாக அமையும் இவ்வகைத்திறன் படிப்பவரை அந்த நிகழ்ச்சியினுள் அழைத்துச்செல்ல உதவுகின்றது"[19] என்ற கருத்து உரையாடல் தொடக்கம் பற்றி விளக்கும். இதனை 'நெருப்பை பொட்டலம் கட்ட முடியாது' என்னும் சிறுகதையில்

"நட்ராஜ், ரெடியா?"

"ரெடி சார்"

"ஒருமுறை ஆர்க்கெஸ்ட்ராவோட சேர்ந்து பாடிடு.

அடுத்த 'டேக்' தான்"

"எஸ் சார்"

"சண்முகம் ஒரு 'பைனல்' பார்த்துடுவோமா?"

"பார்க்கலாம் சார்"[20]

என வரும் உரையாடல் தொடக்கத்தின் மூலம் அறியலாம். இதேபோல் உரையாடல் தொடக்கத்தை "ஆண்பிள்ளை"[21] "சினேகம்"[22] "மரி என்கிற ஆட்டுக்குட்டி"[23] போன்ற சிறுகதைகளிலும் காணமுடிகின்றது. இவை நாடகம் போல் அமைந்து படிப்பவருக்கு ஆர்வத்தை ஏற்படுத்துவதாகவும் அமைகின்றது. இவற்றின் மூலம் கதை மாந்தர்கள் உரையாடிக் கொண்டிருப்பது போன்று பிரபஞ்சனின் சிறுகதைகளில் சிலவற்றின் தொடக்கம் அமைந்து கதைக்கு சுவையூட்டுகின்றது.

**கூற்றுமுறைத் தொடக்கம்**

ஆசிரியர் கதை கூறும் நோக்குடன் அமையும் தொடக்கம் இவ்வகை ஆகும். இதனை "கதையின் கூற்றுமுறை எவ்வாறு அமைகின்றதோ அது பற்றிய குறிப்பாக அமைவதாகச் சிறுகதையின் தொடக்கம் அமைகிறது"[24] என்பதிலிருந்து அறியலாம்.

இங்கு ஆசிரியர் துணைமாந்தராக வந்து கதையில் பங்கு கொண்டு கதைக்குச் சிறப்பூட்டுவது தொடக்கமாக அமைகிறது. பிரபஞ்சன் சிறுகதைகளில் பெரும்பாலான சிறுகதைகளில் ஆசிரியரே கதையைக் கூறுவதாகத் தொடங்குகின்றது. இதனை 'பலி' என்னும் சிறுகதையில்

"மகாபாரத ஐயர் காபி விஷயத்தில் மகா ரஸிகராக இருந்தார். இது காரணமாகவே நான் அவரோடு சினேகம் ஆனேன்"[25] என்பதிலிருந்து ஆசிரியரே முன்னின்று கதை கூறுவதைக் காணமுடிகின்றது.

"நான் ஆறாம் வகுப்பு வந்தபோது, அப்பா எனக்குப் பேனா வாங்கிக் கொடுத்தார்"[26] என்று 'தட்சணை' என்னும் சிறுகதையைத் தொடங்குகின்றார்.

இதைப்போன்றே "விழுது"[27], "சூரியனைப் பார்க்கலாம்"[28], "மாமன் உறவு"[29], "அப்பாவு கணக்கில் 35 ரூபாய்"[30] என்னும் சிறுகதைகளில் ஆசிரியரே கதை கூறுவதாகத் தொடக்கம் அமையப்பெறுகின்றது.

இத்தொடக்கம் கதை கூறும் நோக்கு நிலையில் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது. புதுமையாகக் கூற்றுநிலையை எடுத்தாள்வதால் படிப்பவர்களுக்கு அது பற்றிக் கூறுவதாகத் தொடக்கம் அமைவது சிறப்பு.

**மன ஓட்டம் பற்றிய குறிப்புத் தொடக்கம்**

மன ஓட்டம் பற்றிய குறிப்புத் தொடக்கம் பிரபஞ்சன் சிறுகதைகளில் தொடக்கமாக அமைகின்றது.

"கதைமாந்தர் மன உணர்வு வெளிப்பாடாக அமையும் சிறுகதைகளின் தொடக்கமே மனநிலை அல்லது அதன் உணர்வு வெளிப்பாடாக அமைகின்றது"[31]

இக்கருத்தின் மூலம் சில சிறுகதைகளில் தொடக்கமே பாத்திரத்தின் மனநிலை அல்லது உணர்வு நிலையை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

இவ்வகைத் தொடக்கம் பிரபஞ்சன் சிறுகதைகளில் சில இடங்களில் காணப்படுகின்றது. இதனை 'பிம்பம்' என்னும் சிறுகதையில்

"கதவை தட்டும்சத்தம் கேட்பதும், தட்டுவது யார் என்று எனக்கும் துல்லியமாகவே விளங்கியது. அதுதான் இந்த நேரத்தில் இப்படியெல்லாம் வரும்"[32] என்பதிலிருந்து தன் மனசாட்சியுடன் பேசும் தொடக்கமாக அமைந்துள்ளது. இதுபோன்றே அம்மாவை பற்றி சிந்திக்கும் மகனை "அம்மா"[33] என்னும் சிறுகதையிலும், அண்ணன் ஏன் இப்படி மாறிப்போனான் எனச் சிந்திக்கும் தங்கையை "குரூரம்"[34] என்னும் சிறுகதையிலும், அப்பாவின்

கோபத்தினைப் பற்றி சிந்திக்கும் மகளை "மிருகம்"[35] என்னும் சிறுகதையிலும் மன ஓட்டம் பற்றிய குறிப்புத் தொடக்கம் அமைகின்றது. இவற்றின்வழி மன உணர்வு பற்றியே கதை அமைவதால் நேரடியாக அவ்வுணர்வு வெளிப்படும் முறையில் தொடக்கம் அமைய இவ்வகை கலைத்திறன் துணை செய்வதை அறியமுடிகின்றது. இவ்வகைத் தொடக்கம் மிகக் குறைவாகப் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**மரபு நிலைத் தொடக்கம்**

மரபும் மரபுவழி சார்ந்த பண்பாடும் மனிதன் குருதியோடு நிலைபெற்ற ஒன்றாகும். காலம் காலமாக மக்களால் பின்பற்றப்பட்டு வரும் பழக்க வழக்கங்களே மரபு எனப்படுகின்றது.

"மரபு என்பது முந்தையத் தலைமுறைகள் சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், அறிவு, முடிவு அனைத்தும் சேர்ந்தது. கால நீட்சியில் மானுட வர்க்கம் தன் அறிவுத் தோட்டத்தில் அனுபவத்திளைப்பில் உணர்ந்து தெளிந்து உருவாக்கிய முடிவுகள் அவை. வருங்காலத்திற்கென்று இலக்கியமாக, சமயமாக, அறநெறியாக பிற அறிவுத் துறைகளாக, முந்தையத் தலைமுறை விட்டுச்சென்ற அனுபவத்திரட்டுதான் மரபு. அறிவுத் தோட்டத்தில் கிடைத்த செல்வம் தான் மரபு"[36] என்கிறார் கவிஞர் பாலா.

சிறுகதை கூறுவதும் கேட்பதும் பழங்காலத்திலிருந்து தொடர்ந்து வரும் ஒன்று. 'ஒரே ஊரிலே' என்று மரபு வழியாகக் கூறும் முறையிலே கதையின் தொடக்கம் அமைவதுண்டு. அவ்வகையில் தொடங்கும் சிறுகதைத் தொடக்கம் மரபு நிலைத் தொடக்கம் எனப்படும். பிரபஞ்சன் சிறுகதைகளில் இவ்வகையில் அடங்கும் சிறுகதைகள் மிகச் சில. அவ்வகையில் ஒன்றை மட்டும் நாம் காணமுடிகிறது.

“ஒரு விமர்சையான மதியச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வாசலைப் பார்த்து தூணில் முதுகைச் சாய்த்தவாறு உட்கார்ந்து சுருட்டுப் பிடித்துக் கொண்டிருந்தார் அப்பா”[37] என்பதிலிருந்து ஒரு ஊரிலே, ஒரு நாள், ஒரு ஊரில் ஒரு ராஜா போன்று பழங்காலத்தில் சொல்லும் கதை முறையில் தொடக்கம் அமைந்துள்ளது. இவ்ஆய்விற்கு உட்பட்ட வேறு எந்த சிறுகதைகளிலும் இந்த மரபுநிலைத் தொடக்கத்தைக் காணமுடியவில்லை. ஆசிரியரே கதை கூறுவது போல அமைந்த சிறுகதைகளைப் பல இடங்களில் கண்டாலும், ஒரு ஊரில் ஒரு ராஜா..., போன்ற அக்காலக் கதை கூறும் மரபுப்படி அமைந்த தொடக்கத்தை பயன்படுத்தவில்லை எனலாம்.

**அறிமுகத் தொடக்கம்**

கதையில் அமைந்த சிக்கல், ஒரு நிகழ்ச்சி, இடம், மாந்தர் இவைகளை அறிமுகம் செய்வதாக அமையும் தொடக்கம் அறிமுகத் தொடக்கம்.

இதனை “கதையில் கூறப்படும் சிக்கல் பற்றியோ, கதை நிகழ்ச்சி பற்றியோ, கதை மாந்தர் பற்றியோ அறிமுகம் செய்வதாக அமையும் தொடக்கம் இவ்வகையில் அடங்கும்”[38] என்பதிலிருநது அறியலாம்.

“பொற்றாமரைக் குளத்துப் படித்துறையில் அமர்ந்திருந்தார் கீரர்”[39] என்னும் தொடக்கம் செயல் நிகழ்ந்த இடத்தைப்பற்றி அறிமுகம் செய்யும் வகையில் அமைந்துள்ளது. இதில் இக்கதை நிகழ்ந்த இடம் பொற்றாமரைக் குளம் என்பதைத் தொடக்கம் புலப்படுத்துகின்றது. இதேபோல் வகுப்பறையில் நடக்கும் நிகழ்வை அறிமுகம் செய்யும் வகையில் ‘காயம்பட்ட மாலை வானம்’ என்னும் சிறுகதையும் ‘கதாநாயகி குளித்த கதை’ என்னும் சிறுகதையில் ஒரு படம் பிடிக்கும் தளத்தில் நடக்கும் செயலை அறிமுகம் செய்து கதை இதைப்பற்றி தான் சொல்லப் போகின்றது என்பதை

அறிமுகம் செய்யும் வகையில் "ஐந்து நாட்கள் மிகக் கடுமையாகப் பாடுபட்டு அந்த 'சீனை' எடுத்து முடித்தோம்"[40] என்னும் தொடக்கமும் அமைகின்றது. இது கதையில் நடந்த செயலை அறிமுகப்படுத்துவதுடன் படிப்பவரின் ஆர்வத்தை தூண்டும் வண்ணம் அமைந்துள்ளது. "கண்காட்சியில் நேற்று மணியைப் பார்க்க நேர்ந்தது மணி என்றால் மனோன்மணி"[41] என்னும் தொடக்கம் பாத்திரத்தினை அறிமுகம் செய்யும் வகையில் அமைந்துள்ளது. இதேபோல் செண்பகராஜலெட்சுமி என்னும் பாத்திரத்தை அறிமுகம் செய்யும் வகையில் 'வாசனை' என்னும் சிறுகதை அமைகின்றது. இதனை,

"செண்பக ராசலெட்சுமிக்கும் ஜனவரி பிறந்தால் முப்பத்தாறு வயது நிரம்பிவிடும். அரசு நிர்வாகத்தில் இருக்கும் ஒரு கல்லூரியில் ஒரு துறைத்தலைவராக வேலை பார்க்கிறாள். நிறைந்த சம்பளம் தான். இந்தியா போன்ற நாட்டில் அந்தச் சம்பளம், பெரிய தொகை தான். அவளிடம் கலர் டிவி, மற்றும் வி.சி.ஆர்., ஒரு குட்டி ஃபிரிஜ் முதலான சகல வஸ்துக்களும் இருக்கின்றன"[42] என்ற தொடக்கத்தின் மூலம் அறியலாம்.

மேற்கண்டவற்றின் வழி சிறுகதையின் தொடக்கம் இப்படித்தான் அமைதல் வேண்டும் என்று வரையறுத்துவிட முடியாது என்பதையும் கதையின் கருப்பொருள், வடிவம் ஆகியவற்றிற்கு ஏற்றவகையில் படைப்பாசிரியர் கையாளும் தொடக்கமே சிறப்பானதாக அமையும் என்பதையும் அறிய முடிகின்றது. அவ்வகையில் பிரபஞ்சனின் சிறுகதைத் தொடக்கங்கள் சிறுகதையில் அமைந்த சிக்கல்களைப் பற்றிப் படிப்பவரைச் சிந்திக்க வைப்பதாகவும் எளிய சொற்களால் ஆழமான பொருள் தரும் முறையில் விளங்குவதாகவும் அமைந்துள்ளது.

**முடிவு (End)**

படிப்பவரின் எண்ணத்தை மேலும் தூண்டும் வகையில் சிறுகதை முடிவு அமைய வேண்டும். மேலும் சிறுகதைப் பற்றி சிந்திக்க வைக்க வேண்டும். யாரும் எதிர்பாராத முடிவை அமைத்தல் வேண்டும். இதுபோன்று அமையும் சிறுகதை முடிவுகள் சிறப்புடையனவாக அமையும். அம்முடிவு அனைவராலும் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்து மனநிறைவையும் அளிக்கும் விதத்தில் அமைய வேண்டும். இதனை,

"கதையில் எழுதப்பட்ட சிக்கலைப் பற்றியோ, கதைமாந்தர் பண்பு பற்றியோ, கதைப்பொருள் பற்றியோ, எழுப்பிய உணர்வு பற்றியோ மேன்மேலும் சிந்திக்க தூண்டுவதாகக் கதையின் முடிவு அமைந்தால் அது சிறப்பானது. அதனால் தான் மனதில் நிற்கும் முடிவு ஒரு நல்ல சிறுகதையின் அங்கம் என்பர் திறனாய்வறிஞர்"[43] சிறுகதைகளின் முடிவு படிப்பவரின் உள்ளம் பூரிக்கும் வகையிலும் முடிவு சுருக்கமாகவும் பொருட்செறிவும் கொண்டதாக அமையவேண்டும். இவ்வகையில் பிரபஞ்சன் தனது சிறுகதையில் அமைத்துள்ள முடிவுகள் படிப்போரைச் சிந்திக்க வைக்கிறது. கதை முடிந்த பின்பும் கதை பற்றி மேலும் சிந்திக்கத் தூண்டுவதாகவும் அமைகின்றது.

**செயல் பற்றிய கூற்றுடன் முடிவு**

சிறுகதையின் முடிவில் சிறுகதையின் இறுதிநிலை வெளிப்படுத்தும் செயலை முடிவாகக் கொண்ட சிறுகதைகளைப் பிரபஞ்சன் சிறுகதைகளில் காணலாம்.

"துண்டாகி நின்றிருந்த மரத்திலிருந்து ஓர் இடத்தில் சின்னதாய் கிளைத்திருந்தது உயிர்தான்"[44] என்று கதையின் உச்சத்தை ஆசிரியர் இறுதியில் வடித்துள்ளதை அறியமுடிகின்றது. இங்கு கிளைத்தல் செயலைச் செய்த முருங்கை மரத்தின் செயல் வெளிப்படுகின்றது.

“எதிர்த் திசையில் மெல்ல நடக்க ஆரம்பித்தான்”[45] என்னும் வரியில் காட்டப்படும் செயல் முடிவு சிறுகதையைப் பற்றி மேலும் சிந்திக்கத் தூண்டும் வகையில் அமைந்துள்ளதை உணரமுடிகின்றது. பிரபஞ்சன் சிறுகதைகள் பல இத்தகைய முடிவுடன் அமைந்துள்ளது. கதையில் நிகழும் நிகழ்வைக் கூறினாலும் இது சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. பிரபஞ்சனின் இம்முடிவுகள் படிப்போருக்குப் படித்து முடித்த பின்பும் அச்சிறுகதைக் காட்சிகளின் தொடர்ச்சி பற்றிய எண்ணத்தை வளர்க்கும் விதமாக அமைகின்றன.

**கதை மாந்தர் கூற்றுடன் முடிவு**

சிறுகதையில் இடம்பெறும் கதாபாத்திரத்தின் கூற்றுடன் முடிவதாகச் சிறுகதைகள் அமைகின்றன. படிப்பவரைச் சிந்திக்க வைக்கும் ஆற்றலுடன் இவ்வகை முடிவு இலங்குகின்றது. கதைக் கருப்பொருளிற்கு அழுத்தம் தருவதற்கு இது உதவுகின்றது.

“கதையினை எந்த நோக்கு நிலையில் (Point of view) நின்று எவ்வகையான கூற்றில் ஆசிரியர் கதையை முடிக்கின்றாரோ அதைக் ‘கூற்றுநிலை முடிவு’ என்பர்”[46]

பிரபஞ்சனுடைய சிறுகதைகளில் ஆசிரியரே, ஒரு கதைப் பாத்திரமாக பல சிறுகதைகளில் அமைந்துள்ளார். இங்கு கதாபாத்திரங்கள் பேசுவதாக அமைந்த முடிவுகள் பல சிறுகதைகளில் அமைந்துள்ளது. அவை ‘தன்மைக்கூற்று நிலையாகவும்’ ‘படர்க்கைக் கூற்று நோக்கு நிலையாகவும்’ அமைந்துள்ளது. ஒரு சில இடங்களில் ‘முன்னிலைக் கூற்றுநிலையில்’ சிறுகதை முடிவு அமைந்துள்ளது.

“நான் சுமைகளைக் களைந்து போட்டு குளிப்பதற்காகப் போனேன். சூரியன் அஸ்தமனமாகிப் போனான் உலகம் சுகமாகிறது...”[47] என்னும் கூற்று

முடிவு வாழ்க்கையில் அன்றாடம் ஏற்படும் சலிப்புகளைச் சகித்துக் கொண்டால் வாழ்வு சுகமாகும் என்ற கருத்தை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது.

"என்னதான் ஆனாலும் அம்மாவும் மனுஷிதானே"[48] என்ற கூற்று மகனுடையதாக அமைகின்றது. அரக்க குணம் கொண்ட மனிதனிடத்தில் சில நேரங்களில் மனிதம் வெளிப்படும் என்பதை வெளிப்படுத்தும் வகையில் இம்முடிவு அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

இவை தன்மைக் கூற்றுநிலையில் அமைந்த முடிவுகளாக அமைகின்றது. 'சங்கம்' என்னும் சிறுகதையில் "சௌகரியமாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு யூனியன் செக்ரட்ரி பெண்களைப் பற்றிக் கற்பனை பண்ண ஆரம்பித்தான் அவன். வெயில் இல்லை"[49] என்று முடிவு அமைகின்றது. இக்கூற்று படர்க்கை நிலையில் அமைந்துள்ளது.

'அபஸ்வரம்' என்னும் சிறுகதையில் "நல்ல சங்கீதத்துல ஒரு அபஸ்வரம் விழுந்துவிட்ட மாதிரி, எங்க சிநேகிதத்துல ஒரு சின்ன விரிசல் ஏற்பட்டிடுச்சேன்னுதான் வருத்தம்... அதனால் என்ன? இருட்டுவந்தா பகலும் வரும்தானே? சுந்தரேசனை நான் கேட்டதா சொல்லு..."[50] என்றார் அப்பா என்னும் முடிவு முன்னிலைக் கூற்றாக அமைந்துள்ளது.

ஆசிரியர் அமைத்த இம்முடிவு வரிகள் படிப்பவரைச் சிந்திக்கச் செய்யும் ஆற்றலுடன் திகழ்கின்றன. இதுபோலவே 'குழந்தைகள்' என்னும் சிறுகதையில் "சங்கீதம் பெருசுதான் அதைவிட மனுஷன் ரொம்ப பெரியவனா இருக்கானே, அதனாலேதான்"[51] என்று வைத்தி கூறுகின்றான். இக்கூற்று முன்னிலையில் அமைந்துள்ளது. இவ்வாறாகப் பாத்திரங்களின் கூற்றுடன் முடியும் முடிவுகளைப் பிரபஞ்சன் சிறுகதைகளில் பல இடங்களில் அமைத்துச் சிறுகதைக்கு வழுச்சேர்ந்துள்ளார்.

**ஆசிரியர் கூற்றுடன் முடிவு**

உணர்வை வெளிப்படுத்தும் கதையிலும் கருப்பொருள் புலப்படுத்தும் கதையிலும் கதையாசிரியர் நேரடியாகவோ உவமையாகவோ கூறுவதாக அமையும் சிறுகதைகளைப் பிரபஞ்சன் சிறுகதைகளில் காணலாம். இதனை, 'கருணையில் தான்' என்னும் சிறுகதையில் "ஒரு சிறுவனைக் காப்பாற்றிவிட்ட நிம்மதி தேவாவுக்கு. மனம் மட்டும் அழுது கொண்டிருந்தது"[52] என்ற முடிவிலிருந்து அறியலாம். இம்முடிவு யதார்த்தத்தையும் பாத்திரத்தின் மனநிலையையும் வெளிப்படுத்தும் விதத்தில் அமைந்துள்ளது. இதைப்போன்றே "ராஜா ஆடிப்போனான் அவன் எதிர் பார்த்தது வேறு. அப்பா அழுகிறார்? அவர் அழுதத‌ைப் பார்க்க வயிறு சுருட்டி இழுத்தது அவனுக்கு பொறியில் அடி விழுந்தது மாதிரி இருந்தது"[53] என்னும் சிறுகதை முடிவை ஆசிரியர் தனது கருத்தைப் புலப்படுத்துமாறு முடிவு அமைத்து படிப்பவரைச் சிந்திக்க வைத்துள்ளார்.

"பட்டு ரோஜா, குழந்தையின் கண்ணங்களைப் போல எவ்வளவு அழகாகப் பூக்கிறது! குடிக்கும் தண்ணீரில் துளசி எப்படி மணக்கிறது"[54] என்னும் முடிவு உவமையையும் வைத்து முடித்துள்ளார். இவற்றிலிருந்து ஆசிரியர் கூற்றுடன் முடியும் கதையின் முடிவு வரி படிப்பவரைச் சிந்திக்கச் செய்யும் ஆற்றலுடன் விளங்குவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

மேற்கண்டவற்றின் வழி சிறுகதைக் கலை வடிவத்தில், கதையின் கலைத்திறன் கருப்பொருள்களாக அமையும் உள்ளடக்கம், கதை பிறந்த தன்மை என்ற இவைகளுக்கு ஏற்றவாறு சிறுகதையின் முடிவைப் பிரபஞ்சன் படைத்திருக்கிறார். சிறுகதையைப் பற்றி மேலும் சிந்திக்கும் வகையிலும் சிறுகதையின் முடிவுகள் அமைந்துள்ளதையும் அறியமுடிகின்றது. பெரும்பாலான கதைகளில் ஆசிரியர் கூற்றாக அமைந்த முடிவுகளைக்

காணமுடிகின்றது. பிற இடங்களில் கதாபாத்திரம் கூறும் கூற்றாகவும் இரண்டு இடங்களில் உவமையையும் கொண்டு சிறுகதை முடிவுகள் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

**தலைப்புக்கள்**

ஒரு சிறுகதையின் வெற்றிக்கு வழி வகுக்கும் கலைத்திறன் தலைப்பாகும் படிப்பவரின் எண்ணத்தைத் தூண்டும் வகையிலும் தலைப்பு அமைய வேண்டும். "கற்போரது ஆர்வத்தைத் தூண்டுவதற்கு கதையைப் படிக்கும் விருப்பம் எழுவதற்கு உதவுகின்ற முதற்கருவி தலைப்புத்தான்"[55] என்ற கருத்தின்வழி அறியமுடிகின்றது. மேலும் எதைச் சுற்றிக்கதை செல்ல இருக்கிறது என்பதை வெளியிடக்கூடிய கருவியாகவும் தலைப்பு அமைகின்றது.

சிறுகதை என்பது ஒரு அரிய வேலைப்பாடு ஆகும். இதனை, "சிறுகதை சின்னஞ்சிறு குங்குமச் சிமிழில் செய்யும் வேலைப்பாடு என்பார் அகிலன். அந்த அழகிய வேலைப்பாட்டில் அரிய திறன் அக்கதையின் தலைப்பின் வாயிலாக வெளிப்படும்"[56] என்னும் கருத்தின்வழி அறிய முடிகின்றது. எனவே சிறுகதைத் தலைப்பு என்பது கதையில் இன்றியமையாத கலைத்திறனை வெளிப்படுத்தும் ஆற்றல் மிக்கதாக விளங்கும் கருவி ஆகும்.

**கதைமாந்தர் பெயரைத் தலைப்பாக அமைத்தல்**

"சிறுகதைகள் பொதுவாக ஒரு பாத்திரத்தின் பண்பையோ, அவர் வாழ்க்கையின் முதன்மையான நிகழ்ச்சியையோ சுற்றிச் சுழலுமானால் அப்பாத்திரத்தின் பெயரே தலைப்பாக இடப்படும்"[57] என்கிறார் க.த.திருநாவுக்கரசு.

அப்பாவு என்பவருடன் தான் பேருந்தில் பயணம் செய்தபொழுது ஏற்பட்ட அனுபவ நிகழ்ச்சிகளை ஆசிரியரே தலைமைக் கதாபாத்திரமாக அமைந்து கதையைச் சொல்கின்றார். இச்சிறுகதை 'அப்பாவு கணக்கில் 35 ரூபாய்' என்னும் தலைப்பாக அமைந்துள்ளது.

மரியாள் என்ற பெண்ணைப் பற்றியே சிறுகதை நகர்ந்து செல்வதால் அவளின் பெயரைக் கொண்டு 'மரி என்கிற ஆட்டுக்குட்டி' என்று தலைப்பு அமைந்துள்ளது. இதேபோலவே 'அரி என்கிற நண்பன்', 'சுமதிக்கு ஒரு கடிதம்', 'கேசவன் கல்யாணத்தின் போது', 'ஒரு வித்யாவின் கதை', 'பாப்பா', 'குமாரசாமியின் பகல் பொழுது' போன்ற சிறுகதைகள் கதைமாந்தர் பெயரால் பெயர் பெற்றவையாக அமைகின்றது. இதன்வழி மேற்கண்ட கதாபாத்திரங்களைச் சுற்றியே கதை நிகழ்ச்சி நிகழ்வதால் பாத்திரத்தின் பெயரே தலைப்பாக அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

கதைமாந்தரின் இயற்பெயர் மட்டுமின்றி அவருக்கென்று அமைந்த வேறு பெயர்களும் தலைப்பாக அமையும் உதாரணமாக உறவுப் பெயர்கள், தொழிலால் அமைந்த பெயர்கள், இனப்பெயர், காரணப் பெயர்கள் ஆகியனவும் தலைப்பாக அமையும். அவ்வகையில் 'அம்மா', 'மாமன் உறவு', 'அப்பாவின் வேஷ்டி', 'தந்தையும் மகனும்', 'குழந்தைகள்', 'மாமன் வரவு', 'அப்பாவுக்குத் தெரியும்' போன்ற சிறுகதைகள் உறவுகளின் பெயரைத் தலைப்பாகக் கொண்டு அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

கதையின் நிகழ்ச்சி இருவரைச் சுற்றி நிகழ்ந்தால் அந்த இருவரின் பெயரே தலைப்பாக நிகழும். உதாரணமாக கிருஷ்ணமூர்த்திக்கும் கோபாலுக்கும் இடையில் நிகழும் சிக்கல் பற்றியே கதை நிகழ்கின்றது. 'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்' என்னும் சிறுகதை. எனவே இந்த

இருபாத்திரத்தையும் சேர்த்துத் தலைப்பாக அமைத்துள்ளார் ஆசிரியர். அதைப்போன்றே ‘தந்தையும் மகனும்’ என்னும் சிறுகதையும் தந்தைக்கும், மகனுக்கும் உள்ள சிக்கல்களைச் சுற்றியே நிகழ்வதால் இப்பெயர் அமைந்திருப்பதை உணரமுடிகின்றது.

இங்ஙனம் அமைந்த சிறுகதைத் தலைப்புகள் ஆசிரியரின் தனித்திறமையை வெளிப்படுத்துகின்றது. இத்தலைப்புக்கள் பிரபஞ்சனின் கலைவுணர்வை வெளிப்படுத்தி நிற்கின்றன. இவை எதைச்சுற்றி கதை சொல்லப்படுகின்றது என்பதை எளிதில் புரிந்துகொள்ள உதவுகின்றது.

இதேபோல் முடிவெட்டிக்கொள்ளும் போதெல்லாம் சின்னப்பையன் மாதிரித் தோற்றமளிக்கும் கிருஷ்ணமூர்த்தி மற்றவர்களுக்குக் கேலிப் பொருளாக மாறுகின்றான். இக்காரணத்தால் ‘ராட்சஸக் குழந்தை’ என்னும் பெயர் பெற்று அமைகின்றது இச்சிறுகதை. தனக்கு வந்த உதவித் தொகையைத் தியாகம் செய்யும் சிவபாதசுந்தரத்தின் தியாக மனப்பான்மையே ‘தியாகி’ என்னும் கதைத் தலைப்பாக அமைகின்றது. இத்தலைப்புக்கள் காரணப் பெயர்களாக அமைகின்றது. இங்ஙனம் அமையும் சிறுகதைத் தலைப்புக்கள் ஆசிரியரின் ஆழமான கலைப்பண்பை வெளியிடுவதாக அமைகின்றது.

**குறியீடாக அமைந்த தலைப்புக்கள்**

ஆசிரியர் தமது கருத்தை நேரடியாகக் கூறாமல் வேறுவகையில் மறைமுகமாகக் கூறுவதுண்டு. இதனைத் தலைப்பிலும் ஆசிரியர் கையாள்வதே குறியீட்டுத் தலைப்பு ஆகும்.

ஏதேனும் ஓர் ஒற்றுமை காரணமாக ஒரு பொருள் இன்னொரு பொருளைக் குறிப்பது ‘குறியீடு’ எனப்படுகின்றது. குறியீடு என்பது

"ஏதேனும் ஒன்று பிறிதொன்றை உட்கருத்தாய் உணர்த்துவது"[58] என்று தமிழண்ணல் கூறுகிறார்.

"சிறுகதை ஆசிரியர் பெரும்பாலும் தாம் நேரடியாக எதனையும் வெளிப்படுத்திப் பேசுவதில்லை; கூற வேண்டிய கருத்தை நேரடியாக இன்று வேறு வகையில் கூறுவதையே ஒவ்வொரு பகுதியிலும் கையாள்வர். தலைப்பிலும் இத்தன்மை புலப்படுவதை நாம் அறியலாம்"[59]

இந்த வகையில் பிரபஞ்சன் சிறுகதைகளுள் 'பிரும்மம்' ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றது. உயிர்களைப் படைப்பவன் பிரம்மா. உயிர் உருவாவதற்கான உயிர்ச்சத்தைக் கொண்டிருப்பது முருங்கை. எனவே முருங்கை மரத்திற்குக் குறியீடாக 'பிரும்மம்' எனப்பெயரிட்டு அதனையே தலைப்பாக வைத்துள்ளார் ஆசிரியர். இதனையே தனது சிறுகதையிலும் உணர்த்துகின்றார்.

"வாத்தியார் ஒரு நாள் முருங்கையை பிரும்ம விருட்சம் என்றார். முருங்கையின் மேல் தோல், காய், கீரை முதலானவை மனுஷ இன விருத்திக்குக் காரணமாகிய புணர்ச்சிக்குத் தீவிர உந்துதலும் உரமும் தருவதால் அது சிருஷ்டிக்கு உதவுவதாகிறது. பிரம்மனும் சிருஷ்டிபரமான காரியங்களிலேயே இருப்பதால் அது பிரும்ம விருட்சம் என்றாகிறது என்றார்"[60] என்பதிலிருந்து அறியலாம்.

இங்ஙனம் உயர் சிருஷ்டிக்கு உதவும் முருங்கை மரத்திற்கு 'பிரும்மம்' என்ற பெயர் குறியீடாக அமைந்ததை அறியமுடிகின்றது. கதையின் கரு முருங்கை மரத்தைச் சுற்றியே நிகழ்வதால் முருங்கையை ஒரு கதாபாத்திரமாகப் படைத்துள்ளது ஆசிரியரின் கலை நுட்பத்தினை வெளிப்படுத்துகின்றது. இதேபோல் குடும்பத்தைப் பாதுகாக்கப்போகும் பிள்ளைகளை 'விழுது' என்று குறிப்பிடுகிறார்.

"நாங்கள் தான் விழுதுகள் இந்தக் குடும்ப ஆலமரத்தைத் தாங்கப் போகிறவர்கள்"[61] என்பதிலிருந்து அறியலாம்.

இச்சிறுகதையில் தந்தை தன் பிள்ளைகள் தன் குடும்பத்தைத் தாங்குவர் எனக் கனவில் மிதக்கிறார் வயதான தந்தை. பிள்ளைகள் பொறுப்பற்று இருக்கின்றனர். இந்த விழுதுகள் குடும்பத்தைத் தாங்கப் போவதில்லை என்பதைச் சிறுகதை விளக்குகின்றது. ஆனால் அப்பா தன் குழந்தைகளைக் குடும்பத்தைத் தாங்கும் விழுதாக நினைக்கின்றார். இதனைக் குறியீடாகக் கொண்டே 'விழுது' என்னும் தலைப்பை அமைத்துள்ளார் ஆசிரியர்.

இங்குச் சிறுகதையில் கருத்தைக் குறியீட்டால் உணர்த்துவதாகத் தலைப்பு அமைந்திருக்கிறது. இதனைப் போன்றே பல தலைப்புகளைப் பிரபஞ்சன் குறியீடாகவே அமைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**கவிதைத் தொடர் தலைப்பாக அமைத்தல்**

கவிதைத் தொடர்களைச் சிறுகதையின் தலைப்பாக்கும் போக்கு பிரபஞ்சனிடம் காணப்படுகின்றது. கவிதைத் தொடர்களைத் தலைப்பாகக் கொடுக்கும்போது அத்தொடரின் முழுமையையும் கொடுக்காமல், ஒரு பகுதியை மட்டும் கொடுக்கின்றார்.

"படிப்பவரைச் சிந்திக்கத் தூண்டுவதுடன், பாடல் பழமொழி அடிகளைப் பற்றிய ஆர்வத்தினைத் தூண்டி அதுபோன்று கதையில் இடம்பெறப்போகிறதோ என்று எண்ணச் செய்வதாயும் அமையும்"[62] என்கிறார் சு.வேங்கடராமன்.

இவ்வகையில் தலைப்புகளில் கவிதை வரிகளை முழு அடியையும் தராமல் ஒரு பகுதியைத் தந்து படிப்பவரைச் சிந்திக்க வைப்பது ஆசிரியரின் திறனாகும். இதனை, 'காயம்பட்ட மாலை வானம்', 'விட்டுவிடுதலையாகி',

'சிறுமை கண்டு' என்னும் சிறுகதைத் தலைப்புகளின் வழி அறியலாம். இத்தலைப்புகள் படிப்பவரைச் சிந்திக்க வைப்பதாகவும் இவ்வடிகள் ஆர்வத்தை தூண்டுவதாகவும் அமைகின்றது. இத்தலைப்புக்கள் பாரதியாரின் கவிதை வரிகளில் இருந்து எடுத்தாளப்பட்டுள்ளதையும் உணர முடிகின்றது. இது பிரபஞ்சன், பாரதியார் கவிதை மீது கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகின்றது.

சிறுகதைக் கலை வடிவம் ஆழமான பயிற்சி மற்றும் கலைத் திறனைக் கொண்டுள்ளது. கதைத் தலைப்பு அமைப்பதும் கடினமான செயலாகும். பிரபஞ்சனைப் பொருத்தவரையில் நேரடியாகவும், மறைமுகமாகவும் கருத்து வெளிப்பாட்டைத் தலைப்பில் அமைக்கின்றார். சிறிய சொல்லாகவும், தொடராகவும் தலைப்புக்களை அமைப்பதால் படிப்பவரின் ஆர்வ நிலையைத் தூண்டுவதாகவும், சிந்திக்கச் செய்வதாகவும் தலைப்புக்கள் அமைக்கின்றார். அவர் சாதாரண மக்களின் வாழ்க்கையை மிக யதார்த்தமாகக் கலை நுட்பத்துடனும் பல்வேறு கண்ணோட்டங்களுடனும் கொண்டு சிறுகதையை அமைத்துத் தருகின்றார். அக்கலைவடிவின் ஒவ்வொரு பகுதியையும் மிகுந்த நுட்பத்துடன் அமைத்ததினால் தான் சிறுகதையின் வடிவம், கலைநயமும் கருத்து வளமும் பெற்று அமைந்துள்ளது. அதற்குச் சிறுகதைத் தலைப்பும் துணை செய்கின்றது.

**கதைக்கரு**

ஒரு கதையின் மையக் கருத்தைச் சுருக்கமாகவும் முழுமையாகவும் வெளியிடும் கூறு கதைக் கருவாகும். இது கதையின் உயிர்நாடி ஆகும்.

"கருவானது கதையின் முழுப்பொருளாகும் கருவே கதையின் கருத்து அல்லது செயல் நோக்கத்தைத் தருகின்றது. அதோடு கதை மாந்தரின்

எப்பண்புக் கூறுகள் வலியுறுத்தப்பெறல் வேண்டும் என்பதையும் உறுதி செய்கிறது"[63] என்பதிலிருந்து அறியலாம்.

சிறுகதையை எழுதக்கூடிய ஆசிரியன் படிப்போருக்கும் சமுதாயத்தினருக்கும் கூற விரும்புவதே கதைக்குரிய கருவாகிறது. கதைக்கரு சிறப்பாக அமைந்தால் தான் கதையும் சிறப்புற அமையும்.

"வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கி நுனித்தறிய வல்லார்க்குக் காண்பதும், கேட்பதும் கூட கதைக்குரிய கரு"[64] என்கிறார் மா.இராமலிங்கம்.

எந்த இலக்கியப் படைப்பும் ஏதோ ஒரு நோக்கத்துடன் ஒரு செய்தியைத் தெரிவிக்க உணர்த்தவே படைப்பாளி உந்தப்படுகிறான்.

இவ்வகையில் அமைந்த சிறுகதையின் கருக்கள் உண்மைக் காதலின் வெற்றி, தாயன்பு, நாட்டுப்பற்று, துன்ப நிலையிலும் மனந்தளராமை, ஆன்மீகம், தன்னலமின்மை, விடாமுயற்சி போன்றவற்றின் அடிப்படையாகக் கொண்டு அமைந்திருப்பது மரபு. இதனடிப்படையில் பிரபஞ்சனின் சிறுகதைக் கருக்கள் தாயன்பு, மனந்தளறாமை, இரக்கம், கருணை, நட்பு, நாட்டுப்பற்று, தியாகம் போன்றவற்றைக் கதைக் கருவாகப் படைத்துள்ளார்.

விதவைத் தாயைப் புரிந்து கொண்ட மகனின் அன்பையும், பாசத்தையும் 'அம்மா' என்னும் சிறுகதையிலும் வறுமைநிலையை 'அப்பாவு கணக்கில் 35 ரூபாய்' மனிதன் பிற மனிதனிடத்தில் கொண்டுள்ள மனிதநேயத்தைக் கருவாகக் கொண்டு 'ஆண் பிள்ளை', 'கருணையினால் தான்', 'மரி என்கிற ஆட்டுக்குட்டி' என்னும் சிறுகதைகளையும் நட்பைக் கருவாகக் கொண்டு 'அரி என்கிற நண்பன்', 'அபஸ்வரம்' என்னும் சிறுகதைகளும், தியாக மனப்பான்மை உணர்த்தும். 'தியாகி' என்னும் சிறுகதையும் காதலை மையப்படுத்தி 'முறிவு', 'வடு' என்னும் சிறுகதைகளும்

அமைந்துள்ளது. இவையனைத்தையும் சமுதாயத்தில் சாதாரண மக்களின் வாழ்வில் நிகழும் வாழ்க்கைச் சிக்கல்களைக் கருவாகக் கொண்டு அமைத்துள்ளார் ஆசிரியர். மேலும் இவற்றின் வழி சமுதாய நிலையினைப் படம் பிடித்துக் காட்டும் சமூகச் சிறுகதைகளாகவே உள்ளன என்பதையும் உணரமுடிகின்றது.

## கதைப்பின்னல் (Plot)

சிறுகதையில் நிகழ்ச்சிகள் அமையும் முறைக்கு கதைப்பின்னல் எனப்படும். இக்கதைப்பின்னல் கதைக்கரு, கதை நிகழ்ச்சி ஆகிய இரண்டையும் கதை மாந்தரைக் கொண்டு நிகழ்விப்பதற்குக் கதைப்பின்னல் என்று கூறப்படுகின்றது.

"கதைக்கருவும், கதைமாந்தரும் கதைப்பின்னலுக்கு ஊடும் பாவுமாக உள்ளன. நிகழ்ச்சிகளைக் கோவையாக்கி இடையறவுபடாமல் நடத்திச் செல்லும் இயல்புடையது. கதைப்பின்னல் இது நிகழ்ச்சிகளைக் காட்டிலும் முக்கியத்துவம் வாய்ந்தது"[65] என்னும் கருத்தின்வழி அறியமுடிகின்றது. இவ்வகையில் சிறுகதையின் கதைப்பின்னலில் போராட்டம் மையமாக அமைகின்றது.

"சிறுகதையின் கதைப்பின்னலில் அமையும் சிறப்புக்கூறு போராட்டம் (Conflict) ஆகும். போராட்டம் இருவகைப்படும் அவை புறப்போராட்டம், அகப்போராட்டம் என்பன"[66] என்பதிலிருந்து அறியலாம்.

இவ்வகையில் அமையும் போராட்டம் மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையேயான போராட்டம், மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையேயான போராட்டம், மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையேயான போராட்டம் என்பனவாகும். இவ்வகையில் பிரபஞ்சனின் சிறுகதைகளில்

கிருஷ்ணமூர்த்திக்கும் கோபாலுவிற்கும் இடையே நடக்கும் போராட்டமே 'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்' என்னும் சிறுகதை இதைப்போல் தந்தைக்கும் மகனுக்குமுள்ள போராட்ட உணர்வைத் 'தந்தையும் மகனும்' என்னும் சிறுகதையில் காணமுடிகின்றது. இச்சிறுகதை மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே நிகழும் போராட்டத்தை வெளிப்படுத்துவதால் அமைகின்றது.

'வாசனை' என்னும் சிறுகதையில் திருமணமாகாத பெண் சமுதாயத்துடன் எப்படியெல்லாம் பேராட்டம் நடத்த வேண்டியிருக்கும் என்பதை வெளிப்படுத்துகின்றது.

சமுதாயத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும் தீமையை எதிர்த்துப் போராடும் கோதையை 'மிருகம்' என்ற சிறுகதையில் காணமுடிகின்றது. இவை மனிதனுக்கும் சமுதாயத்திற்குமிடையே நடக்கும் போராட்டத்தை வெளிப்படுத்துகின்றது.

இதைப்போல பிரபஞ்சனின் பல சிறுகதைகள் மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே நிகழும் போராட்டத்தை வெளிப்படுத்துகின்றது. மேலும் 'நிகழ்உலகம்', 'வீடு', 'ஒரு மனுஷி', '2000 வருஷத்து', 'வாசனை', 'அமரத்துவம்', 'சிறுமை கண்டு', 'வர்க்கம்' போன்ற சிறுகதைகள் மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையேயுள்ள போராட்டத்தை வெளிப்படுத்துகின்றது.

'தலை சாய்க்க' என்னும் சிறுகதையில் மழை நேரத்தில் ஒழுகுகின்ற தன் வீட்டில் நடக்கும் போராட்டத்தை வெளிப்படுத்துகின்றது. எனவே இது மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையே நிகழும் போராட்டமாகும். இவ்வகையில் மூன்று நிலைகளில் புறநிலையில் அமைந்த போராட்டங்களைத் தமது சிறுகதைகளில் கதைப்பின்னலாக அமைத்துள்ளார் பிரபஞ்சன்.

**அகப்போராட்டம்**

"அகப்போராட்டம் (Internal Conflict) என்பது மனிதனுடைய உள்ளத்தில் உணர்ச்சிகளுக்கு இடையே நடைபெறும் போராட்டமாகும்"[67] அந்த வகையில் பிரபஞ்சன் "பிம்பம்" என்னும் சிறுகதையில் தன் மனசாட்சியுடன் மனிதனுக்கு இருக்கும் பல்வேறு முகங்கள் பற்றி விவரிக்கும் விவாதமாகக் கதை நிகழ்வு அமைகின்றது. மனிதர் குறித்த மனப் போராட்டங்களைச் சித்தரிப்பதால் இக்கதை மனிதனுக்கும், மனிதனுடைய உள்ள உணர்ச்களுக்குமிடையே நிகழும் பேராட்டமாக அமைகின்றது. இதேபோல் 'அம்மா' என்னும் சிறுகதையும் அகப்போராட்டமாக அமைந்துள்ளது.

இங்ஙனம் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் கதையின் நிகழ்ச்சிகளுக்கிடையே நிகழும் காரணகாரியத் தொடர்பினை பல்வேறு வகைகளில் சித்தரித்துள்ளார் என்பது வெளிப்படுகின்றது. இப்பின்னல்கள் படிப்பவர்களுக்கு சுவை குன்றிவிடாமல் மேலும் படிக்கத் தூண்டும் வகையில் ஆர்வமூட்டலாக அமைகின்றது.

**நோக்கு நிலை (Point of view)**

சிறுகதையானது யாருடைய வழியிலே நோக்கப்பட்டுக் கூறப்படுகிறது என்பது நோக்கு நிலையாகும். சிறுகதை யார் மூலம் நோக்கப்படுகின்றது என்பதும் நோக்கு நிலையாகும். "நோக்குநிலை என்பது யாரின் வழியாக நாம் கதையின் செயல்களைப் பார்க்கிறோமோ அவரைக் குறிக்கின்றது. அவர் விலகி நின்றோ, கலந்து நின்றோ, உள்ளிருந்தோ, வெளியே இருந்தோ, நெருங்கி நின்றோ, தொலைவில் நின்றோ நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பதையும் விளக்கும் என்பர்"[68] என்று ஆர்.எப்.டிக்ஸ்ட்ரிச் கூறுகிறார்.

"நோக்குநிலை என்பதைச் சிறுகதைகளில் கதை கூறும் திறனுக்காக மட்டுமல்லாது ஆசிரியர் தாம் கண்ட அனுபவக்கூற்றை வெளியிடுகின்ற வாயிலாகவும் கொள்ளலாம். இவை இரு வகைப்படும் படர்க்கைக் கூற்று (Third Person Point of View), தன்மைக்கூற்று (First Person Point of View)"[69] என்பதாகும். இவற்றுள் ஆசிரியரே கதை கூறுவது படர்க்கைக் கூற்று ஆகும். கதை மாந்தருள் யாரேனும் ஒருவர் கதை முழுவதையும் கூறுதல், மடல்வழிக்கூற்று போன்றவை தன்மைக் கூற்றில் அடங்குவதாகும். பிரபஞ்சன் சிறுகதைகளில் இவ்வகையான நோக்குநிலைகள் எங்ஙனம் கையாளப்பட்டுள்ளது என்பதைக் காணலாம்.

**படர்க்கைக்கூற்று**

இவ்வகை கூற்றில் ஆசிரியரே கதையைக் கூறிச் செல்கின்றார். கதையில் இடம்பெறும் நிகழ்ச்சி, கதைமாந்தர் பண்பு, மன உணர்வு அனைத்தும் குறித்து கதையாசிரியர் கூறும் நிலை இதில் உள்ளது. ஆசிரியர் எல்லாம் அறிந்த நிலையில் நின்று கதையை நடத்துகிறார்.

இவ்வகையில் ஆசிரியரே அனைத்தையும் கூற்றுமுறையில் கூறாமல் கதை மாந்தர் ஒருவரையோ, இருவரையோ உலவவிட்டு அவர்களின் மன உணர்வு, செயல்கள் அடிப்படையில் கதையை நடத்திச் செல்கிறார். இதில் ஆசிரியர் கதை கூறுகின்றார் என்ற உணர்வே ஏற்படாமல் சிறுகதை அமையும் கலைப்பாங்கையும் உணரலாம்.

"படர்கதைக் கூற்று முறையில் கதை கூறுவோர் கதைக்கு வெளியே இருப்பவர், அவர் கதை மாந்தரின் பெயரினைக் கூறி அல்லது அவன், அவள், அவர்கள் என்று குறிப்பிட்டுக் கதையினைக் கூறுவர்"[70] என்று எம்.எச்.ஆப்ராம்ஸ் குறிப்பிடுகிறார்.

'நேற்று மனிதர்கள்' என்னும் சிறுகதையில் போன தலைமுறை மனிதர்களுக்கும் இந்த தலைமுறை மனிதர்களுக்கும் உள்ள போராட்டத்தைப் பாத்திரங்களின் வழி வெளிப்படுத்துகிறார். எல்லோரும் மனிதர்கள் தானே என்று நினைக்கும் மூர்த்தியையும், ஜாதி கௌரவம் பார்க்கும் மாமாவையும் படைத்து இரு வேறுபட்ட கருத்துக்களைப் பாத்திரங்களின் வழி வெளிப்படுத்துகின்றார். இதில் ஆசிரியர் மறைந்திருந்து கதை நடத்திச் செல்லும் போது அவரது கருத்து என்று கூற இடம் ஏற்படாமல் நோக்குநிலை வெற்றிபெற்று அமைந்துள்ளது.

இவ்வாறு படர்க்கை கூற்றில் அமையும் சிறுகதைகளைப் பிரபஞ்சன் அதிகமாகப் படைத்துள்ளார். இதுபோன்று 'மீன்', 'முறிவு', 'சங்கம்', போன்ற பல சிறுகதைகளைப் படர்க்கைக் கூற்று முறையில் ஆசிரியர் படைத்துள்ளார்.

**தன்மைக் கூற்று (First person point of view)**

தன்மைக் கூற்றில் கதை மாந்தருள் யாரேனும் ஒருவர் இருவர் அல்லது மூவர் கூற்றாக அமைகின்றது. கதைத் தலைமை மாந்தர்களின் கூற்றாகவும், துணை மாந்தர் கூற்றாகவும் அமைவதுடன் கதையாசிரியரே ஒரு துணை மாந்தராக வந்து கதை நிகழ்ச்களில் பங்கு கொண்டு கூறும் கூற்றாகவும் இத்திறன் அமையும்.

பெரும்பாலும் சிறுகதை ஆசிரியர்களுக்கு 'நான்' என்று கூறி எழுவதில் சிக்கல்கள் உண்டு. இக்கருத்தினைச் சிறுகதை ஆசிரியர் அகிலன் கூறுகையில், "படர்க்கை கூற்றில் கூறுவதைவிட 'நான்' என்று கூறுவதில் கதையாசிரியர்களுக்குச் சில இன்னல்கள் உண்டு. இருப்பினும் இப்படி எழுதுவதன் மூலம் வாசகர்களுக்கு அருகே வெகு சமீபத்தில் இருந்து நேருக்கு நேர் கதை சொல்லும் இனிய அனுபவம் உண்டாகிறது"[71] என்கிறார்.

ஆனால் பிரபஞ்சன் தமது சிறுகதைகளில் மிகத் துணிச்சலுடன் 'நான்' என்றே கூறுகின்றார் ஆசிரியரே தலைமைப் பாத்திரமாகவோ, துணைமைப் பாத்திரமாகவோ அமைந்து கதை கூறும் உத்தி பிரபஞ்சனின் பல சிறுகதைகளில் அமைந்துள்ளது.

'அன்னை இட்ட தீ' என்னும் சிறுகதையல் ஆசிரியரே தலைமைப் பாத்திரமாக அமைகின்றார். அவரே கதையைக் கூறுகின்றார். தான் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் படித்தபொழுது 'சுமதி' என்கின்ற பெண்ணைக் காதலித்தேன் என்று தன் மனைவி ஹேமாவதியிடம் கூறுகிறார். இக்கதையில் ஆசிரியர் இச்செயல்களைத் தான் செய்ததாகக் கூறிக் கதையை அமைத்திருப்பது வியப்பூட்டுவதாய் அமைகின்றது. இதன் மூலம் பிரபஞ்சனின் துணிச்சலையும் அறியமுடிகின்றது.

'மாமன் உறவு' என்னும் சிறுகதையிலும் ஆசிரியர் துணைமைப் பாத்திரமாக அமைந்து சிறுகதை நிகழ்ச்சியைக் கூறுகின்றார். இதில் தன்னுடைய பண்பு, தன் அம்மா, அப்பா ஆகியோரின் பண்பு நலன்கள் சுயம் நலம் கொண்ட தாய்மாமனின் பண்புநலன்கள் ஆகியவற்றை வெளிப்படுத்துகின்றார். தன் மாமனை மகனாக நினைக்கும் அப்பாவையே ஏமாற்றும் குணம் கொண்ட மாமனைப் பற்றி ஒரு துணைமைப் பாத்திரமாக நின்று கதை கூறுகிறார் ஆசிரியர்.

இதனடிப்படையில் 'பிம்பம்', 'பலி', 'சலிப்பு', 'தலை சாய்க்க', 'விழுது', 'சூரியனைப் பார்க்காமல்', 'சைக்கிள்' போன்ற பல சிறுகதைகளைப் படைத்துள்ளதை அறியமுடிகின்றது.

இவை சிறுகதை எழுதுவதோடு மட்டுமல்லாமல் சிறுகதையில் தானும் ஒரு பாத்திரமாக அமையவேண்டும் என்னும் ஆசிரியரின்

உள்ளப்போக்கை உணர்த்துகின்றது. கலைமீது பிரபஞ்சன் கொண்ட ஈடுபாட்டையும் புலப்படுத்துகின்றது எனலாம்.

**மடல் வழிக் கூற்று**

சிறுகதை மாந்தர் நேரடியாகக் கூற முடியாததை மடல் வழி கூறும் அமைப்பிற்கு மடல் வழிக் கூற்று ஆகும். "சிறுகதையின் நோக்கு நிலைக்குத் துணைபுரியும் மற்றொரு வகை மடல் வழிக் கூற்று. இம்முறையில் கதைமாந்தர் தாம் நேரடியாகக் கூற இயலாததை மடல் வழியே வெளிப்படுத்துமிடத்தில் மடல் வழிக் கூற்று பயன்படுத்தப்படுகின்றது"[72] என்னும் கருத்தின் மூலம் அறியலாம்.

இங்ஙனம் அமைந்த சிறுகதைகளில் கதைமுழுவதும் மடல் வழிக் கூற்றாக அமையும் அவ்வகையில் பிரபஞ்சனின் சிறுகதைத் தொகுதியில் இரண்டு கதைகள் அமைகின்றன. 'சுமதிக்கு ஒரு கடிதம்', 'யாரும் படிக்காத கடிதம்' என்ற இந்த இரு சிறுகதைகளும் மடல் வழிக் கூற்றாக அமைகின்றன.

இதில் 'சுமதிக்கு ஒரு கடிதம்' என்னும் சிறுகதையில் பிரசவத்திற்கு போன மனைவி எழுதிய கடிதத்திற்குக் கணவன் பதில் எழுதும் வண்ணமாகக் கதை அமைந்திருக்கிறது. பழைய வீட்டை விட்டு புது வீட்டிற்கு ஜாமான்கள் அள்ளிச்சென்ற விதத்தையும், திருவல்லிக்கேணியில் வீடு கிடைத்த செய்தியையும் மனைவிக்குக் கடிதத்தில் விவரிக்கிறார். இச்சிறுகதையில் கிருஷ்ணமூர்த்தியின் மடலின் பணியே அதிகமாக அமைந்துள்ளது.

மற்றொரு கதை 'யாரும் படிக்காத கடிதம்' இது அரசியல் வாதியான தன் நண்பனுக்குக் கதை நாயகன் உதவிகேட்டு எழுதிய கடிதம். இக்கடிதத்தில் இருவரும் சிறு வயதில் படித்த பள்ளிக்கூட நினைவு, பழகிய நினைவுகளைச்

சொல்கிறான் எஸ்.நடராஜன். தாம் வேலை இல்லாமல் சிரமப்படுவதாகவும், தனக்கு உதவுமாறும் கேட்டு கடிதம் எழுதுகிறான். மேலும் அரசியல் வாதியைப் பள்ளியில் சேர்த்தது நடராஜனின் அப்பா தான் என்பதையும் சிறுகதை வழி அறியமுடிகின்றது. இறுதியில் கடிதம் படிக்கப்படாமல் குப்பைத் தொட்டிக்குப் போகின்றது. இக்கதையில் சிறுகதை முழுவதும் மடல் வழியே நிகழ்வதை அறியமுடிகின்றது. மேலும் இவ்வகைக் கூற்று அமைப்பு கதை மாந்தருக்கும், கதையைப் படிப்பவருக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்கின்றது.

இவ்வகையில் நோக்கு நிலை என்பது சிறுகதையை யார் வாயிலாக எந்த தொலைவில் இருந்து ஆசிரியர் நோக்குகிறார் என்பதை வெளிப்படுத்துகின்றது. பிரபஞ்சன் தனது சிறுகதைகள் பலவற்றைப் படர்க்கைக் கூற்றிலும், தன்மைக் கூற்றில் பல கதைகளையும், மடல் வழிக் கூற்றில் இரண்டு கதைகளையும் அமைத்துள்ளார். இவற்றின் வழி ஆசிரியரின் நோக்குநிலையில் அமைந்த மிகச்சிறந்த கலை நுட்பத்தினை அறியமுடிகின்றது.

**பாத்திரப் படைப்பு**

சிறுகதையில் மிகவும் முக்கியமானது பாத்திரப் படைப்பாகும். கதைமாந்தர்களே படிப்பவர் கருத்தைப் பெரிதும் ஈர்ப்பவராவார். கதையில் கதைமாந்தர் படைப்பைச் சுவையுடையதாகச் செய்ய அவர்கள் ஒவ்வொரு வரையும் தனி இயல்புடையவராக அமைப்பது நுட்பமான கலையாகும்.

சிறுகதையின் சிறப்புக்குப் பாத்திரப் படைப்பும் காரணமாக அமைகின்றது. "சிறுகதையில் மிகவும் முக்கியமானது பாத்திரப் படைப்பு. கதைமாந்தர்களே படிப்பவர் கருத்தைப் பெரிதும் ஈர்ப்பவராவர். கதையில் கதைமாந்தர் படைப்பைச் சுவையுடையதாகச் செய்ய அவர்கள் ஒவ்வொருவரையும் தனி இயல்புடையவராக அமைப்பது நுட்பமான கலையாம்"[73] என்கிறார் தா.ஏ.ஞானமூர்த்தி.

இதன்வழி சிறந்த சிறுகதை எழுத்தாளர் உண்மை வாழ்க்கையில் தாம் காணும் மக்களைக் கருத்தில் கொண்டு தம் சிறுகதைகளில் பாத்திரங்களைப் படைக்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

பிரபஞ்சன் சிறுகதைளில் கதைமாந்தர் அமைப்பும், அவரது படைப்பு வெற்றிக்கு வழி வகுக்கின்றது. சிறுகதை மாந்தர் படைப்பு வகைகள் இருவகை உண்டு. “ஆசிரியரே கதைமாந்தரைப் படைத்துக் காட்டுவது ஒருமுறை. இதனை நேரடிமுறை (Expository Method) என்பர். மற்றொன்று நாடகமுறை (Dramatic Method)”[74]

நேரடிமுறையில் ஆசிரியரே பாத்திரத்தைப் பற்றியும் அதன் பண்பு நலன்கள் பற்றியும் சித்திரித்துக் காட்டுவார். நாடகமுறையில் பாத்திரங்களின் பேச்சு நடத்தைகளின் வழி அப்பாத்திரங்களின் பண்பு நலன்கள் வெளிப்படும்.

“நேரடிமுறையில் ஆசிரியரே பாத்திரத்தைச் சித்தரிப்பார். அதன் எண்ணங்கள், உணர்வுகள், செயல்கள், விழைவுகள் ஆகியவற்றை விளக்குவார். நாடகமுறையில் பாத்திரப்படைப்பு ஒரு பாத்திரத்தின் பேச்சு, நடத்தை, எண்ணம் இவற்றிலிருந்து கற்போரே அதன் ஆளுமை, மனப்போக்கு, பிற கதை மாந்தருடன் அதன் உறவு ஆகியவற்றை உணரும் வண்ணம் அமையும்”[75] என்ற கருத்தின் வழி அறியலாம். இதனடிப்படையில் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் இவ்விரு முறைகளையுமே கொண்டுள்ளார்.

‘சிறுமை கண்டு’ என்னும் சிறுகதையில் கொண்டப்பாவை நேரடிமுறையில் அறிமுகப்படுத்துகிறார். “கொண்டப்பாவை எல்லோரும் பரமசாது என்று சொல்வார்கள் அப்படிச் சொல்வது அவனுடன் அலுவலகத்தில் பணி ஆற்றுபவர்கள் தாம். சிலர், பசு, என்றும் கூறுவார்கள். மனிதனாகிய அவனை, அப்படிச் சொல்வது இழித்துரைப்பதாகாது. அவ்வளவு சாந்தமானவன் என்பதை அவர்கள் அப்படிச் சொல்கிறார்கள் அவனது

அதிகாரிகள் அவனை ஒரு லட்சிய எழுத்தராக மற்றவர்களுக்குக் குறிப்பாகப் புதிதாக அலுவலில் சேர்ந்த கத்துக்குட்டிகளுக்கு உதாரண புருஷனாகக் காட்டுவார்கள்”[76] என்பதிலிருந்து அறியலாம். இங்ஙனம் கொண்டப்பாவை நேரடியாக அவனின் பெயரைக் கொண்டே அறிமுகம் செய்கின்றார். கொண்டப்பா லஞ்சம் வாங்காத ஒரு நேர்மையான அரசாங்க எழுத்தர் என்பதை அவனின் மேற்கண்ட பண்பு நலன்களிலிருந்து அறிய முடிகின்றது.

நாடகமுறையில் அமைந்த பாத்திரப் படைப்பை ‘சைக்கிள்’ என்னும் சிறுகதையில் முஸே நடராஜன் என்னும் பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

“சும்மாவா? கப்பல்ல வந்த பட்டுடா இந்த மாதிரி உங்க நாட்டுல ஒரு பயலுக்கு நெய்யத் தெரியுமா? சும்மா, உங்க அப்பன் மாதிரி வேலையத்த ஆளுக வெள்ளைக்காரனை ‘வெறியேறுங்க வெளியேறுங்கன்னு கத்திக்கிட்டு இருந்தா ஆச்சி? வெள்ளைக்காரன் போயிடுவானா இந்த மாதிரி ஒரு சைக்கிள், கச்சிதமா, கனம் இல்லாமே நாள்பட்டு உழைக்கிற மாதிரி ஒண்ணு பன்ன முடியுமாடா இந்த ஊர் ஆளுங்களாலே? காந்தி சொன்னாருன்னு கோணித் துணையைக் கட்டிக்கிட்டுத் திரிஞ்சா, வெள்ளைக்காரன் பயந்துகுவானாக்கும்”[77] என்ற பேச்சிலிருந்து அவரின் மேல்நாட்டு மோகத்தை அறியமுடிகின்றது.

இது மேல்நாட்டைப்பற்றி உயர்வான எண்ணம் கொண்டதையும் தாய்நாட்டுப் பற்று இல்லாதவர் என்பதையும் காட்டுகின்றது. இவரின் பேச்சு இவரின் குணத்தை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. இங்ஙனம் பல சிறுகதைகளில் பிரபஞ்சன் நேரடி முறையிலும், நாடக அமைப்பு முறையிலும் பாத்திரங்களைப் படைத்துள்ளார். அவற்றின் மூலம் அவர்களின் பண்பு நலன்களையும் வெளிப்படுத்துவதையும் அறியமுடிகின்றது. இவற்றின் வழி

பாத்திரங்களின் எண்ணம், பேச்சு, உணர்ச்சிகள் போன்றவற்றிலிருந்து அவைகளின் ஆளுமைப் பண்பை உயிரோவியமாகப் பிரபஞ்சன் வடித்துள்ளதை அறியமுடிகின்றது.

**பாத்திரப் பெயரிடும் முறை (Naming of the characters)**

சிறுகதையில் படைக்கப்படும் பாத்திரங்களின் பண்பு நலன்களுக்கு ஏற்ற வகையில் பெயர்களை வைக்கும்போது, அது பொருத்தமாகவும் சிறப்பானதாகவும் அமைகின்றது. "படைப்பாளனின் எண்ணத்தில் எழுகின்ற முதற்பெயரைச்சூட்ட முற்படுவது பெயர்களை மிக எளிமையாக்கி, நினைவில் நிற்கும் சிறப்பு அவற்றுக்கு இல்லாமல் செய்துவிடும் அரிதின் முயன்று தேடிச்சூடும் பெயரும் இயல்புப் பொருத்தமில்லாமல் தனித்து நிற்கும். தன் கதைமாந்தர் பண்புக்கேற்றதாகவும் இயல்பாகவும் ஒருங்கே அமையும் பெயர்களே சிறுகதையில் பொருத்தமாக இருக்கும்"[78] என்பதிலிருந்து அறியலாம். அந்த வகையில் பிரபஞ்சனின் சிறுகதைப் படைப்புகளில் பெயரிடும் முறைகளில் ஒரு இயல்பும் புதுமையும் ஒழுங்கும் கொண்டு அமைந்துள்ளது.

திட்டமிட்டோ இயல்பாகவோ பிரபஞ்சன் தன் கதைமாந்தருக்குப் பொருத்தமான பெயர்களையே சுட்டியுள்ளார். பாத்திரங்களைப் பற்றி வ.கமலக்கண்ணன் "கதைமாந்தர்கள் வாழ்வில் காணக்கூடிய இயல்பும் இலக்கியத்தில் இடம்பெறக்கூடிய தனித்தன்மையும் ஒருங்கே இணைந்தவர்களாக இருக்க வேண்டும்"[79] என்கிறார்.

பிரபஞ்சனின் கதைமாந்தர்கள் இயல்பான மனிதர்கள். பொதுவாக சிறுகதைகளில் பாத்திரங்களுக்குப் பெயரிடும் போதே கதை மாந்தரைப் படைக்கும் பணி தொடங்கிவிடுகின்றது. பிரபஞ்சனின் சிறுகதைப் பாத்திரப் பெயர்கள் எளிமையான நினைவில் நிற்கும் இயல்புடையன.

பிரபஞ்சன் சிறுகதைகள் தொகுதி ஒன்றில் மொத்தம் தொன்னூறு சிறுகதைகள் அடங்கியுள்ளன. அவற்றில் மொத்தம் நாநூற்று ஐம்பதிற்கும் மேற்பட்ட கதாபாத்திரங்களைப் படைத்துள்ளார்.

சில பாத்திரங்கள் மீண்டும் மீண்டும் அமைந்து வந்துள்ளது. பிரபஞ்சனின் சிறுகதை சாதாரண மனிதர்களைப்பற்றி அமைந்துள்ளதால் சாதாரணமான சமுதாயத்தில் காணப்படும் இயல்பான பெயர்களையே படைத்துள்ளார். 'மீன்' என்னும் சிறுகதையில் ஆசிரியரின் இயற்பெயரில் இருக்கும் 'கிராமணி' என்னும் தமது பெயரையும் கதாபாத்திரத்திற்கு அமைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

தம் கதையில் அமைந்துள்ள பெயர்களுடன் சாதிப் பெயர்கள், சொந்த ஊர்ப் பெயர்கள், தொழிற்பெயர்கள், பட்டப் பெயர்கள், சிறப்புப் பெயர்கள் முதலியனவும் சேர்த்துச் சொல்லப்பட்டிருப்பது சிறப்பு.

நாடார், செட்டியார், ஐயர், பண்டாரம், சுந்தரம் ஐயங்கார், மாரியப்ப உடையார், நல்லமுத்து நாயக்கர், கவுண்டரின் மனைவி, சண்முகவேலாயுத முதலியார் போன்ற பாத்திரங்களில் நேரடியாகவும், இயற்பெயரின் பின்னரும் ஜாதிப் பெயர்கள் சில இடங்களில் மட்டும் அமைந்துள்ளது. வில்லியனூரு பழநியம்மா, வில்லியனூர் கோகிலாம்பாள் என்னும் பாத்திரப் பெயரோடு ஊர்ப் பெயரை வைத்துப் படைத்துள்ளார்.

பச்சை மாமி என்னும் பெயர் பட்டப் பெயராக அமைந்துள்ளது. டிராபிக் போலீஸ்கரன், ஹெட்மாஸ்டர், ஆபீஸ் பியூன் துரைசாமி, டைபிஸ்ட், இங்கிலீஸ் வாத்தியார், தமிழ் வாத்தியார், இஸ்டரி சார், வரலட்சுமி டீச்சர் போன்ற தொழில் பெயர்கள் நேரடியாகவும், இயற்கை பெயரின் பின்னரும் அமைந்துள்ளன.

சௌந்தர்யா, ஓமணா, நீரா, ஆனந்தாயி, பவுனு, சுமதி, சொர்ணம், செண்பகா, லட்சுமி, செண்பகராஜலட்சுமி, கலாஸ்ரீ, கஸ்தூரி, நீரஜா, கனகா, சுகுணா, அஞ்சலை, சாந்தாதேவி, மணிஸ்ரீ, ராகினி, சத்யா, மல்லிகா, மேகா போன்ற பெண் பாத்திரப் பெயர்களைப் படைத்துள்ளார் ஆசிரியர்.

கிருஷ்ணமூர்த்தி, மூர்த்தி, சுமதி போன்ற பாத்திரப் பெயர்கள் பிரபஞ்சன் சிறுகதைகளில் பல இடங்களில் இடம்பெறும் பாத்திரப் பெயர்களாகும். அப்பா, அம்மா, தங்கை, மாமா, அத்தை போன்ற முறை பெயர்களுக்கு இயற்பெயர்களே வைக்காமல் நேரடியாகவே படைத்துள்ளார் ஆசிரியர். இன்னும் பல இடங்களில் பிரபஞ்சனே முதன்மைப் பாத்திரமாகவும் துணைமைப் பாத்திரமாகவும் அமைந்துள்ளது கதைக்குச் சிறப்பைத் தந்து அமைகின்றது.

மேற்கண்ட கதாபாத்திரங்கள் உயிர்த்துடிப்புடன் உலவி உண்மையென்றே அவற்றை நம்பும் வண்ணம் இயல்பாகச் சிறுகதைகள் அமைய இந்தப் பெயர்களும் காரணமாகின்றன. இங்ஙனம் இயல்பான பொருத்தமான பெயர்களை அமைத்துத் தன் பாத்திரப் படைப்பிற்கு நல்லதொரு தொடக்கத்தைப் பிரபஞ்சன் அமைந்துள்ளது தெளிவுறுகின்றது.

**உரையாடல்**

சிறுகதையில் உரையாடல் மிக நுட்பமான ஒன்று. சிறுகதையில் அமைக்கப்பெறும் உரையாடல்கள் கதை ஓட்டத்திற்கு ஏற்ற வண்ணம் அமையவேண்டும். மாறாக பொதுச் செய்திகள் பற்றியோ, கதைக்கருவில் இருந்து மாறியோ உரையாடல் செல்லுதல் கூடாது. இவ்வாறு அமையும் சிறுகதையின் உரையாடல் மிகச் சிறப்பானதாக அமையும்.

"உரையாடல் எப்போதும் கதைக்குரிய உறுப்புக்கூறாக இருத்தல் வேண்டும். அது நேர்முகமாகவோ மறைமுகமாகவோ கதைக்கோப்பின்

இயக்கத்திற்குத் துணை செய்யவேண்டும்; அல்லது பாத்திரங்களை விளக்குவதாக இருத்தல் வேண்டும். கதைக்குப் புறமான உரையாடல் எவ்வளவு திறமுடையதாகவோ, சுவையுடையதாகவோ இருப்பினும் அதனைக் கடிதல் வேண்டும்"[80] என்ற கருத்திலிருந்து அறியலாம்.

"உரையாடல் என்பது பல பாத்திரங்களுடைய மனம், பண்பு, குறிக்கோள், உணர்ச்சிகள் முதலியவற்றை நமக்கு எடுத்துக் காட்டும் கண்ணாடி"[81] என்கிறார் அ.ச.ஞானசம்மந்தன்.

மேற்கண்டவற்றிலிருந்து ஒரு சிறுகதை ஆசிரியர் அமைக்கும் உரையாடல் கதைப்பின்னலை வளர்க்கும் விதத்திலும், கதைமாந்தரின் பண்பினை வெளிப்படுத்தும் விதத்திலும் அமையவேண்டும் என்பது வெளிப்படுகின்றது.

"என்னடி தலைபோற அவசரம்னு, பணம் வாங்கிட்டு வந்தே; பார்த்தா யாரோ ஒருத்தன் பையை எடுத்துக்கிட்டுப் போறானே என்ன சங்கதி?"

"ஒன்றுமில்லைக்கா, ஒரு சினேகிதக்காரு"

"சினேகிதன் பணம் பொடுக்கலையா?"

"இல்லை நான் தான் கொடுத்தேன்"

"தலைகீழா இருக்கு?"

"நல்ல மனுஷங்கா படம் எடுக்கிறவரு

நான் மொதோ மொதோ இங்க வந்தப்போ,

என்னைப் படம் எடுத்தவரு இவருதாங்கா"

"இப்பவும் எடுத்தானா?"

"எடுத்தாரு ஆனா...?"

"ஆனா?"

"கேமராவில் ஃபிலிம் இல்லாம எடுத்தாரு"

"அவனை சும்மாவா விட்டே?"

"பாவம் கா. கண்ணைப் பாத்தா தெரியுதே சாப்பிடலைன்னு...

சோத்துக்காக நல்ல மனுஷன் பொய் சொல்லாரு பாரு... அதான்"[82]

மேற்கண்ட உரையாடலிலிருந்து விஜயாவின் மனிதாபிமானம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. பாலியல் தொழில் செய்து பிழைப்பு நடத்தும் விஜயா தன் வறுமை நிலையிலும் வயிற்றுப் பசியைக்கூட தீர்க்க முடியாமல் தவிக்கும் சினேகிதனுக்கு கடன் வாங்கிக் கொடுத்து உதவுகிறாள். இதனை உரையாடல் மூலம் காணமுடிகின்றது. இந்த உரையாடல் கதை ஓட்டத்திற்கும் கதையின் கருவிற்கு ஏற்றதாகவும் அமைந்துள்ளது.

பாத்திரத்தின் பேச்சின் வழி அம்மாந்தரின் பண்பு நலன்களையும், உணர்ச்சிகளையும் எடுத்துக்காட்டி கதையையும் சுவை குன்றாமல் நடத்திச் செல்வதில் ஒரு சிலரே வெற்றி பெறுகின்றனர். அந்த வகையில் பிரபஞ்சனும் தனது சிறுகதைகளில் உரையாடலை அமைத்து வெற்றி பெற்றுள்ளார்.

"நெருப்பைப் பொட்டலம் கட்டமுடியாது" என்னும் சிறுகதை முழுவதும் உரையாடலாகவே அமைந்துள்ள போக்கைக் காணமுடிகிறது. மேலும் வெறும் புள்ளிகளைக் கூட உரையடலாக மாற்றும் கலைத்திறனைப் பிரபஞ்சனின் சிறுகதைகளில் காணலாம்.

சமையல் செய்யும் கைலாச மாமாவிற்கு குறிப்பு வழங்குகிறாள் மாமி.

"வானலியில் ஜலம் விட்டேளா?

'ஆச்சு...'

'உப்பு மிளகாய் பொடியை வாணலியில் போடுங்கோ'

'.....'

'என்ன போட்டுட்டேளா... சத்தத்தையே காணமே?'[83]

இந்த உரையாடலில் மாமா அமைதியாக இருந்ததைப் புள்ளிகளின் மூலம் ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார். இது ஒரு சிறந்த உரையாடலின் வெளிப்படையாய் அமைகின்றது. சிறுகதையின் உரையாடல்களில் புள்ளிகள்கூட பேசும் என்ற உண்மையைப் பிரபஞ்சனின் சிறுகதைகள் வெளிப்படுத்துகின்றன.

புகைப்படம் எடுப்பது குறித்த உரையாடலை 'ஒரு நெகட்டிவ் அப்ரோச்' என்னும் சிறுகதையில் காணமுடிகின்றது. சிறுகதையில் காணப்படுகின்ற உரையாடல்கள் படிப்போருக்குச் சுவை தோன்றும் வகையிலும், நாடகப் பாங்கிலும் அமைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. இவை கதைக் கருவின் வளர்ச்சிக்கு உதவுவதாகவும் அமைந்துள்ளது.

**முரண் (Contrast)**

முரண் என்பது மாறுபாடு உடையது எனப் பொருள்படுகின்றது. சிறுகதைகளில் பாத்திரங்களுக்கிடையேயான மாறுபட்ட உணர்ச்சிகள், போராட்டங்கள் குண நலன்கள் போன்ற பண்புகளால் முரண் தோன்றுகிறது.

"முரண் என்று சொல்லுகையில் மனித உறவில் ஏற்படும் வெளிப்படையான மோதல்கள் மட்டுமின்றி நல்லதற்கும் தீயதற்கும் இடையே ஏற்படும் முரண், ஒரு மனிதனின் உள்ளத்துக்குள்ளேயே ஏற்படும் போராட்டம் முதலியன பலவும் உள்ளடங்கும்"[84] என்பதிலிருந்து அறியமுடியும். அந்த வகையில் பிரபஞ்சன் தனது சிறுகதைப் பாத்திரங்களுக்கிடையே தோன்றும் முரணையும் அவர்களின் வாழ்க்கைக்கிடையே தோன்றும் மாறுபாடுகளையும் இங்குக் காணலாம்.

பிரபஞ்சன் ‘ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்’ என்னும் சிறுகதையில் இருவேறுபட்ட பாத்திரங்களைப் படைத்து அவர்களுக்கிடையே உள்ள முரண்பட்ட பண்புகளையும் வெளிப்படுத்தியுள்ளார். இச்சிறுகதையில் கடனைக் கொடுத்துவிட்டு அதனைப் பணிவோடு திருப்பிக் கேட்கும் கிருஷ்ணமூர்த்தியையும், சட்டையைப் பிடித்து இழுத்துக் கேட்டால் தான் கொடுத்த பணம் திரும்பக் கிடைக்கும் என்று கூறும் ரங்கசாமியையும் இக்கதையில் படைத்துள்ளார் ஆசிரியர். இது இவ்விரு பாத்திரங்களுக்கிடையே தோன்றும் மாறுபட்ட குணங்களைக் காட்டுகின்றது.

இதேபோல் ‘மீன்’ என்னும் சிறுகதையிலும் கிராமணி, நடராஜன் என்னும் இரண்டு பாத்திரப் படைப்புகளுக்கிடையே முரண் அமைந்துள்ளது. கிராமணி மீன் சாப்பிடுவதில் வெறியர் ஆனால் நடராஜனுக்கோ உலகத்தில் முதல் எதிரியே மீன் தான். இந்த இரண்டு பாத்திரங்களுக்கிடையேவுள்ள முரண்பட்ட ரசனைத் தன்மையை இச்சிறுகதை காட்டுகின்றது.

‘பிம்பம்’ என்னும் சிறுகதையில் நிசத்திற்கும் போலிக்கும் இடையே சிக்கித் தவிக்கும் மனப்போராட்டத்தைக் காட்டுகின்றது. மனிதன் பல்வேறு முகங்கள் கொண்டவன் போலிமுகத்தைத்தான் வைத்து உலவுகின்றான். நாம் காணும் முகங்கள் நிசமானது அல்ல என்பதை விளக்கும் வகையில் ஆசிரியர் தனது மனத்தோடு நடத்தும் போராட்டமே ‘பிம்பம்’ சிறுகதையில் வெளிப்படுகின்றன. இது மனிதனின் உள்ளத்துக்குள்ளேயே ஏற்படும் போராட்டமாக அமைகின்றது. இது மனிதனுக்கும் அவன் மனத்திற்கும் நிகழும் அகப் போராட்டமாக அமைகின்றது.

இங்ஙனம் பிரபஞ்சனின் சிறுகதைகளில் அமைந்துள்ள கதைமாந்தர்களின் வாழ்வில் ஏற்படும் முரண்களையும், அவர்களின் மனதில் தோன்றும் முரண்களையும் ஆசிரியரின் சிறுகதைப் படைப்பின்வழி

அறியமுடிகின்றது. இம்முரண்கள் கதைப்பொருளுக்கு ஊற்றானதாக அமைந்து சிறப்பிக்கின்றது.

**வர்ணனை உத்தி**

சிறுகதைப் படைப்பாளர்கள் பயன்படுத்தும் உத்தி வகையுள் வர்ணனை உத்தி சிறுகதைக்கு அழகூட்டும் அம்சமாகும். இந்த வர்ணனை சிறுகதையில் அளவோடு இருத்தல் வேண்டும். அவ்வர்ணனை பொருளைக் கண்முன் நிறுத்தும் வகையில் அமைய வேண்டும்.

“சிறுகதை எழுத்தாளர்கள் சிறந்த கலையுணர்ச்சி உடையவர்கள் அவர்களின் வர்ணனைகளில் அந்த கலைச்சிறப்பு விளங்கும். ஏதேனும் ஒன்றைப்பற்றி விளக்கும்போது, அந்த விளக்கத்தால் அந்தப் பொருளை மணக்கண் உடனே காணும் கண்ணால் காண்பது மட்டும் அல்லாமல், மற்ற புலன்களாலும் உணர்வது போன்ற அனுபவம் ஏற்படும் சிறந்த சிறுகதை ஆசிரியராகிய செகோர் என்பவர் கார்க்கி என்ற ஆசிரியரிடம் தெரிவித்த அனுபவம் இது”[85] என்பதிலிருந்து அறியலாம்.

இதன்வழி வர்ணனை மூலம் பொருளையோ பாத்திரத்தையோ கண்முன் காணமுடியும் என்பது விளங்கும். மேலும், கற்பவருக்கு வியப்பை ஏற்படுத்தும் வகையிலும் வர்ணனை இடம் பெறுதல் வேண்டும். கதைமாந்தர் மாந்தர் மட்டுமின்றி இயற்கை, ஊர் போன்றனவும் வர்ணனையில் அமையும். இவ்வர்ணனை உத்தி சிறுகதைக்கு மிகக் குறைவாக பொருந்தி அமைவது குறிப்பிடத்தக்கது.

இவற்றின் வழி ஆசிரியர் சிறுகதையில் வர்ணனையை அளவோடு அமைத்தல் வேண்டும் என்பதையும் சிறுகதையோடு பொருந்திப் படிப்போருக்கு ஆர்வத்தையும் ஏற்படுத்தும் வகையில் அமையும். வர்ணனைகள்

சிறுகதைக்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைகிறது என்பதையும் உணரமுடிகிறது. அந்த வகையில் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் படைத்துள்ள வர்ணனைகள் அனைத்தும் நம் கண்முன் நின்று நிழலாடும்.

**பாத்திரத் தோற்ற வர்ணனை**

பாத்திரத்தோற்ற வர்ணனையில் கதாபாத்திரத்தின் தோற்றம் மட்டுமல்லாது அப்பாத்திரத்தின் பண்பு நலன்களும் வெளிப்படும் வகையில் அமைதல் வேண்டும்.

“படைப்பாளர்களின் கலை நுட்பத்தைக் காட்டி வெளிப்படுத்துவது வர்ணனைத் திறனாகும். எடுத்துக்கொண்ட பொருள் விளக்கமும் தெளிவும் பெறுமாறு பாத்திரங்களின் பண்பு நலன்களை விரித்துரைக்கப்படும் உத்தியைப் பாத்திரத்தோற்ற வர்ணனை உத்தி என்பர்.”[86]

இக்கருத்தின் வழி கதாபாத்திரங்களின் பண்பு நலன்களையும், தோற்றத்தையும் சுருக்கமாகவும், தெளிவாகவும் கலை நுட்பத்துடன் உரைப்பது பாத்திரத்தோற்ற வர்ணனைக்கு அவசியம் என்பது புலனாகின்றது.

‘பூக்களை மிதிக்கக்கூடாது’ என்னும் சிறுகதையில் வரும் இஸ்டரி ஆசிரியரின் தோற்றத்தை வெகு யதார்த்தமாக வர்ணனை செய்திருக்கின்றார் பிரபஞ்சன். “சார் எப்போதும் வெள்ளை வெளேரென்று சட்டையும் பேண்டும் போடுவார். கலர் சட்டைகளே போடமாட்டார். படிய தலைவாரி வழவழவென்று ஷேவிங் செய்து கொண்டு எப்போதும் புதுசாக இருப்பார். அவர் பக்கத்தில் இருந்தால் புதியவண்ணான் வேஷ்டிககுப் பக்கத்தில் இருப்பது போலப் புதுசாகவும் வாசனையாகவும் இருக்கும்”[87] என்பதிலிருந்து வரலாற்று ஆசிரியரின் தோற்றம் வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.

'ராட்சஸக் குழந்தை' என்னும் சிறுகதையில் வரும் முத்துவைப் படம் பிடித்துக் காட்டுகின்றார் ஆசிரியர். இதில் "மொட்டைத்தலை புருவம் தொடங்கி உச்சிவரை அப்பிய திருநீறு, காலணா அளவுக்குக் குங்குமப்பொட்டு, வெற்றிலைபோட்ட சிவந்தவாய், ஒற்றை ருத்ராட்சம் அணிந்திருப்பார்"[88] என்று முத்துவின் உருவத்தை உயிரோட்டமாகப் படைத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர். இவற்றின் வழி பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் சுருக்கமாகவும் தெளிவாகவும் பாத்திரங்களை வர்ணனை செய்துள்ளதைக் காணமுடிகின்றது.

**சூழல் வர்ணனை**

படைப்பாளர் சிறுகதையில் கருவிற்கு ஏற்ற சூழலை அமைத்துப் படைப்பது சிறப்பானதாகும். இடம், காலம் இரண்டும் கதைக்கு மிகவும் முக்கியமானதாக அமையும். இங்ஙனம் அமையும் சூழலை வர்ணனை செய்வது படிக்கும் வாசகனுக்கு ஆர்வமூட்டுவதாய் அமையும்.

"கதை நிகழும் இடத்தையும், கதை நிகழும் காலத்தையும், கதைகளைத் திறனாய்வோர் சுட்டுவது வழக்கமாகும். இடமும் காலமும் ஒரு நிகழ்ச்சிக்கு இன்றியமையாது தேவைப்படுகின்றன. இதனால் இலக்கியத்தில் இடம்பெறும் 'பாடு பொருளுக்கு' இன்றியமையாது வேண்டப்படும் இடத்தையும் காலத்தையும் தொல்காப்பியனார் 'முதற்பொருள்' என்பதனுள் அடக்கியுள்ளார்"[89]

இதிலிருந்து சிறுகதை நிழ்ச்சிக்கு இடமும், காலமும் இன்றியமையா வண்ணம் தேவைப்படுகிறது. படைப்பாளர்கள் தாங்கள் அறிந்த ஊர்களையும், இடங்களையுமே பிரபஞ்சனின் சிறுகதைகளில் சூழலாக அமைக்கின்றனர்.

'தலை சாய்க்க' என்னும் சிறுகதையில் "எங்கள் வீடு இரண்டு பகுதிகளைக் கொண்டது. ஒரு பக்கம் கூரை வேய்ந்த அறை, இடையில் நடை, மறுகையில் கூரை போட்ட நீண்ட ஹால் மாதிரியான பகுதி"[90] என்று வரும் வீட்டின் வர்ணனை படிப்போரின் கண்முன் நிழலாடும் வகையில் அமைந்துள்ளது.

'சூரியனைப் பார்க்காமல்' என்னும் சிறுகதையில் "எங்கள் ஊர் ரொம்பச் சின்ன ஊர். தீப்பெட்டி மாதிரி முக்கியமான தெருக்களே நாலுதான். நாலில் நடுவாக இருப்பது காந்தி வீதி. அங்குதான் அந்தப் பள்ளிக்கூடம் இருந்தது. நான் படித்த பள்ளிக்கூடம். அந்தப் பள்ளிக் கூடத்தின் சுற்று மதில் சுவர் ரொம்ப உயரமாக இருக்கும். எங்கள் ஊர் சிறைச்சாலை மதிலைக் காட்டிலும் உயரமானது"[91] என அமைந்த வர்ணனையில் ஊர் மற்றும் பள்ளிக் கூடத்தைப் படம் பிடித்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

இதேபோல் 'காணாமல் போனவர்கள்' என்னும் சிறுகதையில் அமைந்த ஊரின் வர்ணனையும், 'ஒரு மனுஷி' என்னும் சிறுகதையில் அமைந்த இட வர்ணனையும் படிப்போரின் ஆர்வத்தினைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது. மேற்கண்ட வர்ணனைகள் அனைத்தும் தேவைக்கேற்ப தேவையான இடத்தில் கதையோட்டத்திற்குச் செறிவூட்டும் வகையில் அமைந்து விளங்குவதைக் காணமுடிகின்றது.

**பின்னோக்கு உத்தி (Flash-back)**

பின்னோக்கு உத்தி என்பது நிகழ்காலத்தில் கதை நிகழும் பொழுது பின்னோக்கிச் சென்று கடந்தகால நிகழ்ச்சியை நினைவு கூறுவது பின்னோக்கு உத்தி ஆகும். சிறுகதைக்கு அதிகம் பயன்படும் உத்தி 'ப்ளாஷ்பேக்' எனப்படும் பின்னோட்ட உத்தி. இது 'நனவுப்பாதை உத்தி'

என்றழைக்கப்படுகிறது. "ஒரு கதையைச் சொல்லிக் கொண்டே போகிற போது கடந்த கால நிகழ்ச்சிகளை ஒரு பாத்திரத்தின் நினைவோட்டமாக எழுத்தாளர்கள் எடுத்துக்காட்டுவர். இதனையே பின்னோக்கு உத்தி அல்லது நினைவுக்காட்சி"[92] என்கிறார் மா.இராமலிங்கம்.

"முன்னர் நடந்ததைப் பின்னர் கூறுவது பின்னோக்கு (Flash back) எனப்படும். முன்னால் நடைபெற்ற செயல்களை வெளியிடும் காட்சியை அமைக்கும் திறன் பின்னோக்கு எனப்படுகின்றது. நாவல், சிறுகதை, நாடகம், திரைப்படம் முதலியவற்றில் அத்திறன் கையாளப்படுகின்றது."[93] என்ற கருத்திலிருந்து அறியலாம்.

'விழுது' என்னும் சிறுகதையில் தன் அப்பா சாமிக்கண்ணுவும், தன் அம்மாவும் வாழ்ந்த வாழ்வை நினைத்துப் பார்க்கிறான் மகன் ரங்கநாதன். இக்கதையில் "ஒரு குடும்பத்தின் கதையை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்த குடும்பத்தின் 'அ'வாக இருப்பவர் எங்கள் அப்பா"[94] என்று தொடங்கும் ரங்கநாதன் தன் அப்பா, அம்மாவின் கடந்தகால வாழ்வைக் கூறுவதாகக் கதை நிகழ்கின்றது. இச்சிறுகதை பின்னோக்கு உத்தியில் தொடங்கி நிகழ்காலத்திற்கு வரும் இயல்பினைக் காணமுடிகின்றது. இச்சிறுகதை பாத்திரத்தின் கூற்றாக அமைந்து வருகின்றது.

'சூரியனைப் பார்க்காமல்' என்னும் சிறுகதையிலும் தான் படித்த பள்ளிக்கூடத்தின் நினைவுகளைக் கூறும் வகையில் பின்னோக்கு உத்தி அமைந்திருக்கிறது. இக்கதையில் ஆசிரியரே பின்னோக்கு உத்தியில் கடந்த கால நிகழ்வுகளைக் கூறுவதாகக் கதை அமைந்துள்ளது. இச்சிறுகதையில் தான் படித்த பள்ளிக்கூடம் பற்றியும் படிக்கும் போது இருந்த மிட்டாய் தாத்தா பற்றியும் நினைவு கூறுகிறார் ஆசிரியர். நிகழ்விற்கு வரும் இடத்தில் "நான் படித்த பள்ளிக்கூடத்திலேயே என் பையனும் படிக்கிறான்"[95]

என கதையின் நாயகனாக ஆசிரியரே அமைந்து தனது எண்ண ஓட்டத்தில் பள்ளி வாழ்க்கையைப் பின்னோக்கில் காட்டிவிட்டு நிகழ்விற்கு வருமிடத்தில் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். இதேபோல் 'அரி என்கிற நண்பன்' என்னும் சிறுகதையிலும் பின்னோக்கு உத்தி அமைந்துள்ளது. இச்சிறுகதையில் அரி என்கிற நண்பனைப் பற்றி ஆசிரியரே கதாநாயகனாக இருந்து கடந்தகால நிகழ்வை நினைத்துப் பார்ப்பதாக இக்கதை நிகழ்கின்றது.

'இராஜகோபுரமும் சங்கப் பலகையும்' என்னும் சிறுகதையில் நிகழ்காலத்தில் தொடங்கிய சிறுகதை முதல் நாள் நிகழ்வைப் பின்னோக்கு உத்தியில் நினைத்துப் பார்ப்பதாக அமைகின்றது.

"பல மாதங்களுக்குப் பிறகு தங்கவேலுவும் கிருஷ்ணமூர்த்தியும் வெட்டாற்றங்கரைப் படிக்கட்டில் அமர்ந்து பழைய ஞாபகங்களைக் கிளரிக் கொண்டிருந்தார்கள்"[96] என சிறுகதையின் பின்னோக்கு உத்தியை இடையில் அமைத்துள்ளார் ஆசிரியர். 'யாரும் படிக்காத கடிதம்' என்னும் சிறுகதையில் எஸ்.நடராஜன் தன் கடந்தகால நிகழ்வுகளைக் கடிதத்தின் மூலம் நினைவூட்டுவதாகப் பின்னோக்கு உத்தி அமைந்துள்ளது. 'அபஸ்வரம்', 'அமரத்துவம்' என்னும் சிறுகதைகளிலும் பின்னோக்கு உத்தி அமைந்துள்ளது.

மேற்கண்டவைகளின் வழி பிரபஞ்சன் பல்வேறு திறத்தில் பின்னோக்கு உத்தியைத் தனது சிறுகதைப் படைப்பில் கையாண்டிருப்பதை உணரமுடிகின்றது. இவை கதையின் கருப்பொருளுக்கு ஏற்பவும் கதைமாந்தரின் மன உணர்வு வெளிப்படும் வகையிலும் அமைந்துள்ளதை உணரமுடிகின்றது.

**பிரபஞ்சன் படைப்புகளில் பின்புலம்**

"புறத்தகவல்களைப் பின்புலம் அல்லது பின்னணி எனக்கூறலாம். இது இலக்கியத்தில் ஒரு கருத்தை அல்லது நிகழ்வினை உரியமுறையில்

வெளிப்படுத்திக் காட்டுவதற்குப் பயன்படுகின்றது. கதை நிகழ்ச்சியில் வாசகருக்குக் குறிப்பிட்டதொரு உணர்வு நிலை தோன்றுவதற்கு உதவுகின்றனவற்றைப் பின்புலம் எனக்குறிப்பிடுகின்றனர். இப்பின்புலத்தை இடத்திற்கு ஏற்றார் போல் விரிவாகவும் செம்மையாகவும் காட்டமுடியும் உணர்ச்சிக் கூறுகளை முனைப்பாகச் செம்மையாகவும் காட்டமுடியும் உணர்ச்சிக் கூறுகளை முனைப்பாகக் காட்டப் பின்புலம் ஒன்றே சிறந்த வழியென்று கூறுவர்''[97]

இக்கருத்திலிருந்து பின்புலத்திற்கு விரிவானதொரு விளக்கத்தைக் காணமுடிகின்றது. இக்கருத்தினடிப்படையில் பிரபஞ்சனின் படைப்புகளில் பின்புலமாக அவரது புனைக்கதை நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் ஒரு காலத்தில் நிகழ்வதாகவும், ஒரு களத்தில் ஒரு சூழலில் நிகழ்வதாக அமையும். இவை கதைக்கு உதவும் வகையிலும் சில சிறுகதைகளில் மையப் பொருளாகவும் அமைந்துள்ளன. பிரபஞ்சனின் புனைக்கதைகளில் மூன்று வகைப் பின்புலங்களைக் காணமுடியும். அவை, இடப்பின்புலம், காலப்பின்னணி, சமுதாயப் பின்னணி என்பவையாகும்.

“மலை, குன்று, நாடு, நகரம், காடு, இல்லம், அலுவலகம் முதலியவற்றைக் களமாகக் கொண்டு இடப்பின்புலம் அமைக்கப்படுகின்றது. புனைகதைகளில் காலப்பின்னணி, இடப்பின்புலத்துக்கு அடுத்த இடத்தைப் பெறுகின்றது. நாள், திங்கள், ஆண்டு ஆகிய காலப்பகுதியில் கதை நிகழ்வுகள் நடக்கும் தன்மையைக் காலப்பின்னணி எடுத்துக் கூறுகின்றது. அரசியல், பொருளாதாரம், கலை, பண்பாடு, நாகரீகம், மதம், இனம், சாதி, கொள்கைகள் முதலியவற்றை அவற்றுக்குரிய சூழலோடு விளக்கிக் காட்டுவது சமுதாயப் பின்னணியாகும்''[98] மேற்கண்ட மூன்று வகைப்பட்ட பின்புலங்களையும் பிரபஞ்சனின் சிறுகதைப் படைப்புகளில் காணமுடியும்.

**இடப்பின்னணி**

பிரபஞ்சன் புனைகதைகளில் வீடு, குளக்கரை, வேலைவாய்ப்பு அலுவலகம், ஹோட்டல், பள்ளி, கல்லூரி, சினிமா தியேட்டர், படப்பிடிப்புத் தளம், நீதிமன்றம் போன்றவை இடப்பின்புலமாக அமைகின்றன.

'ஒரு பகல் நேர நாடகம்' என்னும் சிறுகதையில் வேலைவாய்ப்பு அலுவலகத்திற்குச் செல்லும் நடராஜனுக்கு அவன் படிப்பைப் பதிவு செய்ய ஒரு பகல் முழுவதும் செலவாகின்றது.

"நடராஜன் ஆபிஸை விட்டு வெளியல் வரும்போது மணி ஐந்தை நோக்கிக் கொண்டிருந்தது"[99] என்பதிலிருந்து அறியலாம்.

ஒரு சிறுகதை மட்டும் வேலைவாய்ப்பு அலுவலகத்தைச் சுற்றியே நிகழ்வதாகவும், அங்கு நடக்கும் நிகழ்வுகளையும், அங்குள்ள அலுவலர்களின் மெத்தனப் போக்கையும் இக்கதையோட்டத்தின் வழியே ஆசிரியர் சுட்டுகின்றார். இங்கு வேலைவாய்ப்பு அலுவலகம் பின்புலமாக அமைகின்றது.

இதேபோல் 'தலை சாய்க்க' என்னும் சிறுகதையில் வீடும், 'சூரியனைப் பார்க்காமல்' என்னும் சிறுகதையில் பள்ளிக்கூடமும் 'வரிசை' என்னும் சிறுகதையில் சினிமா தியேட்டரும், 'வடு' என்னும் சிறுகதையில் கல்லூரியும், '4வது வழி' என்னும் சிறுகதையில் ஹோட்டலும், 'கதாநாயகி குளித்தகதை' என்னும் சிறுகதையில் படப்பிடிப்புத்தளம், 'பாதுகை' என்னும் சிறுகதையில் நீதிமன்றமும் போன்றவை இடப்பின்னணிகளாக அமைந்துள்ளது. இவை அனைத்தும் சிறுகதைக்கு ஏற்றார்போல் கதை அமைந்த சூழலுக்குத் தகுந்த வகையில் பின்புலமாக அமைந்துள்ளது.

**காலப்பின்னணி**

பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் காலத்தைப் பின்புலமாகக் கொண்டு சிறுகதைகள் இயற்றியுள்ளார். அவற்றில் பொழுது, நாள் போன்றவை பின்னணியாக அமைந்துள்ளது. ‘ஒரு பகல் நேர நாடகம்’ என்னும் சிறுகதைப் பகல் பொழுதையும், ‘தலை சாய்க்க’ என்னும் சிறுகதை இரவுப் பொழுதையும் மையமாகக் கொண்டு திகழ்கின்றது.

நடராஜன் வேலைவாய்ப்பகத்தில் தனது படிப்பைப் பதிவு செய்யப் பகல் பொழுதைக் கழிக்கின்றான். எனவே கதையும் பகல் பொழுது முடியும் வரை நிகழ்கின்றது. இதனை ‘ஒரு பகல் நேர நாடகம்’ சிறுகதையில் காணலாம். இதேபோல் மழைகொட்டும் அந்த இரவு வேலையில் தன் சிறிய வீட்டில் மாமியையும், தங்கையையும், மனைவியையும் தங்க வைத்து, தான் வெளியே இரவு முழுவதையும் கழிக்கின்றான கதை நாயகன். இதனை,

“நான் திரும்பி வரும்போது எல்லோரும் கல்யாணத்துக்குப் போயிருப்பார்கள். நான் நிம்மதியாகத் தூங்கலாம். இரவெல்லாம் விழிப்புப் தலை ஈரமும் சேர்ந்த நெற்றி ‘விண் விண்’ என்று தெறித்துவிடும் போல் இருந்தது. உடம்பு அலையாய்க் கொதித்தது”[100] என்பதிலிருந்து இச்சிறுகதை இரவிலேயே நிகழ்வதை அறியமுடிகின்றது.

‘பூக்களை மிதிக்கக்கூடாது’ என்னும் சிறுகதை காலை முதல் மாலை வரை கதை நிகழ்வதாக அமைகின்றது. மேற்கண்டவற்றின் மூலம் இவை சிறுகதையின் இடத்திற்கு ஏற்றார் போல அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

**சமுதாயப் பின்னணி**

சமுதாயத்தைப் பின்னணியாக வைத்து எழுதப்பட்ட சிறுகதைகளையும் பிரபஞ்சன் படைத்துள்ளதைக் காணமுடியும். அரசியல், பொருளாதாரம், கலை, பண்பாடு, நாகரிகம், மதம், இனம், சாதி, கொள்கைகள் ஆகியவற்றைப் பின்னணியாகக் கொண்டு சிறுகதைகளை அமைத்துள்ளார்.

“ஊருல நமக்கு மதிப்பு ஜாஸ்தி தெரியுமா வேற ஒண்ணுமில்ல ‘செங்குந்த முதலியார் சங்கம்னு’ ஒண்ணு ஆரம்பிச்சிருக்கேன். சங்கம் ஆரம்பிச்ச பின்னால் அவனவன் நடுங்கிக் கிடக்கின்றான்க”[101] என்பதிலிருந்து இனப் பின்னணியில் இச்சிறுகதை அமைந்துள்ளதை அறியலாம். சமுதாயத்திலுள்ள பல்வேறு பிரிவினர் சங்கங்கள் அமைத்து தங்கள் இனத்தை வளர்க்கும் போக்கைக் கதையோட்டத்தில் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

இதைப்போல ‘தந்தையும் மகனும்’ என்னும் சிறுகதை அரசியலைப் பின்புலமாகவும் ‘தியாகி’ என்னும் சிறுகதை கொள்கையை அடிப்படையாகக் கொண்டும், ‘காயப்பட்ட மாலை வானம்’ என்னும் சிறுகதை கலையைப் பின்புலமாக கொண்டும், ‘ஒரு ஏழை நாடும் ஒரு பரம ஏழையும்’ என்னும் சிறுகதையும், ‘வர்க்கம்’ என்னும் சிறுகதைகள் பொருளாதாரத்தை மையமாகக் கொண்டும் எழுதப்பட்டது.

மேற்கண்டவற்றிலிருந்து சமுதாயப் பின்னணியாகக் கொண்டு அமைந்த சிறுகதைகளை இங்குக் காணலாம். இவைச் சமுதாயத்தோடு ஒன்றிய அரசியல், பொருளாதாரம், கலை, கொள்கைகள் முதலியவற்றைப் பின்புலத்தில் கொண்டு கதைக்கேற்ற உணர்ச்சிக் கூறுகளோடு அமைந்துள்ளதை அறிய முடிகின்றது.

**நடை (Style)**

Style என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல் 'நடை' எனப்படுகிறது. சிறுகதைக்கு முக்கியத்துவம் தருவது மொழிநடை ஆகும். ஒவ்வொரு இலக்கிய ஆசிரியனுக்கும் தனித்த மொழி நடை உண்டு. ஒரு நல்ல சிறுகதை ஆசிரியரை அவரது நடை வாயிலாகவே நாம் இனங்கண்டு கொள்ளலாம்.

"நடை என்பது விசயத்தைக் குழப்பாமல் சிரமமின்றிப் படித்த மாத்திரத்தில் புரியக்கூடியதாக இருக்க வேண்டும்"[102] என்கிறார் தாசன்.

"நடை என்பது ஓர் ஆசிரியரின் தனித்தன்மையை வெளிப்படுத்த வல்லது. அவரை இனங்கண்டு கொள்ளும் வகையில், அவருக்கே உரியதாக விருக்கும் வெளிப்பாட்டு மொழிப்பாங்கே அது. இலக்கியத்தில் அதுவே மிகப்பெரிய சாதனை என்று கூறுகிறார் முர்ரே"[103]

ஒரு படைப்பாளனின் படைப்புத் திறனை அவர் அமைத்த மொழி நடையின் மூலம் அறிந்து கொள்ளலாம். அம்மொழி நடை. ஒவ்வொருத்தருக்கும் வேறுபட்டு அமையும் நல்ல நடை என்பது படிப்பவர்களுக்கு ஆர்வத்தை விளைவிக்க வேண்டும் என்பதையும் "நல்ல நடை என்பது படிப்பவரைக் கடைசிவரைச் சலிப்பூட்டாமல் தன்னோடு இழுத்துச் செல்ல வேண்டும்"[93] என்னும் கருத்திலிருந்து அறியலாம்.

**மொழி நடை ஆய்வுக்கான காரணம்**

ஒரு சிறுகதைப் படைப்பின் கருத்து வெளிப்படுவதும் வெளிப்படாமல் போவதற்கும் அச்சிறுகதைப் படைப்பாளன்

மொழிநடையைப் பயன்படுத்தும் முறையிலேயே அமைந்திருக்கின்றது. ஆகவே சொற்களின் மூலம் கருத்தை வெளிப்படுத்தும் கருவியாக அமையும் நடையை ஆராய்தல் இன்றியமையாத ஒன்றாக அமைகின்றது.

இவற்றிலிருந்து ஒரு ஆசிரியரின் நடையை ஆராய முற்படும் போது அவரது தனிப்பட்ட சொந்த நடையும், அவர்களது கதை சொல்லும் முறையும், கதைமாந்தர் வழியாக வெளிக்காட்டும் மொழியினையும் காணமுடியும் என்பதை அறியமுடிகிறது. படைப்பாளனின் இலக்கியத் திறனை ஆராய்வதற்கும், மொழியாராய்சிக்கும் நடை ஆய்வு பயன்படுகிறது என்பதை உணர முடிகின்றது.

**பிரபஞ்சனின் நடை வகைகள்**

பிரபஞ்சனின் நடை எளிமையால் சிறப்புறுகின்றது. சில இடங்களில் கலப்பு நடையில் அமைந்துவருகின்றது. தெளிவாகவும், இனிமையாகவும் அமைந்து வருகின்றது. தெளிவாகவும், இனிமையாகவும் அமைந்து, தனித்தன்மை வாய்ந்தாக அவரின் நடை விளங்குகின்றது.

**உணர்வு வெளிப்பாட்டு நடை**

உணர்வுகளை உரையாடல் மூலம் முழுமையாகச் சொல்லிவிட முடியாது. பாத்திரங்களின் உணர்வுகளை வெளிப்படுத்துவது படைப்பாளனின் நடையே ஆகும்.

“பாத்திரப் பண்புகளை உரையாடலில் சொல்வதைப்போல் உணர்வுகளையும் உரையாடலில் முழுமையாகச் சொல்லிவிட முடியாது. ஆசிரியர் நடை தான் இதைச் சாதிக்கும்”[105] அந்த வகையில் பிரபஞ்சனின் கதையில் அமைந்த கதாபாத்திரங்களின் உணர்வுகளைப் படிக்கும் போது அதே உணர்வு படிப்பவர்க்கும் ஏற்படும் வண்ணம் அமைந்திருப்பதைக்

காணமுடியும். உணர்வுகளை வெளிப்படுத்துகின்ற நடை பெரும்பாலும் பிரபஞ்சனின் பல சிறுகதைகளில் இடம் பெற்றிருக்கின்றது.

'பலி' என்னும் சிறுகதையில் மனிதனின் நிஜமுகத்தை வெளிப்படுத்துகின்ற உணர்ச்சி நடையைக் காணலாம். "மனுஷாள் எவ்ளோ அரக்காள மாறிப்போயிட்டா பார்த்தேளா? பணம், காசு, பதவின்னா எதையுமே விட்டுத் தயாரா நிக்றா பார்த்தேளா? பதவிக்காகப் பிள்ளைகளைப் பலி கொடுக்கிறதாச் சொல்றீங்க... ஸ்வாமி... பிள்ளைக்காக மத்த மனுஷாளப் பலி வாங்கறவாள்ளம் இப்போ பதவிக்கு வந்திருக்கறதப் பாத்தேளா?"[106] இதில் உணர்ச்சியோடு கூடிய ஆதங்கத்தையும் வெளிப்படுத்தியுள்ளார் ஆசிரியர். இங்குப் பாத்திரத்தின் உணர்ச்சியை உயிரோட்டமாக வெளிப்படுத்தியது ஆசிரியரின் நடையாகும்.

'விருது' என்னும் சிறுகதையில் ஆசிரியர் உணர்வுகளை வெளிப்படுத்தும் நடையை கையாண்டுள்ளார். "எங்கள் பாட்டி கதை கதையாய் இவற்றை எங்களுக்குச் சொல்லியிருக்கிறார். சொல்லும் போதே தொண்டை அடைத்துக்கொள்ளும் அவருக்கு கரகரவென்று கண்களில் நீர் பொங்கும், மடியில் படுத்துக்கொண்டு கதை கேட்கும் என் முகத்திலும் துளி, சமயங்களில் விழும்"[107] இச்சிறுகதையில் படிப்போர் மனதிலும் துன்பத்தை ஏற்படுத்தும் வார்த்தைகளை அமைத்து எழுதியுள்ளார் பிரபஞ்சன்.

'ஆண் பிள்ளை' என்னும் சிறுகதையில் கோப உணர்ச்சியைப் பிரதிபலிக்கும் வகையிலும், 'ஒரு வித்யாவின் கதை' என்னும் சிறுகதையில் துன்ப உணர்ச்சியை வெளிப்படுத்தும் வகையிலும் பல்வேறுபட்ட உணர்ச்சிகளைத் தம் சிறுகதைகளில் தக்க இடத்தில் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். மேற்கண்டவற்றின் வழி ஆசிரியர் சிறுகதையின் தேவைக்கும்,

அவசியத்திற்கும், சம்பவத்திற்கும் ஏற்ப உணர்ச்சி வெளிப்பாட்டை அமைத்துச் சிறப்பித்துள்ளதை அறியமுடிகின்றது.

**கவிதை நடை**

சில படைப்பாளர்கள் தமது படைப்புகளில் வாசிப்புச் சுவைக்காகச் சில இடங்களில் ஒரு வரி அல்லது சில வரிகளைக் கவிதைச் சாயலுடன் அமைப்பர்.

"நீக்கல் உத்திகள், பொது மொழியிலிருந்து பிறழ்ச்சிகள் மடக்குக் கூறுகள், அறுகிய வழக்குச் சொற்கள் போன்றவை கவிதைக்கான பண்புகளாகும் என்று நடையியல் நூல் கூறுகின்றது"[108] இப்பண்புகளுடன் கூடிய கவிதையில் அமைந்த நடையை படைப்பாளர்கள் தங்கள் படைப்புகளில் பயன்படுத்துகின்றனர். இங்ஙனம் சுவைபட அமைந்த கவிதை நடை உத்தியைப் பிரபஞ்சனும் தனது சிறுகதைகளில் படைத்துள்ளார்.

"தவளைமேல் தவழ்ந்திருந்த பாத்திரம்"

"பெரிய நிலாவொன்று சிவந்து
எதிர் வீட்டு மாடிக்கு பக்கத்தில்
எழுந்து கொண்டிருந்தது"[109]

"இடையூறு இல்லாத வானத்தில் ஒரு முழுநிலா"[110]

"பேருந்தில் இடம் தேடி மனிதர்கள்
மனிதர்களைத் தேடி ஆரோக்கியம் தரும் பழங்கள்
மறுநாள் காலையிலேயே லட்சாதிபதியாக்குகிற
லாட்டரி சீட்டுகள்"[111]

"மன நிறைவை வெளிக்காட்டும் சிரிப்பு
சினேகிதத்தை வரவேற்கிற சிரிப்பு"[112]

என்னும் தொடர்களில் இருந்து அறியலாம். ஒரு படைப்பாளி கவிஞராகவும், கதையாசிரியராகவும் இருக்கும் போது மட்டுமே இம்மாதிரியான புதுவடிவச் சிறுகதைகளைப் படைக்க முடியும். அந்த வகையில் பிரபஞ்சனும் ஆரம்ப காலத்தில் கவிஞராக இருந்துள்ளதால் கவிதை நடை உத்தியை இயல்பாகவும், நேர்த்தியாகவும் அமைத்துள்ளதைக் காணமுடிகின்றது. இவற்றின்வழி பிரபஞ்சனின் கவிமனத்தையும் உணரமுடிகின்றது.

**நகைச்சுவை நடை**

இன்ப துன்பங்கள் கலந்த வாழ்க்கையைச் சித்திரிக்கும் சிறுகதையில் நகைச்சுவை இடம்பெறுதல் படிப்போரின் ஆர்வத்தை தூண்ட இடமளிக்கிறது. நகைச்சுவையாகப் பேசக்கூடிய பார்க்கக்கூடிய விஷயங்களை சிறுகதையில் புனையும் போது நகைச்சுவை நடை அமைகின்றது.

“அதற்குள் கால்சட்டை முடிச்சு அவிழ்ந்து தொடை வழியாக வந்தது. அதை இடுப்புக்குக் கொண்டு வந்து இழுத்துச் சொருகி அரணாச் கயிறை கால்சட்டைக்கு மேல் விட்டுக் கொண்டான்”[113] என்று ‘ரகு’ என்ற சிறுவனின் கால்சட்டை அவிழ்ந்த விதத்தை நகைச்சுவை தோன்றக் கூறியுள்ளார். இதேபோல் ‘ராட்ஸசக் குழந்தை’ என்னும் சிறுகதையில், கிருஷ்ணமூர்த்தியின் தலையைப் பற்றிக் கூறுகின்றார் ஆசிரியர்.

> “ஒன்னேகால் ரூபாய்க்கு இப்ப எவன்டி வெட்றான்?”
>
> “இது வெட்டினது இல்லே அது கடிச்சு எடுத்தது மாதிரி இருக்கு”
>
> “எது?”
>
> “கிருஷ்ணமூர்த்தி விளக்கெண்ணெய்த் தடவிக்கிட்டு
> படித்திருப்பான் பெருச்சாளி ஏதோ வந்து அங்க இங்க
> கடிச்சுக் குதறிட்டுப் போயிருக்கும்”[114]

என்று கிருஷ்ணமூர்த்தி முடிவெட்டிக் கொண்டபொழுது அவன் தலைமுடி இருந்த கோலத்தை நகைச்சுவையாக வர்ணிக்கிறார். இதுபோன்ற நடையைப் பிரபஞ்சனின் பல சிறுகதைகளில் காணமுடிகின்றது. வாழ்க்கையில் நடக்கும் யாதார்த்தமான நிகழ்வுகளைத் தம் சிறுகதைகளில் நகைச்சுவையுடன் பின்னிக் கொடுத்துள்ளார். இவை ஆசிரியரின் படைப்பு நுட்பத்தையும் நகைச்சுவை உணர்வையும் வெளிப்படுவதை அறியமுடிகின்றது.

**தருக்க நடை**

தருக்கம் என்பது விவாதத்தைக் குறிக்கும். விவாத அடிப்படையில் அமைந்த உரையாடல்கள் சுவையைக் கூட்டும் வகையில் அமையும். தருக்க நடை படைப்பிலக்கியத்தில் மிக முக்கியமான இடத்தைப் பெறுகிறது. இது படைப்பிற்கு ஆரோக்கியத்தையும், எதிர்பார்ப்பையும் ஏற்படுத்திச் செல்லும் இந்த வகையில் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் தருக்க நடையைப் பயன்படுத்தியுள்ளார்.

'இராஜகோபுரமும் சங்கப் பலகையும்' என்னும் சிறுகதை திருவிளையாடல் புராணத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது. அக்கதையில், கீரரோடு சிவன் செய்த தருக்கத்தைச் சுவைபட அமைத்து தருக்க நடையைக் கையாண்டுள்ளார்.

> "கீரரே! பெண்கள் கூந்தலுக்கு இயற்கையில் மனம் இல்லை என்பது தான் உமது கட்சியா?
>
> 'கட்சி இல்லை கருத்து'
>
> 'உத்தம ஜாதிப் பெண்களுக்குக் கூடவா?'

'பெண்களுக்கு மத்திமமும் உத்தமமும் பிறப்பால்
வருவதல்லவே! வளர்ப்பால் வருவது, பிறப்பால்
இயற்கையால் யார் கூந்தலுக்கு மனம் இல்லை'

'இதற்கு என்ன ஆதாரம்'

'என் வாழ்க்கை அனுபவங்களும், அனுபவம் தந்த
ஞானமுமே ஆதாரம்'

'நீர் எம்மைவிட எல்லாம் அறிந்தவரோ?' "[115]

என்ற உரையாடல் தருக்க நடையில் அமைந்துள்ளது. தருக்க நடை அனைத்தும் தமது படைப்பில் செறிவூட்ட அமைக்கப்பட்ட உத்திமுறைகளுள் ஒன்று. இவை பாத்திரத்தின் உணர்வுகளையும், பண்பு நலன்களையும் வெளிப்படுத்தி நிற்கின்றன.

**குறியீட்டு நடை**

சிறுகதை ஆசிரியர்கள் தமது கருத்துக்களை வெளிப்படுத்த சில பொருள் பொதிந்த சொற்களைக் குறியீடாகப் பயன்படுத்துவர். இவ்வாறு குறியீடுகளால் அமைந்த தொடர்களைச் சிறுகதை ஆசிரியர்கள் தமது படைப்பில் கையாளும் முறைக்குக் குறியீட்டு நடை எனப்படுகின்றது. அவ்வாறாக அமைந்த குறியீட்டுச் சொற்களை நாம் வழக்கத்திலும் பயன்படுத்துகிறோம்.

"நிறங்கள் சில பொருள்களுக்குள்ள அர்த்தங்களுக்கு அடையாளமாகக் கருதுவது பழக்கத்தில் இருக்கிறது. கறுப்பு என்றால் துக்கம், வெள்ளை என்றால் தூய்மை அல்லது சமாதானம், சுவர் என்றால் தடை, சிறகு என்றால் விடுதலை அல்லது உயர்வுக்கான வழி இவற்றை இலக்கிய வழக்கில் குறியீடுகள் என்பர்"[116]

அவ்வகையில் பிரபஞ்சன் தமது சிறுகதையில் பல இடங்களில் குறியீடுகளை மொழி நடையில் பயன்படுத்தியுள்ளார். ‘முறிவு’ என்னும் சிறுகதையில் “புலியே பசிக்குதென்றாயே, என்னைப் புசியேன், பட்சியேன் ஏன் வெறுமே நின்று பார்த்துக் கொண்டிருக்கிறாய். பார்த்தால் பசி தீருமோ? என்னை எடுத்துக்கொள் உன் கூர் நகங்களை விரி, என்மேல் படர், என்னைக் கீறி எறி, உன் வளைந்த பற்களால் என்னைக் கடித்து குதறு” மாட்டாயா ஏன் மாட்டாய் இரக்கமா? ஏன் உன் பட்சனத்துக் கெனவே நான் படைக்கப்பட்டிருக்கையில் உன் இரக்கம் எனக்கு அவமானம், ஊம் என்னை அடித்து வீழ்த்து, புலி தன் பல்போன வாயால் சிரித்தது. நகங்கள் அற்ற நொண்டிக் கைகளால் தடவிக் கொடுத்தது”[117]

இத்தொடர்களில் காணப்படும் மான் ஒரு பெண் புலி, ஒரு ஆண் இக்கதையில் வரும்நாயகன் ஆண்மை அற்றவன். மானே விரும்பி வந்தும், புலி அதனை உண்ணாமல் பல்லில்லா வாயால் சிரித்து நகங்கள் அற்ற கையால் தடவியது என்பது நாயகனின் நிலையைச் சுட்டுகின்றது. புலி பார்க்கப் புலியாக இருந்தாலும் புலியின் செயல் அதனிடம் காணப்படவில்லை. கதையில் வரும் நாயகன் ஆணாகக் காட்சி தந்தாலும் அவன் ஆண் இல்லை என்பதை உணர்த்த புலியை குறியீடாக அமைத்துள்ளார் பிரபஞ்சன்.

“ ‘மாமன் உறவு’ என்னும் சிறுகதையில் ‘சிவப்பு முக்கோணம்’ கண்டு பிடிக்கப்படாத காலத்தில் அம்மா பிறந்தவள்”[118] என்று பொருளமைந்த குறியீட்டைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர். இதில் ‘கருத்தடை சாதனம்’ என்ற சொல்லிற்கு சிவப்பு முக்கோணம் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

மேற்கண்ட குறியீடுகள் கதைப் பொருளுக்கு வலுசேர்க்கும் வகையில் மறைமுகமாக வந்து படிப்போருக்கு நேரடிப் பொருளை

உணர்த்துகின்றது. இவை ஆசிரியரின் கலை நுட்பத்தினை வெளிப்படுத்துகின்றது.

**நனவோடை நடை**

முன்பு நிகழ்ந்த நிகழ்வுகளோ, தன்னொத்த பாத்திரத்தைப் பற்றிய சிந்தனையையோ நம் மனதில் பதிந்து பலவேறு எண்ணங்களோ புத்துயிர் பெற்று நினைவுக்கு வருவது நனவோடை எனலாம். இந்த 'நனவோடை' என்ற தொடரைப் பற்றி முதன் முதலில் 'வில்லியம் ஜேம்ஸ்' என்னும் அறிஞர் 1890ல் பிரின்ஸ்பல் ஆப் சைக்காலஜி என்ற நூலில் வெளிப்படுத்துகின்றார். நனவோடை என்பதை அவர்,

"மனதில் பதிவு செய்யப்பட்ட பல்வேறு எண்ணங்கள், உணர்ச்சிகள், கண்ணோட்டங்கள் ஆகியவை கட்டுப்பாடற்ற அளவிலுள்ளது. இவ்வாறு பதிவு செய்யப்பட்டவை நமக்கு அன்றாடம் நடக்கும் ஏதாவது செயல்களினால் புத்துயிர் பெறுகின்றன. இவை கோர்வையின்றி ஒன்றுக்கொன்று தொடர்பின்றியும் தோன்றலாம். பதிவு செய்யப்பட்ட எண்ணங்கள் எந்த ஒரு குறிப்பிட்ட ஒழுங்குடனும் இருப்பதில்லை. நிகழ்காலத்தின் செயல்களில் அல்லது எதிர்காலச் சிந்தனையில், இறந்தகால நினைவுகளில் நினைவோட்டங்கள் வரலாம்"[119] என்று மனித மனத்தின் நினைவோட்டம் பற்றிக் கூறுகிறார். இந்த நினைவோட்டத்தை படைப்பாளர்கள் தங்கள் படைப்புகளில் பயன்படுத்துவது நனவோடை உத்தி எனப்படுகின்றது.

"இன்னேரம் சுமதி என்ன செய்து கொண்டிருப்பாள் சாப்பிட்டிருக்க மாட்டாள், தன்னைப் பற்றி தான் நினைத்துக் கொண்டிருப்பாள்"[120] என்ற வரிகள் நடராஜன் தன் மனைவி சுமதியைப் பற்றி நினைத்துப் பார்ப்பதாக உத்தியை அமைத்துள்ளார். இது நிகழ்காலத்தில் தன் மனைவி பற்றிய சிந்தனையாக அமைந்துள்ளது.

இங்ஙனம் பல சிறுகதைகளில் நனவோடை உத்தியைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர். மேற்கண்டவற்றின் வழி இடத்தையும் காலத்தையும் கடந்து பாத்திரங்களின் எண்ண ஓட்டத்தில் அமைந்த நினைவுகளை ஆசிரியர் சிறுகதைக்குப் பொருந்தி அமையும் வகையில் படைத்துள்ளதை அறியமுடிகின்றது. இவை கதையோட்டத்திற்கு உதவும் பாங்கில் அமைந்துள்ளது சிறப்பு.

**உவமைகள்**

உவமை என்பது தெரிந்த ஒன்றைக்கூறி தெரியாத ஒன்றை விளக்குவது அல்லது தெரியாத ஒரு பொருளை விளக்கும் போது அதனோடு ஒத்த வேறொரு பொருளைச் சுட்டிக்காட்டி இதுபோல் அது என விளக்குவதாகும்.

"வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்"[121]

எனத் தொல்காப்பியரும் உவமைபற்றி ஒரு இயலையே வடித்துள்ளார். இவ்வாறு அமைந்த உவமை படைப்பு இலக்கியங்களில் படிப்போருக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தும் வகையில் அமைவதாகும். இதுவே உவமையின் நோக்கமாகவும் அமைகிறது.

"உவ+மை என்று பிரித்து, உவ என்ற அடிச்சொல்லின் வாயிலாகப் பிறந்த சொல் உவமை எனலாம். உவத்தல், உவகை என்பன போன்ற சொற்களும் 'உவ' என்ற அடிச்சொல்லின் வாயிலாகப் பிறந்தவையே மேலே குறிப்பிட்ட சொற்களெல்லாம் மகிழ்தல், மகிழ்ச்சி, தருவது என்ற பொருள்களையே சுட்டும். ஆகவே உவமையின் நோக்கம் கேட்போருக்கோ, படிப்போருக்கோ மகிழ்ச்சி தருவதாகும்"[122] என்னும்

கருத்திலிருந்து அறியலாம். அந்த வகையில் பிரபஞ்சன் வாசகனுக்கு மன மகிழ்ச்சியை ஏற்படுத்தும் வகையில் உவமைகளை அமைத்துள்ளார்.

"வெள்ளையான நரைத்த மயிரைப் போல
பூக்கள்"[123]

"சின்னக் குழந்தையின் விரல்களைப் போல
ஈரம் கலந்த காற்று"[124]

"கன்றுக்குட்டி மாதிரி நின்றிருந்தது சைக்கிள்"[125]

"சிலேட்டில் எழுதி வழித்தும் அழியாத எழுத்து
மாதிரி மங்கலான இருள் பிரியாத சூரியனுக்கு
முந்தய காலை பொழுது"[126]

"ஒரு குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்துக்
கொண்டிருக்கிற அம்மா மாதிரி இருந்தது மரம்"[127]

"சின்னப்பை மாதிரி இருந்தது அந்த சின்னவாசல்"[128]

என அமைந்த உவமைத் தொடர்கள் அனைத்தும் ஆசிரியரின் தமிழ்ப் புலமையையும், இலக்கியப் பயிற்சியினையும் காட்டுவதாக உள்ளது. இவ்வுவமைகள் அனைத்தும் கதை நிகழ்ச்சிகளை சுவைபட விளக்குவதற்கு உதவுகின்றது.

**உருவகம்**

உணர்ச்சிகளைப் பெருக்கும் ஆற்றலை சிறு சிறு சொற்களாலும் வெளிப்படுத்துவது உருவகம். "இரண்டு பொருளையும் வேறு வேறாகக் காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றைக் கண்டால் அது உருவகம்"[129]

இவ்வாறாக அமையும் உருவக அமைப்பினை பிரபஞ்சன் சிறுகதைகள் உத்திகளாகப் பயன்படுத்துவதைக் காணலாம்.

"தங்கப் பொட்டாய் மஞ்சளாகிப் பழுத்துப்போன இழைகள்"[130]

"அப்பா வாழ்ந்த போது கூடவே இருந்து பலன் கண்டவர், ஒரு மனித அட்டை"[131]

"மஞ்சள் வெண்ணையில் குங்குமப் பொட்டுக் கலந்த மேனி"[132]

"இன்று முதல் நாங்கள் இரட்டைக் குழல் துப்பாக்கியாகச் செயல்பட இருக்கிறோம்"[133] என்பது போன்ற உருவகங்களை ஆசிரியர் சிறுகதைகளில் படைத்துச் சிறப்பித்துள்ளார். பிரபஞ்சன் தன் சிறுகதைகளில் இவ் உருவகங்களைக் கையாண்ட விதம் படிக்கும் வாசகனின் உள்ள உணர்ச்சிகளைத் தூண்டும் வகையில் அமைந்திருப்பது தெளிவாகும். மேலும் சின்னச்சின்ன சொற்களைப் பயன்படுத்தி அவர் அமைத்திருக்கும் உருவகங்கள் படிப்பவரின் உள்ளத்தைச் சுண்டி இழுப்பதாக அமைகின்றது.

**இரட்டைக்கிளவி**

பிரித்தால் பொருள் தராத வகையில் அமைவது இரட்டைக்கிளவி ஆகும்.

"இரட்டைக்கிளவி இரட்டிற் பிரிந்து இசையா"[134] என்ற நூற்பாவின் வழி அறியலாம். இரட்டைக்கிளவியில் அமைந்த சொற்களைச் சிறுகதையில் படைப்பது படிக்கும் வாசகர்களுக்கு ஒலி நயத்தையும், மகிழ்ச்சியையும் ஏற்படுத்துவதற்காகவே ஆகும். அந்த வகையில் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் பல இடங்களில் இரட்டைக் கிளவியால் அமைந்த சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். இதனை,

"சைக்கிள் ரிக்ஷாக்கள் லொடலொடத்த மணிச்சத்தத்துடன் என்னைக் கடந்து வேகமாகச் சென்றன"[135]

“ ‘லொங்கு லொங்கு’ என்று ஓடி வந்து என் குறியாய் இருந்த வீட்டு வாசற்படிக்கு வந்து சேர்ந்ததும் தான் எனக்கு உயிர் மீண்டது”[136]

“தாரைதாரையாகக் கண்ணீர்விட்டு உள்ளத்தை உருக்கும் விதத்தில் நடித்திருந்தாள் ராகினி”[137]

“கூண்டிலிருந்து வெளிவந்த பச்சைக்கிளி பறக்கவும் இயலாது, திகைத்துப்போய் கீச்கீச் என்றது...”[138] என்ற தொடர்களில் உள்ள ‘லொடலொடத்த’, ‘லொங்கு லொங்கு’, ‘தாரை தாரையாக’, ‘கீச்சீச்’ போன்ற இரட்டைக்கிளவிகளை ஆசிரியர் கையாண்டுள்ளதை அறியமுடிகின்றது. இதைப்போலவே ‘லடலட’, ‘கரகர’, ‘மினுமினுப்பு’, கடகடன்னு போன்ற இரட்டைக்கிளவிச் சொற்களைத் தமது சிறுகதைகளில் பயன்படுத்தியுள்ளதைக் காணமுடிகின்றது.

மேற்கண்ட இரட்டைக்கிளவி சொற்கள் கதாபாத்திரங்களின் உணர்வுகளைப் படம் பிடித்துக் காட்டக்கூடிய வகையில் அமைந்துள்ளது. இங்குப் பிரபஞ்சனின் கலைத்திறன் சிறப்புற்றிருப்பதை உணரமுடிகின்றது.

**பழமொழி**

பழமொழிகள் ஒவ்வொன்றும் உண்மை, அறிவியல், வரலாறு, நாகரிகம், அறக்கருத்துகள், அறிவுரைகள், பொருளாதாரம் போன்ற பல பண்புகளை வெளிப்படுத்துகின்றன.

“பழைய மொழியே பழமொழி. பழமையும் எளிமையும் இனிமையும் நிறைந்தவை. பழமொழிகளைக் கொண்டு மக்களின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் அறியலாம்”[139]

முன்னோர்கள் வழங்கி வந்த தொடர்கள் பழமொழிகள் என்றாகின்றன. இப்பழமொழிகள் பழைய மரபுகளை வெளிப்படுத்தும் கூறாக

அமைகின்றது. பிரபஞ்சனின் சிறுகதைகளில் அமைந்த பழமொழிகள் பழைய மரபுகளைப் பறை சாற்றி நிற்கின்றன.

"மரம் பழுக்கல்லே வௌவாலும் வரல்லே"[140]

"சட்டி சுட்டது கை விட்டது"[141]

"எண்சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம்"[142]

"உடம்புபூரா எண்ணெயத் தடவிக்கிட்டு மண்ணுல உழுந்து புரண்டு எழுந்திருச்சாலும் உடம்புல ஒட்டறது தான் ஒட்டும்"[143]

"இருட்டில பக்கம் பார்த்துப் பேசு"[144]

"கும்பிட்டவன் கூழ் குடிப்பான் வம்பிட்டவன் வைக்கோல் தின்பான்"[145]

"பார்த்த கண்ணே பூத்து போச்சு"[146]

"உண்பது நாழி உடுப்பது ரெண்டு முழம்"[147]

"பசிக்கு உதவாத அன்னமும், சிரமத்துக்கு உதவாத சிநேகிதமும் பாழ்னு சொல்லுவாங்க"[148]

"வல்லவனுக்கு புல்லும் ஆயுதம்"[149]

இப்பழமொழிகள் யாவும் மக்கள் அடிக்கடி பயன்படுத்துவதாகும். இவை அனைத்தும் குறைந்த அளவு கல்வியுடையவரும் புரிந்து கொள்ளத்தக்க பழமொழிகளாக உள்ளன. இவ்வளவு எளிய பழமொழிகளைக் கையாள்வதற்குக் காரணம் இவர் எழுதுவது சாதாரண மக்களுக்காக என்பதும் அவர்களிடம் இவர் கருத்துச் சென்று சேரவேண்டும் என்பதும் ஆகும்.

## மொழி

மனிதனுக்கு அடையாளமாய் விளங்குவது மொழி. அம்மொழி இடத்திற்கு இடம், நாட்டிற்கு நாடு வேறுபடுவது உண்டு. அங்ஙனம் வேறுபடும் பல்வேறுபட்ட மொழிநிலையை ஆசிரியர் தம் படைப்புகளில் படைக்கும் போது அப்படைப்பு சிறப்படைகின்றது. "கருத்தாலும், கற்பனையாலும், அணியாலும், சுவையாலும், நடையில் வேறுபாடுகளும், சிறப்பியல்புகளும் அமைவது மட்டுமல்ல ஆசிரியர் பயன்படுத்தும் மொழியாலும் அவை அமைகின்றன"[150] இக்கருத்திலிருந்து ஆசிரியர் பயன்படுத்தும் மொழியாலும் நடயில் சிறப்பியல்புகள் அமைவதை உணரலாம்.

## வடமொழிச் சொற்கள்

பாத்திரங்களின் உரையாடலில் பிறமொழிக் கலப்பு என்பது சுவையூட்டும் அம்சமாகும். பிறமொழிகளைப் பயன்படுத்தும் போது கதை மாந்தர் படைக்கப்பட்டுள்ள சூழல் மற்றும் பண்பு நலன் ஆகியவற்றிற்கு ஏற்ப பயன்படுத்த வேண்டும். அந்த வகையில் பிரபஞ்சன் பல வடசொற்களைத் தம் சிறுகதைகளில் பயன்படுத்தியுள்ளார்.

"ஸ்திரீயின் கண்களில் பாம்பின் குரூரம் வரலாமா?"[151]

என்னும் தொடரில் 'ஸ்திரீ' என்ற வடசொல் குடும்பப் பெண்ணைக் குறித்து அமைகின்றது.

"அப்புறம் அண்டா குண்டாவை வைத்து அடகுவச்சுத் தின்னோம். அப்புறம் என்ன யாசகம் வாங்காத குறைதான்"[152] இதில் 'யாசகம்' என்னும் வடசொல் பிச்சையெடுத்தலைக் குறிக்கின்றது.

ஆண்டுக்குப் பலகோடி ரூபாய் வரவு செலவு செய்யும் ஸ்தாபனத்தின் எம்.டி. கிருஷ்ணகுமார் என்ற தொடரில் அமைந்துள்ள 'ஸ்தாபனம்' என்ற சொல் நிறுவனத்தைக் குறிக்கின்றது.

"யாரோ பொண்டாட்டியைத் தள்ளி வச்சுட்டானாம் இவரு மத்தியஸ்தம் பேசப் போயிருக்காரு..."[153] என்னும் தொடரில் அமைந்துள்ள 'மத்தியஸ்தம்' என்னும் வடமொழிச் சொல் சமாதானம் என்னும் பொருளில் அமைகின்றது.

இதன்மூலம் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் தேவைக்கேற்ப தேவையான இடத்தில் மட்டும் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

**ஆங்கிலச் சொற்கள்**

பாமர மக்களுக்கும் புரியும் வகையில் எளிய நடைய ஆசிரியர் கையாண்டிருந்தாலும் சிலவிடங்களில் ஆங்கிலச் சொற்களைத் தமிழ் உச்சரிப்பில் பயன்படுத்தியுள்ளார். இந்த ஆங்கிலச் சொற்கள் கற்றவராலும் கல்லாதவராலும், மிகுதியாக பயன்படுத்தக்கூடிய நன்கு அறிமுகமான நடைமுறை சொற்கள் ஆகும். பிரபஞ்சன் அவரது சிறுகதைப் படைப்புகளில் ஆங்கில சொற்கள் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

"வழக்கு, மெட்ராஸ் ஹைகோர்ட்டிலும் நடந்தது"[154]

"என் மாமாகூட மில்ட்டிரியில் இருக்கிறவர்தான்...
எனக்கு மில்ட்ரி பீப்பில்ஸ் மேல ரொம்பவும் மதிப்பு உண்டுசார்"[155]

" 'ஆர்டிஸ்ட் ரெடியா'
'ரெடி சார்...' என்றான் கோபால கிருஷ்ணன்"[156]

“கல்யாண மண்டபத்திலேயே கெஸ்ட் ரூம் இருக்கு, படுத்து ரெஸ்ட் எடுத்துக்கலாம். சாயங்காலம் ரிஸப்ஷன் வச்சிருக்கேன். அதிலேயும் நீங்க கலந்துக்கணும், ராத்திரி டின்னர் முடிஞ்சப்புறம் தான் உங்களை நான் விடுவேன்”[157]

“இண்டர்வியூவுக்குப் போய்வந்து, தன் அனுபவத்தைக் கதையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள் சுமதி”[158]

மேற்கண்டவற்றில் ஹைகோர்ட், மில்ட்டிரி, பீப்பில்ஸ், ஆர்டிஸ்ட், ரெடி, கெஸ்ட்ரூம், ரெஸ்ட், ரிஸப்ஷன், டின்னர், இண்டர்வியூ போன்ற ஆங்கிலச் சொற்களைக்கதைக்கேற்பப் பயன்படுத்தியுள்ளார்.

**ஆங்கிலத் தொடர்கள்**

ஆங்கிலத் தொடர்கள் பிரபஞ்சன் சிறுகதையில் சுவைமிக்கதாய் அமைந்துள்ளது.

“ஆர் யு எ கிராஜீவேட்”[159]

“எஸ்... யுமே கோ...”[160]

“ப்ளீஸ் டெல் மீ... வாட்ஸ் யுவர் டிரபிள்”[161]

“கம்டுத பாய்ண்ட்”[162]

“தேங்க் யூ லாட்”[163]

“நெவர்... ஸ்டில், ஐ லவ் ஹெர்...”[164]

**இருமொழிக் கலப்பு**

இதேபோல் இருமொழிக் கலப்பையும் பிரபஞ்சன் சிறுகதைகளில் காணமுடிகிறது.

"க்யூ நகர்ந்தது"[165]

"அப்செட் ஆயிட்டேன் சார்"[166]

"ட்ரை பண்ணிக்கிட்டு தான்இருக்கேன்"[167]

"கோல்ட் பிரேம் போட்ட கண்ணாடி"[168]

"சாருக்கு ஆபீசு உத்யோகமா"[169]

"முதல் ஷாட் முதல் டேக்லேயே ஓகே ஆகனும்"[170]

"மாமுல் டூர் தானே அண்ணே"[171]

மேற்கண்ட ஆங்கிலமும் தமிழும் கலந்த நடை படைக்கப்பட்ட கதாபாத்திரங்களுக்கு ஏற்ப அமைந்துள்ளது. மேலும் கதையின் கருப் பொருளுக்கு ஏற்ற வகையிலும் மாந்தர் சொல்லால் உருவாகும் சூழலிலும் அவர்களின் உரையாடலிலும் பிறமொழிச் சொற்களைக் கையாண்டுள்ளதை அறியமுடிகின்றது.

**வட்டார வழக்குச் சொற்கள்**

வட்டார வழக்குச் சொற்களை இலக்கியத்தில் பயன்படுத்துவது ஒருவகை மொழி நடை. "குறிப்பிட்ட ஒரு சொல் ஒரு குறிப்பிட்ட பொருளில் ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் புழக்கத்தில் இருக்குமானால் அது வட்டார வழக்குச் சொல்"[172] என்கிறார் கி.ராஜநாராயணன். சொற்களும் அவற்றின் பொருள்களும் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றன.

வட்டார வழக்குச் சொற்கள் மூலம் ஊர், கிராமச்சூழல், பழக்க வழக்கங்கள் போன்றவற்றை உணரமுடிகின்றது. அந்த வகையில் வட்டார மொழியைப் பயன்படுத்துவதில் பிரபஞ்சன் வல்லவராய்த்

திகழ்கின்றார். வட்டாரத்தில் உள்ள சொற்களைப் பாத்திரங்கள் வழி கதைகளில் கற்பித்துள்ளார் ஆசிரியர்.

> "வீட்டுல கொஞ்சம் முடை, அவனை பார்த்தாக் கேளேன்"[173]

> "ஐயரும் தஞ்சாவூர் பக்கத்தவர்தான். ஒண்டிக்கட்டை
> ஆள் ஒத்தை நாடிதான்"[174]

> "அமிஞ்சிக்கரையில் அப்பல்லாம் சோமாறிப் பசங்க அதிகம்
> பேட்டைக்கே பிஸ்தாமாதிரி"[175]

"இன்னா சம்முவம், அந்தப் பெண்ணை இன்னப்பா பண்ணே? வாவா பிரின்ஸ்பல் கூப்பிடறாரு. அவரண்டை அந்தப் பொண்ணு ஒன்னு அழுவுது"[176] என்றார் கந்தசாமி.

இதில் முடை என்னும் சொல் சிரமம், கஷ்டம் என்ற பொருளையும், ஒண்டிக்கட்டை, தனியாள், தனியாக வாழ்பவர் என்ற பொருளையும், சோமாறிப்பசங்க என்பது சோம்பேரித்தனத்தையும், பேட்டைக்கே பிஸ்தாமாதிரி என்னும் சொல் அந்தப் பகுதிக்குத் தலைவர் என்ற பொருளையும், அவரண்டை என்ற சொல் அவரிடம் என்ற பொருளையும் தந்து அமைகின்றது. மேற்கண்ட வட்டார வழக்குச் சொற்கள் தஞ்சாவூர், சென்னை, பாண்டிச்சேரி ஆகிய வட்டாரத்தில் பயன்படுத்தும் சொற்களைப் பிரபஞ்சன் கையாண்டுள்ளார். இவ்வட்டாரச் சொற்கள் உயிர்த்துடிப்புள்ள இயல்பான கதைமாந்தர்களைப் படைக்கப் பெரிதும் துணை செய்துள்ளது. இவற்றை உரிய இடங்களில் படைத்ததின் மூலம் பிரபஞ்சனுடைய சிறுகதைகள் படிப்பவரின் கவனத்தைக் கவர்ந்திழுக்கும் வண்ணம் அமைகின்றது.

**கொச்சை சொற்கள்**

பாத்திரத்தின் தன்மைக்கேற்பவும் இயல்பை வெளிப்படுத்தவும் கொச்சை சொற்களையும் ஆசிரியர் கையாண்டுள்ளார். எளிமையான மக்கள் பேச்சில் இயல்பாகக் கலந்திருக்கும் கொச்சைச் சொற்களை அப்படியே பயன்படுத்துவது அப்பாத்திரங்களின் இயல்பை வெளிப்படுத்துவது கதை உயிரோட்டம் பெற்றும் அமைகின்றது.

"ங்கொக்காலே ஒனக்கு ஏன் இப்படி
புத்தி பீதிங்கப் போச்சி..."[177]

என்னும் தொடர் 'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்' என்னும் சிறுகதையில் அமைந்துள்ளது. ஒரு மீன்காரியின் மன தைரியத்தை 'மீன்' என்ற சிறுகதையில் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். எவனோ ஒருத்தன் குடித்துவிட்டுக் கொஞ்சம் ஓவராகப் பேசினான் போல ஒரு கூடைக்காரி கேட்டாள் "போடா பேமானி ஒன் மூஞ்சில இருக்கிற மீசையும் சரி என் மயிருஞ் சரிடா"[178] இதில் கொச்சையான வார்த்தைகள் அப்பெண்ணின் இயல்பை வெளிப்படுத்துகிறது.

"நம்ம என்ன செரைக்கவா சங்கம் வச்சிருக்கோம்"[179] இவ்வரிகள் சாதிப் பற்றுக்கொண்ட பாத்திரத்தின் இயல்பை வெளிப்படுத்துகின்றது.

"பாவி; பச்சை மரத்துல ஆணி அடிக்கிறான் பார் தேவடியாப் பய... என்றான் அரி"[180]

இவற்றின் வழி எளிய மக்களின் வாழ்க்கையையும் அவர்களின் இயல்பான உரையாடலையும் காணமுடிகின்றது. மேலும் ஆசிரியர் சாதாரண மக்களைப் பற்றி சிறுகதை எழுதும்போது அவர்களின் பேச்சையும் பதிவு செய்துள்ளார் என்பது மேற்கண்டவற்றின் மூலம் தெளிவாகின்றது.

சமுதாயத்தில் சாதாரண மக்களின் வாழ்க்கைப் போக்குகளைச் சிறுகதைகளில் புகுத்தும்பொழுது அம்மக்களின் இயல்பிற்கேற்ற பாத்திரங்கள் அமைய வேண்டும். அங்ஙனம் அமையும்போது அவர்களது உரையாடல்களும் அப்பாத்திரத்தின் தன்மைக்கேற்ப அமையவேண்டும். அவ்வகையின் அமையும் சிறுகதைகள் உயிரோட்டமானதாய் அமையும் என்பதைப் பிரபஞ்சனின் சிறுகதைகள் எடுத்துக்காட்டுகின்றன.

# தொகுப்புரை

சிறுகதையின் தொடக்கம் கருப்பொருளை வெளிக்காட்டும் வகையில் அமையவேண்டும். பிரபஞ்சன் சிறுகதையில் அமைந்த வர்ணனைத் தொடக்கம் இடம், காலம் பற்றிய வர்ணனைத் தொடக்கமாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

உரையாடல் தொடக்கம் சிறுகதை கூறும் நோக்கு நிலையில் அமைந்து கதைக்குச் சுவையூட்டுகின்றது. இவ்வகைத் தொடக்கம் நாடகம் போல் அமையவும் உதவுகின்றது.

அறிமுகத் தொடக்கம் என்பது சிக்கல் ஒரு நிகழ்ச்சி, இடம், மாந்தர் இவைகளை அறிமுகம் செய்வதாக அமைகின்றது எனலாம்.

சிறுகதையில் முடிவுகள் கதைமாந்தர் கூற்றுடன் முடிவு, ஆசிரியர் கூற்றுடன் முடிவு என்ற வகையில் அமைத்துள்ளார். இம்முடிவுகள் அச்சிறுகதையைப் பற்றி மேலும் சிந்திக்கும் வகையில் அமைந்துள்ளன.

சிறுகதைத் தலைப்புகள் சிறிய சொல்லாகவும், தொடராகவும் அமைந்துள்ளது. கதைமாந்தர் பெயர், குறியீடு, கவிதை என்ற நிலைகளில் தலைப்புகள் அமைந்துள்ளன.

ஒரு கதையின் மையக் கருத்தைச் சுருக்கமாகவும் முழுமையாகவும் வெளியிடும் கூறு கதைக்கருவாகும். பிரபஞ்சன் தனது சிறுகதைகளுக்குச் சாதாரண மக்களின் வாழ்க்கைச் சிக்கல்களை மையமாகக் கொண்டு கருவை அமைத்துள்ளதை அறியமுடிகின்றது.

சிறுகதையில் நிகழ்ச்சிகள் அமையும் முறைக்குக் கதைப்பின்னல் எனப்படும். கதைப்பின்னலில் போராட்டம் மையமாக அமைகின்றது. அந்த

வகையில் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் அகம், புறம் என்ற இரண்டு நிலைகளிலும் போராட்டங்களை அமைத்துள்ளார்.

நோக்கு நிலை என்பது சிறுகதை யாருடைய வழியே நோக்கப்பட்டு கூறப்படுகின்றது என்பதைப் பொறுத்து அமைவதாகும். அந்தவகையில் தன்மைக் கூற்று, படர்க்கைக்கூற்று, மடல்வழிக்கூற்று என்ற அடிப்படையில் பிரபஞ்சனின் சிறுகதைகளில் நோக்குநிலை அமைகின்றது.

சிறுகதையில் அமைக்கும் பாத்திரங்கள் இயல்பானதாகவும், உலகில் காணக்கூடியதாகவும் அமையவேண்டும். நேரடியாகவும், நாடக அமைப்பு முறையிலும் பாத்திரங்களைப் படைத்துள்ளார்.

சிறுகதையில் பாத்திரங்களுக்குப் பெயரிடும் போது பாத்திரத்தின் இயல்புக்கு ஏற்றவகையில் எளிமையாக அமையவேண்டும். அந்த வகையில் பிரபஞ்சனின் சிறுகதைகளில் பெயர்கள் இயல்பாகவும், பொருத்தமானதாகவும் அமைத்துள்ளார்.

உரையாடல்கள் சிறுகதைகளில் கதையோட்டத்திற்கு ஏற்ற வண்ணம் அமைய வேண்டும். பிரபஞ்சன் அமைத்த உரையாடல்கள் சிறுகதையின் சுவை குன்றாமல் கதையை நிகழ்த்திச் செல்வதற்கு ஏற்றவகையில் அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

முரண் என்பது சிறுகதையல் அமைந்த பாத்திரங்களுக்கிடையான மாறுபட்ட உணர்ச்சிகள், போராட்டங்கள் முதலியவற்றை வெளிப்படுத்துவது இதன்வழி பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் அமைந்த பாத்திரங்களில் மாறுபட்ட குணம் மற்றும் பண்புகளை வெளிப்படுத்தியுள்ளார்.

வர்ணனை என்பது சிறுகதைக்கு அழகூட்டும் கூறு அந்த வகையில் பாத்திரத் தோற்றம், சூழல் போன்றவற்றை வர்ணனை செய்துள்ளார்.

கடந்தகால நிகழ்ச்சியை நினைவு கூறும் வகையில் அமைவது பின்னோக்கு உத்தி. இந்த வகையில் கதைமாந்தர், ஆசிரியர், மடல் ஆகியவற்றின் மூலம் கடந்த காலத்தை நினைவு கூறும் வகையில் பின்னோக்கு உத்தியை அமைத்துள்ளார்.

நடை ஒரு படைப்பாளனின் தனித்தன்மையை வெளிப்படுத்துவது. பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் உணர்வு வெளிப்பாட்டு நடை, தருக்கநடை, கவிதை நடை, நகைச்சுவை நடை, குறியீடு நடை, எள்ளல், இரட்டைக்கிளவி, பழமொழி, கொச்சைச் சொற்கள், பிறமொழிக்கலப்பு போன்ற நடை வகைகளைப் பயன்படுத்திச் சிறப்பித்துள்ளார்.

பிரபஞ்சன் கையாண்ட உத்திகள் அனைத்தும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. யதார்த்தமான சாதாரணமான மக்களின் வாழ்க்கை நிலைகளைப் பல்வேறுபட்ட கோணங்களில் படம் பிடித்துக் காட்டவல்லது என்பதை வழியுறுத்துகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.நூ.எண்.656
2. நன்னூல், நூ.எண்.14
3. க.த.திருநாவுக்கரசு, மு.வரதராசனாரின் படைப்பிலக்கியம், பக.195, 196
4. மேலது, நூ.ப.195
5. இரா.குருநாதன், கரந்தை மலர்–4, ப.11
6. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கண கொள்கைகளும், ப.4
7. சி.சு.செல்லப்பன், வளரும் தமிழ், பக்.19, 20
8. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.154
9. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.154
10. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.155
11. க.த.திருநாவுக்கரசு, மு.வரதராசனாரின் படைப்பிலக்கியம், ப.263
12. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–1, ‘பிரும்மம்’, ப.41
13. மேலது, ‘பிரும்மம்’, ப.45
14. மேலது, ‘சூரியனைப் பார்க்காமல்’, ப.168
15. மேலது, ‘விட்டு விடுதலை ஆகி’, ப.551
16. மேலது, ‘காலம் இனிவரும்’, ப.406
17. மேலது, ‘நிகழ் உலகம்’, ப.229
18. மேலது, ‘சுமதிக்கு ஒரு கடிதம்’, ப.292
19. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.156
20. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, ‘நெருப்பை பொட்டலம் கட்ட முடியாது’, ப.650

21. மேலது, 'ஆண் பிள்ளை', ப.225

22. மேலது, 'சினேகம்', ப.532

23. மேலது, 'மரி என்கிற ஆட்டுக்குட்டி', ப.562

24. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.158

25. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பலி', ப.74

26. மேலது, 'தட்சனை', ப.340

27. மேலது, 'விழுது', ப.150

28. மேலது, 'சூரியனைப் பார்க்காமல்', ப.168

29. மேலது, 'மாமன் உறவு', ப.523

30, மேலது, 'அப்பாவு கணக்கில் 35 ரூபாய்', ப.199

31. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.159

32. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பிம்பம்', ப.133

33. மேலது, 'அம்மா', ப.63

34. மேலது, 'குரூரம்', ப.470

35. மேலது, 'மிருகம்', ப.591

36. பாலா, (எ.மே.), இலக்கியங்களில் மரபும் புதுமையும், ஆய்வுக்கோவை, ப.1168

37. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'அடி', ப.435

38. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.158

39. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'இராஜகோபுரமும் சங்கப் பலகையும்', ப.251

40. மேலது, 'கதாநாயகி குளித்த கதை', ப.389

41. மேலது, 'காணாமல் போனவர்கள்', ப.416

42. மேலது, 'வாசனை', ப.702

43. சு.வேங்கடராமன், 'அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு', ப.160

44. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பிரும்மம்', ப.50

45. மேலது, 'முறிவு', ப.100

46. க.த.திருநாவுக்கரசு, மு.வ.வின் படைப்பிலக்கியம், ப.266

47. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'சலிப்பு', ப.107

48. மேலது, 'மனுசி', ப.357

49. மேலது, 'சங்கம்', ப.123

50. மேலது, 'அபஸ்வரம்', ப.627

51. மேலது, 'குழந்தைகள்', ப.485

52. மேலது, 'கருணையில் தான்', ப.222

53. மேலது, 'அடி'. ப.444

54. மேலது, 'பங்காளிகள்', ப.645

55. டாக்டர் மீனாட்சி முருகரத்னம், கல்கியின் சிறுகதைக்கலை, ப.196

56. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.170

57. க.த.திருநாவுக்கரசு, மு.வ.வின் படைப்பிலக்கியம், ப.267

58. தமிழன்னல், சங்க இலக்கிய ஒப்பிடு, ப.140

59. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.177

60. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பிரும்மம்', ப.46

61. மேலது, விழுது, ப.167

62. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.178

63. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.335

64. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.57

65. க.த.திருநாவுக்கரசு, மு.வ.வின் படைப்பிலக்கியம், ப.214

66. மேலது, பக்.272, 273

67. மேலது, ப.273

68. R.F. Dictrich R.H. Sunddl, The Art of Fiction, P.134

69. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.180

70. M.H. Abrams, A Glossary of Literary Terms, P.134

71. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.187

72. மேலது, ப.192

73. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கிய திறனாய்வியல், ப.136

74. க.த.திருநாவுக்கரசு, மு.வரதராசனாரின் படைப்பிலக்கியம், ப.273

75. இராம.மோகன், டாக்டர் மு.வ.வின் நாவல்கள், பக்.48, 49

76. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, ‘சிறுமை கண்டு’, ப.762

77. மேலது, ‘சைக்கிள்’, ப.195

78. டாக்டர் மீனட்சி முருகரத்னம், கல்கியின் சிறுகதைக்கலை, ப.111

79. வ.கமலக்கண்ணன், இக்கால இலக்கியம் ஒரு நோக்கு, ப.77

80. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கிய திறனாய்வியல், ப.314

81. அ.ச.ஞானசம்மந்தன், இலக்கியக்கலை, ப.280

82. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, ‘ஒரு மனுசி’, ப.460

83. மேலது, ‘நெருப்பைப் பொட்டலம் கட்டமுடியாது’, ப.651

84. டாக்டர் மீனாட்சி முருகரத்னம், கல்கியின் சிறுகதைக் கலை, ப.56

85. மு.வரதராசன், இலக்கிய மரபு, ப.168

86. தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், இலக்கியங்களில் மரபும் புதுமையும் ஆய்வரங்கக் கட்டுரை தொகுப்பு – தொகுதி 3, ப.1489

87. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பூக்களை மிதிக்கக்கூடாது', ப.124

88. மேலது, 'இராட்ஜசக் குழந்தை', ப.335

89. க.த.திருநாவுக்கரசு, மு.வ.வின் படைப்பிலக்கியம், பக்.278, 279

90. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'தலைசாய்க்க', ப.108

91. மேலது, 'சூரியனைப் பார்க்காமல்', ப.168

92. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.216

93. சு.வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.203

94. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'விழுது', ப.150

95. மேலது, 'சூரியனைப் பார்க்காமல்', ப.179

96. மேலது, 'வடு', ப.263

97. சிவ.மாதவன், பிரபஞ்சன் படைப்புகள் பன்முகப்பார்வை, பக்.96, 97

98. மேலது, ப.97

99. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'ஒரு பகல்நேர நாடகம்', ப97

100. மேலது, 'தலைசாய்க்க', ப.114

101. மேலது, 'சங்கம்', ப.119

102. தாசன், கு.அழகிரிசாமி எழுத்துக்கள், ப.16

103. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.156

104. மேலது, ப.156

105. ஆய்வுக்கோவை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ப.1373

106. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பலி'. ப.77

107. மேலது, 'விழுது', ப.151

108. மு.சாதிக்பாட்ஷா, பிரபஞ்சனும் படைப்புகளும், ப.180

109. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பூக்களை மிதிக்கக்கூடாது', ப.131

110. மேலது, 'பகை', ப.141

111. மேலது, 'அப்பாவு கணக்கில் 35 ரூபாய்', ப.199

112. மேலது, 'வடு'. ப.257

113. மேலது, 'பூக்களை மிதிக்கக்கூடாது', ப.124

114. மேலது, 'இராட்ஜசக் குழந்தை', ப.324

115. மேலது, 'இராஜகோபுரமும் சங்கப் பலகையும்', பக்.253, 254

116. சிந்தனை கவிஞர் கவிதாசன் படைப்பிலக்கியம் பன்முக ஆய்வுத் தொகுதி, ப.199

117. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'முறிவு', ப.99

118. மேலது, 'மாமன் உறவு', ப.181

119. இரா.சாந்தி, இலக்கியமுகங்கள், ப.34

120. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பகல்நேர நாடகம்', ப.184

121. தொல்காப்பியம், உவமையியல் நூ.1223

122. ப.ச.ஏசுதாசன், தமிழில் உவமை, ப.2

123. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'பூக்களை மிதிக்கக்கூடாது', ப.125

124. மேலது, 'பகை', ப.140

117. மேலது, ‘சைக்கிள்’, ப.192

126. மேலது, ‘கருணையில் தான்’, ப.212

127. மேலது, ‘அரி என்கிற நண்பன்’, ப.226

128. மேலது, ‘நிழல் உலகம்’, ப.229

129. மு.வ. இலக்கியத்திறன், ப.194

130. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, ‘பிரும்மம்’, ப.49

131. மேலது, ‘விழுது’, ப.164

132. மேலது, ‘சைக்கிள்’, ப.196

133. மேலது, ‘கருப்பட்டி’, ப.513

134. தொல். சொல். நூ.531

135. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, ‘சலிப்பு’, ப.110

136. மேலது, ‘பகை’, ப.142

137. மேலது, ‘கதாநாயகி குளித்த கதை’, ப.392

138. மேலது, ‘சினேகம்’, ப.533

139. கலைக்களஞ்சியம் தொகுதி ஐந்து, ப.336

140. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, ‘மாமன் உறவு’, ப.188

141. மேலது, ‘மாமன் உறவு’, ப.190

142. மேலது, ‘ராட்சஸ குழந்தை’, ப.336

143. மேலது, ‘மனசு’, ப.371

144. மேலது, ‘குழந்தைகள்’, ப.481

145. மேலது, ‘பாதுகை’, ப.487

146. மேலது, ‘காலகண்டன்’, ப.578

147. மேலது, 'குமாரசாமியின் பகல்பொழுது', ப.818

148. மேலது, 'அபஸ்வரம்', ப.622

149. மேலது, 'வர்க்கம்', ப.815

150. தி.முருகரத்னம், புதுமைப்பித்தன் சிறுகதைக்கலை, ப.152

151. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'விழுது', ப.152

152. மேலது, 'அப்பாவு கணக்கில் 35 ரூபாய்', ப.201

153. மேலது, 'உறை', ப.811

154. மேலது, 'விழுது', ப.155

155. மேலது, 'வீடு', ப.239

156. மேலது, 'நிழல்', ப.387

157. மேலது, 'கேசவன் கல்யாணத்தின் போது', ப.503

158. மேலது, 'உறை', ப.812

159. மேலது, 'ஒரு பகல்நேர நாடகம்', ப.58

160. மேலது, 'ஒரு பகல்நேர நாடகம்', ப.61

161. மேலது, 'முறிவு', ப.309

162. மேலது, 'பூக்களை மிதிக்கக்கூடாது', ப.132

163. மேலது, 'ஒரு மனுஷி', ப.464

164. மேலது, 'கொடூரம்', ப.464

165. மேலது, 'ஒரு பகல்நேர நாடகம்', ப.51

166. மேலது, 'முறிவு', ப.91

167. மேலது, 'சங்கம்', 122

168. மேலது, 'மாமன் உறவு', ப.180

169. மேலது, 'வீடு', ப.238

170. மேலது, 'காயம்பட்ட மாலை வானம்', ப.266

171. மேலது, 'காயம்பட்ட மாலை வானம்', ப.266

172. மு.அங்கையற்கண்ணி, புதுமைப்பித்தன் சிறுகதையில் மொழிநடை, எம்ஃபில் பட்ட ஆய்வேடு, ம.கா.ப. ஆண்டு 1990, ப.102

173. பிரபஞ்சன், சிறுகதைத் தொகுதி–I, 'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்', ப.34

174. மேலது, 'பலி', ப.75

175. மேலது, 'பகை', ப.146

176. மேலது, 'நான் இருக்கிறேன்', ப.690

177. மேலது, 'ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்', ப.37

178. மேலது, 'மீன்', ப.80

179. மேலது, 'சங்கம்', ப.120

180. மேலது, 'அரி என்ற நண்பன்', ப.225

# முடிவுரை

"பிரபஞ்சன் சிறுகதைகளில் வாழ்வியல் சிந்தனைகள் ஓர் ஆய்வு" என்னும் ஆய்வின் மூலம் கண்டறியப்பட்டச் செய்திகள் தொகுத்தளிக்கப் பெறுகின்றன. பிரபஞ்சன் தமிழுக்குக் கிடைத்த மிகச்சிறந்த படைப்பிலக்கிய வாதி என்பதை இனங்காட்டியதே அவரது சிறுகதைகள் தான் எனலாம். நாம் வாழும் சமூகத்தைப் பற்றிய விழிப்புணர்வையும், சமுதாய மாற்றத்திற்கு என்னென்ன தேவை என்பதையும் பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் பதிவு செய்துள்ளார்.

வாழ்வியல் உண்மைகளை வெளிப்படுத்தி மனிதன் வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய மனிதநேயம், அன்பு போன்ற நெறிகளைத் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்தியுள்ளார். மனஉறுதி படைத்த பெண்களைத் தம் சிறுகதைகளில் படைத்துக்காட்டி புரட்சி செய்துள்ளார். மாறிவரும் சமுதாயத்தில் மனிதன் தன் வாழ்வியல் நெறிகளை இழந்துகொண்டு வருகின்றான். இதனை இலக்கியவாதிகள் தமது இலக்கியப்படைப்புகளின் மூலம் உணர்த்துகின்றனர்.

நெடுங்காலத்திலிருந்து வழங்கிவரும் சிறுகதைக் கலையைப் படித்து மதிப்பிடும் போக்கு அன்மைக்காலமாக மேற்கொள்ளப் பெற்று வருவதாகும். கலைவடிவத்தில் குறைவாகக்கூறி அவற்றால் உணர வேண்டியவை மிகுதியாக அமைவது சிறுகதைக் கலையின் சிறப்பு.

புதுச்சேரியில் பிறந்தவர் பிரபஞ்சன். 'சாரங்கபாணி கிராமணி என்ற வீரபத்திரக் கிராமணி வைத்தியலிங்கம்' என்பது இவரின் இயற்பெயர். பாண்டிச்சேரி, கரந்தை ஆகிய இடங்களில் கல்வி பயின்றார். தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். பிரபஞ்சனின் மாமா துப்பறியும் புதினங்கள் படிக்கும்

வழக்கமுடையவர். அவர் படித்த புதினங்கள் பிரபஞ்சனை கதை எழுதத் தூண்டியது. ரோமன் ரோலந்து நூலகமும் இவரை எழுத்தாளராக மாற்றியது.

'என்ன உலகமடா' என்னும் சிறுகதையே முதன்முதலில் அச்சாக வெளிவந்த சிறுகதை. 'பிரும்மம்' சிறுகதை அவரை மக்களிடத்தில் அறிமுகம் செய்தது. குமுதம், குங்குமம், ஆனந்தவிகடன் போன்ற பத்திரிக்கைகளில் பணியாற்றினார். நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், இருபதுக்கும் மேற்பட்ட புதினங்கள், இருநாடகங்கள், பல கட்டுரைகள் முதலியவை இவரது படைப்புக்கள் ஆகும்.

தமிழக அரசின் இலக்கியப்பரிசு உள்ளிட்ட பல பரிசுகளைப் பெற்றுள்ளார். மிக உயரிய விருதான சாகித்திய அகாடமி விருதையும் பெற்றுள்ளார்.

அன்பு, மனிதநேயம், இல்லறவாழ்வு, அறம், தியாக மனப்பான்மை, நாட்டுப்பற்று, முதுமையைப் போற்றுதல், தீண்டாமையை எதிர்த்தல், அரசியல் போன்ற வாழ்க்கை நெறிகளைத் தமது சிறுகதைகளில் கையாண்டுள்ளார். மனித வாழ்வு பண்புகளின் வாயிலாக நிர்ணயிக்கப் படுகிறது. உலகில் உள்ள பல சமயங்கள் மனிதனுக்குரிய நெறிகளைத் தத்துவங்களாக வெளிப்படுத்தியுள்ளன. இதனைப் பிரபஞ்சனும் பல்வேறான வாழ்வியல் நெறிகளைத் தமது படைப்புகளில் சுட்டியுள்ளார்.

அமைதியான வாழ்க்கைக்கு அடிப்படை அன்பு என்பதையும், பல சிக்கல்கள் நீங்குவதற்கு அன்பு காரணமாய் அமைகின்றது என்பதையும் தமது சிறுகதைகளின் வழி விளக்கியுள்ளார்.

இல்லறம், இல்லின்கண் நிகழும் அறம், அந்த இல்லறத்தில் எத்துனை சோதனைகள் வந்தபோதிலும் வாழ்க்கை வாழ்வதற்கே என்னும் மனஉறுதி வேண்டும் என்னும் சிந்தனையைப் பாத்திரங்களின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

இவ்வுலகத்தில் காணாமல் போகும் மனிதநேயத்தைச் சிறுகதைகளின் மூலம் முன்னெடுத்துள்ளார். அவற்றின் மூலம் சமுதாயத்தை நெறிப்படுத்தும் சிந்தனைகளை விதைத்துள்ளார்.

அறம் என்பது மனிதன் தன் வாழ்வில் கடைபிடிக்கும் நற்பண்புகளைக் குறித்து அமையும். இவ்வறப் பண்புகள் பிரபஞ்சன் சிறுகதைகளில் அமைந்து மனிதனை மேம்படுத்த உதவும் கருவியாகின்றன.

மனிதன் விட்டுக்கொடுத்து வாழும்போது சேவை மனப்பான்மை யினையும் வளர்கிறது என்பதைச் சிறுகதைகளில் படைத்து அமைதியான சமுதாயம் வளர உதவியுள்ளார்.

தேசப்பற்றுடைய மனிதர்களைக் கொண்ட சமுதாயமும் நாடும் வளமடையும் என்பதை ஆசிரியரின் சிறுகதைகள் வெளிப்படுத்துகின்றன. முதுமை குறித்த நுட்பமான மன உணர்வுகளையும், முதியவர்களின் நிலையையும் சிறுகதைகளின் வழி உணர முடிகின்றது.

நம்நாட்டில் புரையோடிக் கிடக்கும் தீண்டாமையைச் சாடியிருக்கிறார்./ தம் சிறுகதைகளின் வழி சமுதாயத்தில் அனைவரும் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழவேண்டும் என்பதையும் வலியுறுத்துவதை அறியமுடிகின்றது.

அரசியலில் சுயநலம் வாய்ந்தவர்களைப் பற்றியும், ஏமாற்றுபவர்கள் பற்றியும் தம் சிறுகதைப் பாத்திரங்களின் மூலம் வெளிப்படுத்துகின்றார். தன் சிறுகதைகளின் வழி நல்ல அரசியல் வாதிகளுக்கு மக்கள் நலன் பேணும் குணம் வேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றார். இதில் சிறந்த அரசியல் சிந்தனைகள் வெளிப்படுத்துவதைக் காணமுடிகின்றது.

கு.ப.ரா. வண்ணதாசன், ரகுநாதன், ஜெகாதா, வாஸந்தி போன்ற சிறுகதை ஆசிரியர்களைப் போலப் பிரபஞ்சனும் வாழ்வியல் விழுமியங்களைத் தனது சிறுகதைகளில் படைத்துள்ளனர்.

பிரபஞ்சன் சிறுகதைகளில் அமைந்த பெண் பாத்திரங்கள் தன்னம்பிக்கை, துணிச்சல், போராடும் குணம், சுயத்தை இழக்காத தெளிந்த சிந்தனைப்போக்கு போன்ற இயல்புடையவர்கள். குடும்பத்திற்காகத் தன்னை அற்பணித்துக் கொண்டு வாழும் பெண்களை ஆசிரியர் தியாகிகளாகக் காண்கிறார்.

சமுதாயத்தில் ஆணும் பெண்ணும் சேர்ந்து இழைக்கும் தவற்றில் பெண் மட்டுமே பழிக்கு ஆளாகின்றாள். இந்நிலையில் ஆசிரியர் அப்பெண்களை ஏமாற்றப்படுபவர்களாகச் சித்திரிக்கின்றார். வழி தவறும் பெண்கள் அவர்கள் செய்யும் தவற்றிற்குக் காரணம் சமுதாயமே எனச்சாடுகின்றார்.

இளமைத் திருமணம், கைமை போன்ற அவலங்களுக்குக் காரணம் சமுதாயமே என்ற போக்கில் சிறுகதைகளையும் பாத்திரங்களையும் அமைத்துள்ளதைக் காணமுடிகின்றது.

திரு.வி.க. பாரதியார் போன்றோர் போற்றிய பெண்மையைப் பிரபஞ்சனிடத்தில் காணமுடிகின்றது. நாகரிகம் அதிகரித்துள்ள சமூகச் சூழலில் பெண் பாத்திரங்கள் வழி மனிதநேயத்தை ஊட்டியிருப்பது பெண்களுக்குப் பிரபஞ்சன் அளித்துள்ள மணிமகுடமாக அமைகின்றது.

ஓர் இலக்கியப் படைப்பின் வெற்றிக்கு அடிப்படையாய் அமைவது அப்படைப்புக்குள் கட்டமைக்கப்படும் இலக்கியக் கூறுகளாகிய உத்திகள் ஆகும். தொல்காப்பியமும், நன்னூலும் உத்திமுறைகள் பற்றிப் பேசுகின்றன.

இந்த உத்திமுறைகள் காலத்திற்கேற்ப மாறக்கூடியதாகும். சிறுகதையில் அமையும் உத்திமுறைகள் சிறுகதையின் கருப்பொருளைத் தழுவியதாக அமையவேண்டும்.

சிறுகதையின் தொடக்கம் கருப்பொருளை வெளிக்காட்டும் வகையில் அமையவேண்டும். பாத்திரம், இடம், பொருள் பற்றிய வர்ணனைகள் தொடக்கமாக அமைந்துள்ளன.

உரையாடல் தொடக்கம், மரபுநிலைத் தொடக்கம், நிகழ்ச்சி, இடம், மாந்தர் பற்றிய அறிமுகமாக அமையும் அறிமுகத் தொடக்கம் போன்ற தொடக்கங்கள் அமைகின்றன.

சிறுகதை முடிவுகள் கதைமாந்தர் கூற்றுடன் முடிவு, ஆசிரியர் கூற்றுடன் அமைந்த முடிவு என்ற வகையில் அமைந்துள்ளன.

சிறுகதையில் நிகழ்ச்சி அமையும் முறை கதைப்பின்னல் எனப்படும். கதைப் பின்னலுக்குப் போராட்டம் மையமாக அமைகின்றது. பிரபஞ்சன் அகம், புறம் என்னும் இரு நிலைகளில் போராட்டங்களைக் காணமுடிகிறது.

யாருடைய வழியில் சிறுகதையானது நோக்கப்பட்டு கூறப்படுகின்றது என்பதை ஆராய்வது நோக்கு நிலையாகும். அந்த வகையில் தன்மைக்கூற்று, மடல்வழிக்கூற்று என்னும் அடிப்படையில் சிறுகதைகளின் நோக்குநிலை அமைகின்றது.

பாத்திரங்களை நேரடியாகவும், நாடக அமைப்பு முறையிலும் படைத்துள்ளார். பாத்திரப் பெயர்களை இயல்பாகவும், பொருத்தமானதாகவும் அமைத்துச் சிறப்பித்துள்ளார் எனலாம்.

உரையாடல்கள் கதையோட்டத்திற்கு ஏற்றவண்ணம் அமைவது சிறப்பு. சிறுகதையில் சுவை குன்றாமல், உரையாடல்கள் இடம்பெற்றுக் கதையை நிகழ்த்திச் சொல்வதற்கு ஏற்றவகையில் அமைந்துள்ளன.

பாத்திரங்களுக்கிடையேயான மாறுபட்ட உணர்ச்சிகளைப் போராட்டங்களை வெளிப்படுத்துவது முரண் எனப்படுகின்றது. பிரபஞ்சன் தனது சிறுகதைகளில் அமைந்த பாத்திரங்களின் மாறுபட்ட குணம் மற்றும் பண்புகளை வெளிப்படுத்திச் சிறப்பித்துள்ளார். பாத்திரத் தோற்றம் சூழல் போன்றவற்றைத் தமது சிறுகதைகளில் வர்ணனை செய்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

கதைமாந்தர், ஆசிரியர், மடல் அகியவற்றின் மூலம் கடந்தகால நிகழ்ச்சியைப் பற்றி நினைவுகூறும் பின்னோக்கு உத்தியைச் சிறுகதையில் அமைத்துள்ளார்.

படைப்பாளரின் தனித்தன்மையை வெளிப்படுத்துவது மொழி நடையாகும். பிரபஞ்சன் தம் சிறுகதைகளில் உணர்வு வெளிப்பாட்டு நடை, தருக்க நடை, கவிதை நடை, நகைச்சுவை நடை, குறியீட்டு நடை, இரட்டைக்கிளவி, பழமொழி, கொச்சைச் சொற்கள், பிறமொழிக் கலப்பு போன்ற நடைவகைகளைப் பயன்படுத்தி சிறுகதையை வளப்படுத்தியுள்ளார்.

கையாண்டுள்ள உத்திகள் அனைத்தும் தனிச்சிறப்பு வாய்ந்தவையாக அமைந்து அவரது படைப்புக்களை மிளிரச் செய்துள்ளன.

வாழ்வியல் சிந்தனைகள் என்பது மனிதவாழ்வு மேம்பாடுறச் செய்யும் நல்ல நெறிகளை வெளிப்படுத்தக்கூடிய சிந்தனை. இச்சிந்தனைகளைப் பிரபஞ்சன் தனது சிறுகதையின் கரு, கதைப்பின்னல், பாத்திரப்படைப்பு முதலியவற்றின் மூலம் பிரதிபலிக்கின்றார்.

பெண் பற்றிய சிந்தனையையும், பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களையும் அனைவரும் அறியும் பொருட்டும் முயன்றவரை அடிமைத்தனத்தை ஒழிக்கும் சிந்தனையைத் தூண்டுவதாகவும் அமைக்கின்றார். அவருடைய சிறுகதைக் கருத்துக்கள் அனைத்தும் துணிச்சலுடன் சமூகத்தில் மாற்றம் தேவை என்ற நோக்கை வெளிப்படுத்துகின்றன.

**மேலாய்விற்கு**

பிரபஞ்சனின் சிறுகதைகளில் பெண்ணியம்

பிரபஞ்சனின் சிறுகதைகளில் உளவியல் சிந்தனைகள்

என்ற தலைப்புகளில் இவரது சிறுகதைகளை ஆராய்வதற்குக் களம் உண்டு.

# துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதார நூல்**


பிரபஞ்சன் — பிரபஞ்சன் சிறுகதைகள் தொகுதி–1
கவிதா பதிப்பகம்,
தி.நகர்,
சென்னை – 600 017
முதற்பதிப்பு 2004.


**துணைமைச் சான்றாதார நூல்கள்**


அகிலன் — இலக்கிய திறனாய்வியல்
தாகம்,
சென்னை – 17
ஐந்தாம் பதிப்பு – 1997.

அண்ணல் சுப்பிரமணியனார் — வாழ்வு நெறி
பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 013.
முதற்பதிப்பு – 2002

அப்பாத்துரையார்.கா. — வாழும் வகை,
கற்பகம் புத்தகாலயம்,
சென்னை 600 017
முதற்பதிப்பு – 2007

அப்துல்ரகுமான் — மகரந்த சிறகு,
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 2002.

| | |
|---|---|
| அருள்சாமி உரை | நீதிநூல்கள்,<br>புத்தகப்பண்ணை,<br>சென்னை,<br>ஐந்தாம் பதிப்பு – 1982 |
| அழகர்சாமி.அ. | தமிழர் திருமணம்,<br>நூலாசிரியர் வெளியீடு,<br>மதுரை – 625 001.<br>முதற்பதிப்பு – 2000. |
| அறிவழகன், ந. | ஜெயகாந்தன் ஆய்வடங்கல்<br>அமராவதி பதிப்பகம்,<br>கடலூர் துறைமுகப்பட்டினம்,<br>முதற்பதிப்பு – 1978. |
| ஆண்டாள் பிரியதர்ஷினி | தோஷம்,<br>ராகவேந்திரா வெளியீடு,<br>சென்னை<br>முதற்பதிப்பு – 2001. |
| ஆனந்தகுமார்,பா. | இலக்கியமும் பண்பாட்டு மரபுகளும்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை – 600 098.<br>மூன்றாம் பதிப்பு – 2007. |
| இராசமாணிக்கனார்.மா. | தமிழர் திருமணத்தில் தாலி,<br>செல்வி பதிப்பகம்,<br>காரைக்குடி.<br>இரண்டாம் பதிப்பு – 1957 |

இராமலிங்கம்.மா. நாவல் இலக்கியம்
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை – 5.
முதற்பதிப்பு – 1972.

ஏசுதாசன்.ப.ச. தமிழில் உவமை
தரங்கை பப்ளிஷிங் ஹவுஸ்,
சென்னை – 84
முதற்பதிப்பு – 1996

கண்ணம் பிரத்தினம்.ஆசி. நீதிக்களஞ்சியம்,
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
சென்னை – 18.
முதற்பதிப்பு – 1995

கந்தசாமி.சா. 20 ஆம் நூற்றாண்டின்
தமிழ்ச் சிறுகதையாசிரியர்கள் தொகுதி
கவிதா பப்ளிக்கேஷன்,
தி.நகர், சென்னை – 600 017
முதற்பதிப்பு – 1999

கந்தையா.ந.சி. பெண்களும் சமூகமும் அன்றும் இன்றும்
அமிழ்தம் பதிப்பகம்,
சென்னை – 600 017
முதற்பதிப்பு – 2003

கமலக்கண்ணன்.வ. இக்கால இலக்கியம் ஒரு நோக்கு,
வ.கே. பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1955

கல்யாணசுந்தரனார்.திரு.வி. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை – 600 108 முதற்பதிப்பு – 1998

கோவிந்தசாமி.ம. (ப.ஆ.) குறுந்தொகை நயவுரை, வாசுகி பதிப்பக வெளியீடு, சிதம்பரம் – 608 002 முதற்பதிப்பு – 2000.

சகி கொற்றவை ஜெயஸ்ரீ, பெண்மையின் உள்ளொலி விக்னேஷ் வெளியீடு, சென்னை – 600 034 முதற்பதிப்பு – 2007.

சண்முகசுந்தரம்.சு. பெண்ணியமும் கலை இலக்கியப் பிரதிகளும் காவியா, பெங்களூர் – 560 038 முதற்பதிப்பு – 1994.

சாதிக்பாட்ஷா.மு. பிரபஞ்சனும் படைப்புகளும் இராஜா வெளியீடு, திருச்சிராப்பள்ளி – 620 020 முதற்பதிப்பு – 2012

சாந்தி.இரா. இலக்கிய முகங்கள் சற்குரு பதிப்பகம், தஞ்சாவூர் – 613 002 முதற்பதிப்பு – 2000

சாலினி இளந்திரையன் — வாழ்க்கை வரலாற்று இலக்கியம்
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை – 5
முதற்பதிப்பு – 1974

சிதம்பரனார்.சாமி. — தமிழ்நாட்டுப் பெண்களின்
உரிமையும் பண்பாடும்
ராணி வெளியீடுகள்,
சென்னை – 602 024
முதற்பதிப்பு – 2007.

சிவத்தம்பி.கா. — தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்,
பாரிநிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1967

சுப்பிரமணியன்.ச.வே. — தமிழ் இலக்கிய வரலாறு,
மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 021.
ஏழாம் பதிப்பு – 2010.

செந்தமிழ்ச்செழியன் — பெண்கள் பிரச்சனைகளும்
தீர்க்கும் முறைகளும்,
குமரன் பதிப்பகம்,
சென்னை – 5
முதற்பதிப்பு – 1998.

செந்துரைமுத்து. (உ.ஆ.) — திருக்குறள் தெளிவுரை,
கங்கை புத்தக நிலையம்,
சென்னை – 600 017.
முதற்பதிப்பு – 1993.

| | |
|---|---|
| செயராணி ராசதுரை | பெண்கள் படைப்பில் சமூகம், வைகை வெளியீடு, பெரியார் மாவட்டம் – 638 315 முதற்பதிப்பு – 1992. |
| செல்லப்பன், தி.சு., | வளரும் தமிழ், அருணோதயா பதிப்பகம், சென்னை – 21 முதற்பதிப்பு – 1987. |
| செல்லப்பா.சி.சு. | தமிழ் சிறுகதை பிறக்கிறது எழுத்துப் பிரசுரம், சென்னை – 600 005 முதற்பதிப்பு – 1974. |
| சேனாவரையன்.இ. இளங்கோவன்.சு.ப. | வாழ்வியல் அறநெறி (அ) சான்றோர் சிந்தனை நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 98. முதற்பதிப்பு – 2008 |
| ஞானசம்பந்தன்.அ.ச. | இலக்கியக்கலை, திருவரங்கனார் அச்சகம், சென்னை – 600 013 ஒன்பதாம் பதிப்பு – 1984 |
| ஞானமூர்த்தி.தா.ஏ. | இலக்கிய திறனாய்வியல், கோயமுத்தூர் – 641 078 முதற்பதிப்பு – 1980 |

தண்டபாணி.துரை — குறுந்தொகை தெளிவுரை,
உமா பதிப்பகம் வெளியீடு,
சென்னை – 600 001.
முதற்பதிப்பு – 2001.

தண்டாயுதம்.இரா. — தமிழ் சிறுகதை முன்னோடிகள்
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை – 5
முதற்பதிப்பு – 1972.

தமிழண்ணல் — சங்க இலக்கிய ஒப்பீடு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை – 1.
முதற்பதிப்பு – 1985.

தனுஷ்கோடி ராமசாமி — தனுஷ்கோடி ராமசாமி சிறுகதைகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை – 98
முதற்பதிப்பு – 2008

தாசன்.என்.ஆர். — கு.அழகிரிசாமி எழுத்துக்கள்,
வானதி பதிப்பகம்,
சென்னை – 17.
முதற்பதிப்பு – 1987.

தாயம்மாள் அறவாணன் — தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 13.
முதற்பதிப்பு – 1999.

திருநாவுக்கரசு.க.த. — வாழ்வும் இலக்கியமும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை – 86
முதற்பதிப்பு – 1981

திருநாவுக்கரசு.க.த. — மு.வரதராசனாரின்
படைப்பிலக்கியம்,
பாரி நிலையம்,
சென்னை – 600 108
முதற்பதிப்பு – 1984

திருமலை.ம. — தமிழ்ச் சிறுகதை நேற்றும் இன்றும் தொகுதி–3
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை – 600 005.
முதற்பதிப்பு – 2001.

தேவராசன்.கோ. — பெண்களும் சமூகமும் அன்றும் இன்றும்,
அமிழ்தம் பதிப்பகம்,
சென்னை – 600 017.
முதற்பதிப்பு – 2003

நடராசன்.தி.சு. — திறனாய்வுக்கலை
சொந்தம் பிரிண்டர்ஸ்,
சென்னை – 11
நான்காம்பதிப்பு – 2006.

பரமசிவானந்தம்.அ.மு. — சமுதாயமும் பண்பாடும்
தமிழ்க்கலைப் பதிப்பகம்,
சென்னை – 30
இரண்டாம் பதிப்பு – 1972.

| | |
|---|---|
| பாரதியார் | மகாகவி பாரதியார் கவிதைகள்,<br>திருநெல்வேலி,<br>தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்<br>கழகம் லிட்.,<br>சென்னை – 18.<br>முதற்பதிப்பு – 1998. |
| பாஸ்கதாஸ், ஈ.கோ., | மானிட மதிப்புகள்,<br>திருநெல்வேலி தென்னிந்திய<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக (பி) லிட்.,<br>சென்னை – 18.<br>முதற்பதிப்பு – 1978. |
| பிச்சமுத்து.ந., | திறனாய்வும் தமிழ் இலக்கிய கொள்கைகளும்,<br>சக்தி வெளியீடு,<br>சென்னை – 5.<br>முதற்பதிப்பு – 1998. |
| பிரபஞ்சன் | பெண்மை வெல்க<br>கவிதா பப்ளிகேஷன்,<br>சென்னை – 600 017<br>முதற்பதிப்பு – 1999. |
| பிரேமா.இரா. | பெண்ணியம் அணுகுமுறைகள்,<br>தமிழ் புத்தகாலயம்,<br>சென்னை – 600 017<br>முதற்பதிப்பு – 1998. |

பிரேமா.இரா. பெண் மரபிலும் இலக்கியத்திலும்
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை – 17.
முதற்பதிப்பு – 2001.

புவனேஸ்வரி,சு., திலகவதி படைப்புகள் ஓர் ஆய்வு,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை – 14.
முதற்பதிப்பு – 2001.

பேராசிரியர் (உ.ஆ.) தொல்காப்பியம் கழக வெளியீடு,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 1.
முதற்பதிப்பு – 1951.

மங்கையற்கரசி இலக்கிய வீதியிலே,
ராஜேஸ்வரி புத்தக நிலையம்,
சென்னை – 5.
முதற்பதிப்பு – 1999.

மாணிக்கம்.வ.சு.ப. இலக்கிய சாறு
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 108.
முதற்பதிப்பு – 2001.

மாணிக்கம்,அ. நன்னூல் காண்டிகையுரை (எளிய உரை),
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை – 600 108.
ஐந்தாம் பதிப்பு – 2008.

| | |
|---|---|
| மாணிக்கவாசகன்.ஞா. (ப.ஆ.) | புறநானூறு மூலமும் உரையும்,<br>உமா பதிப்பகம்,<br>சென்னை – 600 001<br>இரண்டாம் பதிப்பு – 2005. |
| மாதவன்.சிவ. | பிரபஞ்சன் படைப்புகள் பன்முகப் பார்வை<br>கிரியசாயி பதிப்பகம்,<br>புதுச்சேரி – 605 001.<br>முதற்பதிப்பு – 2007. |
| மீனாகுமாரி.க. | ந.பிச்சமூர்த்தி ஆய்வடங்கல்<br>பிரியா பிரிண்டர்ஸ்,<br>தென்காசி – 623 818.<br>முதற்பதிப்பு – 1982. |
| மீனாட்சி முருகரத்னம் | கல்கியின் சிறுகதைக்கலை<br>சர்வோதய இலக்கிய பண்ணை,<br>மதுரை – 625 001<br>முதற்பதிப்பு – 1976. |
| முருகரத்தினம்.தீ. | புதுமைப்பித்தன சிறுகதைக்கலை,<br>சர்வோதயா இலக்கியப் பண்ணை,<br>மதுரை.<br>முதற்பதிப்பு – 1976 |
| முல்லை முத்தையா | தமிழர் வாழ்வியல்<br>கற்பகம் அச்சகம்,<br>சென்னை – 600 002<br>இரண்டாம் பதிப்பு – 1981. |

| | |
|---|---|
| மோகன்.இரா. | டாக்டர் மு.வ.வின் நாவல்கள்<br>சர்வோதயா இலக்கியப்பண்ணை,<br>மதுரை – 1<br>முதற்பதிப்பு – 1972 |
| ராதாகிருஷ்ணன்.வி. | உலக வரலாற்றில் பெண்கள்<br>ரோஸலிண்ட் மைல்ஸ்,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை – 600 098<br>இரண்டாம் பதிப்பு – 2002. |
| ராஜம்.எஸ். (ப.ஆ.) | நற்றிணை,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>சென்னை – 600 018.<br>முதற்பதிப்பு – 1957. |
| லியோடால்ஸ்டாய் | ஞானக்களஞ்சியம்,<br>சர்வோதய இலக்கியப் பண்ணை,<br>மதுரை – 625 001,<br>முதற்பதிப்பு – 1991. |
| வரதராசன்.மு. | இலக்கிய மரபு<br>பாரி நிலையம்,<br>சென்னை – 600 108<br>இரண்டாம் பதிப்பு – 1968 |
| வரதராசன்.மு. | நாட்டுப்பற்று,<br>பாரி நிலையம்,<br>சென்னை – 600 108<br>முதற்பதிப்பு – 1956. |

| | |
|---|---|
| வாஸந்தி. | *வாஸந்தி சிறுகதைகள்,*<br>*வானதி பதிப்பகம்,*<br>*சென்னை – 17*<br>*முதற்பதிப்பு – 2005* |
| வேங்கடராமன்.சு. | *தமிழ் சிறுகதைகள் அன்றும் இன்றும்*<br>*தாகம் பதிப்பகம்,*<br>*சென்னை – 600 017*<br>*முதற்பதிப்பு – 1993* |
| வேங்கடராமன்.சு. | *அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு*<br>*தமிழ்ப் புத்தகாலயம்,*<br>*சென்னை – 5*<br>*முதற்பதிப்பு – 1977.* |
| ஜெகாதா | *ஜெகாதா சிறுகதைகள்,*<br>*செண்பகா பதிப்பகம்,*<br>*சென்னை – 17.*<br>*முதற்பதிப்பு – 2006* |

**ஆய்வேடுகள்**


அங்கையற்கண்ணி.மு. — புதுமை பித்தன் சிறுகதைகளில் மொழிநடை,
மதுரை காமராசர் பல்கலக்காகம்,
எம்ஃபில் பட்ட ஆய்வேடு,
மதுரை 1989 – 1990

அன்புச்செல்வி.மு. — சங்க இலக்கியப் பெண்களால் வெளிப்படும்
மனிதநேய உறவுகள்,
தமிழ் உயராய்வு மையம்,
தமிழவேள் உமாமகேசுவரர் கரந்தைக்கல்லூரி,
முனைவர்பட்ட ஆய்வேடு,
தஞ்சாவூர் – 613 002.

மகேஸ்வரி.செ. — பிரபஞ்சன் சிறுகதைகளில் ஆண் பெண்
உறவு முறைகள்,
மனோன்மணியம் சுந்தரனார்
பல்கலைக் கழகம்,
தமிழாய்வு மையம்,
ஏ.பி.சி. மகாலெட்சுமி மகளிர் கல்லூரி,
தூத்துக்குடி – 628 002.
ஆகஸ்ட் – 2011.

டான்ஸ்டோனி.த — வண்ணதாசன் சிறுகதைகளில்
மனிதநேயச் சித்தரிப்பு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
முனைவர்பட்ட ஆய்வேடு,
திருச்சி – 17
ஏப்ரல் – 2011

**இதழ்**

குருநாதன்.இரா. — கரந்தை மலர்,
மருதம் பதிப்பகம்,
கரந்தை தமிழ்ச் சங்கம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு – 2002.

**கருத்தரங்கக் கட்டுரைகள்**

அகிலன் (ப.ஆ.) — எனது நாவல்களில் சமுதாயச் செய்தி,
ஐந்திணை பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு – 1985.

அரங்கமல்லிகா (ப.ஆ.) — தமிழ்ச் சிறுகதைகளில் பெண்ணியம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை – 98.

அரங்கமல்லிகா (ப.ஆ.) — பெண்ணும் பெண்ணும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை – 98.

| | |
|---|---|
| அலிபாவா.உ.<br>இராஜராஜன்.இரா.<br>(ப.ஆ.) | செவ்வியல் தமிழ்,<br>வளர்தமிழ் பதிப்பகம்,<br>21, முதல் தளம்,<br>செய்யது சாகிப் தெரு,<br>காஜா நகர்,<br>திருச்சிராப்பள்ளி – 620 020.<br>பதிப்பு – ஜீன் 2010. |
| அழகுமலை.சு.<br>குருசாமி.ஞா.<br>அன்புராணி.செ.<br>(ப.ஆ.) | இலக்கியங்களில் மரபும் புதுமையும்,<br>தமிழ் ஆய்வாளர் மன்றம்<br>மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,<br>மதுரை.<br>முதற்பதிப்பு – ஜனவரி 2011. |
| கிருஷ்ணமூர்த்தி.ச.<br>நிர்மலாதேவி.சு.<br>(ப.ஆ.) | தமிழிலக்கியத்தில் மனிதநேயம்,<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவன்,<br>இரண்டாம் முதன்மைச்சாலை,<br>மையத்தொழில் நுட்ப பயிலக வளாகம்,<br>தரமணி, சென்னை – 600 113. |
| பழனிச்சாமி.செ.<br>ஆறுமுகம்.பெ.<br>(ப.ஆ.) | சிந்தனைக் கவிஞர் கவிதாசன்<br>படைப்பிலக்கியம்,<br>பன்முக ஆய்வு தொகுதி–2,<br>குமரன் பதிப்பகம்,<br>19, கண்ணதாசன் சாலை,<br>தி.நகர்,<br>சென்னை – 600 017<br>முதற்பதிப்பு – டிசம்பர் – 2008. |

| | |
|---|---|
| பிருந்தாவதி.இர. | முல்லை |
| மிதிலா.இரெ. | கருத்தரங்க கட்டுரைகள் தொகுப்பு, |
| மோகன்குமார்.நா. | தமிழ்மண் பதிப்பகம், |
| (ப.ஆ.) | 2, சிங்காரவேலர் தெரு, |
| | தியாகராயர் நகர், |
| | சென்னை – 600 017. |
| | முதற்பதிப்பு – 2006. |
| பிரேமா.இரா. (ப.ஆ.) | பெண் விடுதலையும் பெண்ணுரிமையும் |
| | அறிவுப் பதிப்பகம், |
| | 142/17, ஜானி ஜான் கான் ரோடு, |
| | இராயப்பேட்டை, |
| | சென்னை – 14. |
| | முதற்பதிப்பு – ஜனவரி 2008. |

**களஞ்சியம்**

| | |
|---|---|
| கலைக்களஞ்சியம் | தொகுதிட ஐந்து,<br>தமிழ் வளர்ச்சிக் கழகம்,<br>சென்னை – *1956* |
| கோவேந்தன்.த (தொ.ஆ.) | திருமகள் தமிழ்க் கையகராதி,<br>திருமகள் நிலையம்,<br>சென்னை – *17.*<br>முதற்பதிப்பு – *1995.* |
| தமிழ்ப்பேரகராதி | சென்னைப் பல்கலைக்கழகம்,<br>சென்னை.<br>முதற்பதிப்பு *1937* |

**ஆங்கில நூல்கள்**

| | |
|---|---|
| 1. Abrams. M.H. | A Glossary of Literary Terms,<br>Holt and Rinchart and winston,<br>Newyork,<br>1971. |
| 2. District, R.F. &<br>Sundell. R.M. | The Art of Fiction,<br>Holt, Rinehort and winston,<br>Newyork,<br>1974. |
| 3. Murdock. G.P. | Social Structure,<br>Newyork,<br>1949. |

# பின்னிணைப்பு

பிரபஞ்சன் சிறுகதைத் தொகுதி ஒன்றில் அமைந்த தொன்னூறு சிறுகதைகளுள் வாழ்வியல் நெறிகளை வெளிப்படுத்துவன (58) ஐம்பத்தி எட்டு. அவை,

1. ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்
2. பிரும்மம்
3. ஒரு பகல் நேர நாடகம்
4. பலி
5. மீன்
6. சலிப்பு
7. தலை சாய்க்க
8. சங்கம்
9. பூக்களை மிதிக்கக்கூடாது
10. பிம்பம்
11. பகை
12. சூரியனைப் பார்க்காமல்
13. விழுது
14. மாமன் உறவு
15. ஆண் பிள்ளை
16. சைக்கிள்
17. அப்பாவு கணக்கில் 35 ரூபாய்
18. குழந்தைகள்

19. வீடு

20. கருணையினால் தான்

21. அரி என்கிற நண்பன்

22. நிகழ் உலகம்

23. இராஜகோபுரமும் சங்கப் பலகையும்

24. மாறுதல்கள்

25. சுமதிக்கு ஒரு கடிதம்

26. நேற்று மனிதர்கள்

27. ராட்சஸக் குழந்தை

28. தட்சணை

29. அப்பாவின் வேஷ்டி

30. தந்தையும் மகனும்

31. அடி

32. பாதுகை

33. யாரும் படிக்காத கடிதம்

34. கேசவன் கல்யாணத்தின் போது

35. கருப்பட்டி

36. சினேகம்

37. தியாகி

38. அன்னை இட்டதீ

39. சொந்த ஊர்

40. அபஸ்வரம்

41. தோழமை என்பது

42. பங்காளிகள்

43. அந்த மனிதர்

44. அமரத்துவம்

45. பிறை

46. ஒரு நெகட்டிவ் அப்ரோச்

47. ஆகஸ்ட் 15

48. சிறுமை கண்டு

49. பப்பா

50. ஒரு ஏழை நாடும் பரம ஏழையும்

51. சிக்கி

52. குமாரசாமியின் பகல் பொழுது

53. வர்க்கம்

54. மனுசி

55. மரி என்கிற ஆட்டுக்குட்டி

56. சிக்கன் பிரியாணியும் சீதேவி படமும்

57. காலகண்டன்

58. திரை

